ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம

# திருவாய்மொழி - பன்னீராயிரப்படி
# உரையும் தமிழாக்கமும்

## (இரண்டாம் பத்து)

நம்மாழ்வார் – ஆழ்வார்திருநகரி

ஸ்ரீ உ.வே டாக்டர் மாடபூசி வரதராஜன் ஸ்வாமி, திருப்பதி

APRIL 2009



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வார்
அருளிச்செய்த

# திருவாய்மொழிக்கு

அன்போடு

## வாதிகேசரி அழகியமணவாளச்சீயர்

பின்போரும் கற்றறிந்து பேசுகைக்காக
தம்பெரிய போதமுடன் அருளிச்செய்த

## பன்னீராயிரப்படி உரையும்

ஸ்ரீமான் உ.வே.டாக்டர் மாடபூசி வரதராஜன் ஸ்வாமி
(திருப்பதி)
எழுதிய

## தமிழாக்கமும்

## இரண்டாம் பத்து

விரோதி வருஷம், சித்திரை திருவோணம்,
ஏப்ரல், 18, 2009 வெளியீடு

ஸ்ரீ அனந்த் பதிப்பகம், திருப்பதி 517503.

Tiruvoymozhi Panneerayira-p-padi Uraiyum Tamizhakkamum (Irandam Pattu)

by

Sri U.Ve.Dr.Madabhooshi Varadarajan Swami, MA, Ph.D.

First Edition: April 2009
No.of Copies: 1000


Price: Rs.120.00
(Postage Extra)

---

THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF TIRUMALA TIRUPATI DEVASTHANAMS UNDER THEIR SCHEME 'AID TO PUBLISH RELIGIOUS BOOKS'.

---

Copies can be had from:

Dr.M.Varadarajan
Sri Ananth Publications
6-40 Padmavatipuram
Tiruchanur Road
TIRUPATI 517503
Andhra Pradesh
Ph: 0877- 2238826

Dr.M. Varadarajan
'Bhaktamruta'
F-10, Ruby Builders
9 & 10, 1st Cross Main Road
Krishna Nagar
Crompet, Chennai 600044.
Ph: 044- 22233550.

---

Printed At:
M/s.RNR Printers & Publishers
19, Thandavarayan Street
Triplicane
Chennai 600005. ph:28447071.

ஸ்ரீ:

# பொருளடக்கம்



@@@@@@@@@



திருவேங்கடமுடையான் - திருமலை

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முன்னுரை

அன்போ(டு) அழகிய மணவாளச் சீயர்
பின்போரும் கற்றறிந்து பேசுகைக்கா- தம்பெரிய
போதமுடன் மாறன் மறையின் பொருளுரைத்த(து)
ஏதமில்பன் னீராயிரம்.

திருமகள் கேள்வனாம் திருமாலின் அருள் பெற்றவர்கள் ஆழ்வார்கள். ஆழ்வார்கள் பன்னிருவர் அருளிய பாசுரங்களே திவ்யப்பிரபந்தமாகும். இவ்வாழ்வார்களில் தலையானவர் நம்மாழ்வார் ஆவர். இவர் அருளிய பிரபந்தங்கள் - திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி. இவை நான்கும் முறையே ருக், யஜுர், அதர்வண, ஸாம வேத ஸாரமாகும். இவற்றுள் ஸாமவேத ஸாரமாய், 1102 பாசுரங்கள் அடங்கியதாய்ப் பத்துப்பத்துக்கள் கொண்டதான திருவாய் மொழிக்கு இராமாநுசர் காலம் தொடங்கி ஐந்து வியாக்கியானங்கள் இடப்பட்டுள்ளன. அவை திருக்குருகைப்பிரான் பிள்ளான் எழுதிய ஆறாயிரப்படி, நஞ்சீயர் எழுதிய ஒன்பதினாயிரப்படி, பெரிய வாச்சான்பிள்ளை எழுதிய இருபத்துநாலாயிரப்படி, வடக்குத் திருவீதிப் பிள்ளை பட்டோலை கொண்ட நம்பிள்ளை செப்பு நெறியான முப்பத்தாறாயிரப்படி, வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயர் இயற்றிய பன்னீராயிரப்படி என்பனவாகும். படி என்பது ஒற்றெழுத்து நீங்கலாக முப்பத்திரண்டு உயிர்மெய் எழுத்துக்களைக் கொண்டதாகும். அந்த வகையில் மணிப் பிரவாள நடையில் அமைந்த பன்னீராயிரப்படி சிறந்து விளங்குகிறது.

சீயரது உரையானது மற்ற உரைகளின் பொருள்களை அறிவதற்குத் துணையாகவும், ஆழ்வாரின் பாசுரப்பொருள் அறியச்சிறப்பாகவும் அமைந்ததாகும்.

மணிப்பிரவாள நடையிலுள்ள வைணவ உரைகளை முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டுத்தெளிவு பிறக்க வேணும் என்ற வரம்புள்ளதால், இவ்வியாக்யானத்தை வடமொழி தமிழ்மொழி ஆகிய இருமொழிப்புலமை நிரம்பிய அடியேனுடைய ஸமாச்ரயண ஆசார்யரும், திருப்பதி எஸ்.வி. ஓரியெண்டல் காலேஜில் நியாய விபாகத்தலைமை பேராசிரியராயிருந்து ஓய்வு பெற்றவருமான ஸ்ரீமான் உ.வே. திருப்பதி நியாயவேதாந்த வித்வான் ஸ்ரீ வைஷ்ணவ ஸிம்மம் திருமலை அனந்தாண்பிள்ளை .கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி யிடம் நான்கு ஆண்டுகள் (22-3-1983 தொடங்கி 18-4-1987) வரை திருவாய்மொழி - பன்னீராயிரப்படியை வரியடைவே கற்றேன். நாள்தோறும் பின்மாலையில் தான் காலக்ஷேபம் நடைபெறும். பங்க்திகளைப் படித்து, பதவிபாகம் செய்து, வியாக்யானத்தொடர் விசேஷங்களை எடுத்துச்சொல்லி, மேற்கோள் தொடர்களை விரித்துப்பொருள் கூறி, தாம் பெற்ற அநுபவங்களையும், சீயரின் சீரிய எண்ணத்தையும், அவர்வழி இறைவன் ஆழ்வார்களின் உள்ளக் கிடக்கையையும் எடுத்துக் காட்டி உரைப்பர். வடமொழி தமிழ்மொழி மற்றும் இலக்கணக் குறிப்புக்கள் பாடலில் வருமிடந்தோறும் தவறாமல் எடுத்துக் காட்டுவர். நடுவில் தாம் பெரியோரிடம் கேட்ட கருத்துக் களையும் குறிப்பிடுவர். மற்றை வியாக்யான விசேஷங்களையும் ஆங்காங்கே சுட்டிக்காட்டத்தவறவில்லை. அடியேனும் தவறாமல் குறிப்புக்களை அவ்வப்போது குறித்துக் கொண்டு அவற்றை யெல்லாம் செம்மைசெய்து பத்துப் பத்துக்களுக்கும் தமிழில் மொழி பெயர்த்து வைத்துள்ளேன். இரண்டாம் பத்து 11.6.1983 முதல் 27.8.1983 வரை காலக்ஷேபமாகக் கேட்கப்பட்டது. பல பெரியோர்களின் விருப்பத்துக்கு இணங்க அப்போது எழுந்தருளியிருந்த அடியேனுடைய ஆசார்யரான ஸ்ரீ உ.வே.ஸ்வாமியின் அனுமதியும் ஆசியும் கொண்டு TTD ஸப்தகிரி தமிழ் மாத இதழில் திருவாய்மொழி தெளிவுரை (பன்னீராயிரப்படி) என்ற தலைப்பில் தொடர் நூலாக ஜூன் 2004 தொடங்கி இன்று வரை வெளிவந்து கொண்டிருக்கிறது. இதில் இரண்டாம் பத்து

ஜூன் 2005 தொடங்கி மே 2006 வரை வெளிவந்துள்ளது. இதனைப் புத்தகமாக வெளியிட வேண்டும் என்று பல வாசகர்களின் வேண்டுகோளுக்கு இணங்க '**திருவாய்மொழி பன்னீராயிரப்படி உரையும் தமிழாக்கமும் முதல் பத்து**' என்ற நூல் அடியேனுடைய ஷஷ்டியப்தபூர்த்தி (ஸர்வதாரி வருஷம் ஆவணி மாதம் பூராடம் நக்ஷத்ரம் 10.9.2008) அன்று ஸ்ரீபெரும்பூதூரில் வெளியிடப்பட்டது. அதன் தொடர்ச்சியாக இப்போது இரண்டாம் பத்து அடியேனுடைய திருத்தகப்பனார் ஸ்ரீ உ.வே. உழையூர் மாடபூசி வீரராகவாசார்ய ஸ்வாமியின் தொண்ணூறாவது ஆண்டு நிறைவை (விரோதி வருஷம் சித்திரை ச்ரவணம் நக்ஷத்ரம் 18.4.2009) முன்னிட்டு வெளியிட இருக்கிறது. மணிப்பிரவாள உரைகள் அருகிவரும் காலத்தில் ப்ரமாண ரக்ஷணம் என்ற வகையில் இந்நூலில் மூலத்தையும் அச்சிட்டு அதற்குரிய தமிழாக்கத்தையும் அடியேனுடைய ஆசார்ய ஸ்வாமியிடம் கேட்டபடியே காட்டியுள்ளேன். படிப்போர்க்கு உறுதுணையாக ஒவ்வொரு பக்கத்திலும் மணிப்பிரவாள உரையும் அதற்குரிய தமிழாக்கமும் அமைந்துள்ளமை காணலாம். மேலும் ஸ்ரீ உ.வே. ஸ்வாமி ஸாதித்த விசேஷ இலக்கணக் குறிப்புகளும், சிறப்பான பொருள்களும் முறையே இலக்கணக்குறிப்பு, குறிப்பு என்ற வகையில் அமைந்துள்ளமை காணலாம். விஷய ஸூசிகையில் ஒவ்வொரு பக்கத்திலுள்ள பொருளின் கருத்து தரப்பட்டுள்ளது. பொருளல்லாத அடியேனைப் பொருளாக்கி ஸத்தை பெறச் செய்த ஸ்வாமிக்கு இந்நூலைக் காணிக்கையாக ஸமர்ப்பிக்கிறேன்.

இந்நூலுக்குப் பயன்பட்ட வெளியீடுகள் பின்வருமாறு:

1. திருவேங்கடாசார்யர், புதுப்பட்டு (ப.ஆ.), திருவாய்மொழி ஆறாயிரப்படி, பன்னீராயிரப்படி உரை, ஈடு அவதாரிகைகள் (7 பகுதிகள்), ஸ்ரீநிகேதன முத்ராக்ஷர சாலை, சென்னை, குரோதன வருடம் 1925-26.

2. கிருஷ்ணமாசாரியார், சே. (ப.ஆ), பகவத் விஷயம் (10 பகுதிகள்), நோபில் அச்சுக்கூடம், சென்னை, 1926.
3. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி, S, (ப.ஆ) திருவாய்மொழி பகவத் விஷயம் முதல் பத்து முதலிரண்டு திருவாய்மொழிகள், ராக்ஷஸ வருடம், 1976.
4. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி, S, (ப.ஆ) திருவாய்மொழி பகவத் விஷயம் முதல் பத்து 3-10 திருவாய்மொழிகள், நள வருடம், 1977.

இந்நூலைச் செம்மையாகச் செய்ய ஸ்ரீஸுதர்சனர் பதிப்புக்கள் பெரிதும் வழிவகுத்தன. ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம் ஆசிரியர் ஸ்ரீமான் உ.வே. S.கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி திருவடியில் அடியேன் ப்ரணாமங்களைத் தெரிவிக்கிறேன்.

இந்நூலில் தமிழாக்கப்பகுதியையும் பாசுரத்தையும் கணினியில் ஏடுபடுத்தி, தானும் ஸத்தை பெற அயராது உழைத்த அடியேனுடைய தர்மபத்னி ஸ்ரீமதி குமுதா வரதராஜனுக்கு என் மனமார்ந்த ஆசி வழங்குகிறேன். அதே சமயத்தில் கணினியின் நுணுக்க முறைகளைச் சொல்லி செம்மைபடுத்திய திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் பணிபுரியும் திரு. ராகவேந்திரராவ் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவிக்கிறேன்.

பன்னீராயிப்படி உரையின் 10 பகுதிகளையும் அடியேனுடைய தமிழாக்கத்தோடு தன் பெறாப்பேறாக வெளிக் கொணர வேண்டும் என்ற அவாவின் முதற்பணியாக முனைப்புடன் செயலாற்றி, தக்க ஆலோசனை கொடுத்து முதல் பத்தை வெளியிட்டது போல இந்நூலை பதிப்பிக்க முன்வந்த அடியோங்களுடைய திருக்குமாரன் சிரஞ்சீவி மாடபூசி அனந்தன் மற்றும் அவனுடைய மனைவியார் திருமதி வைஜயந்தி அநந்த் ஆகியோர் ஸகல ஸம்பத்துடன் வாழ்ந்து மேலும் பல ஸம்பிரதாய பணிகளைச்செய்வனே செய்ய திருவேங்கடவனைவேண்டுகிறேன்.

இந்நூலுக்கு நிதி வழங்கிய திருமலை திருப்பதி தேவஸ்தான அதிகாரிகள், ஸப்தகிரி மாத இதழ் ஆசிரியர், துணை ஆசிரியர் Dr.V.G.சொக்கலிங்கம் அவர்கள், மற்றும் இந்நூலை பரிசீலனை செய்த அறிஞர்கள் ஆகியோர்க்கு அடியேனுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்கிறேன்.

இந்நூலை மிகவும் அழகான முறையில் அச்சிட்ட தெய்வப்பணிச்செம்மல் Sri G. Rajan. (RNR Printers & Publishers, Triplkicane, Chenna) அவர்களுக்கு மிகுந்த நன்றியைத் தெரிவிக்கிறேன்.

இந்நூலின் கண் அடியேனுடைய அறியாமையால் ஏற்பட்ட சொற்குற்றம், பொருள் குற்றங்களைப் பொறுத்து, திருத்திப் பணிகொள்ள வேண்டுகிறேன்.

ஸ்ரீ வேங்கடேச கருணா கலிதாபிஷேக
ஸ்ரீ யாமுநார்ய குருவர்ய க்ருபாத்தபோதம் ।
ஸ்ரீ க்ருஷ்ணஸூரி பதபங்கஜ ப்ருங்கராஜம்
ஸ்ரீ க்ருஷ்ணபாதமனகம் ஸததம் நமாமி ॥

திருப்பதி, 14.4.2009 — மதுரகவி தாஸன்
விரோதி வருஷம்
சித்திரை திருவோணம் — மா., வரதராஜன்

********************************

# இரண்டாம் பத்து விஷயஸூசிகை

@@@@@@@@@@@@@@@@@@

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# இரண்டாம் பத்து - ப்ரவேசம்

இரண்டாம்பத்தில் - இப்படி பரத்வாதி குணங்களாலே பரமசேஷியான ஸர்வேச்வரனுடைய ஸர்வரக்ஷகத்வ ப்ரயுக்தமான உபாயத்வத்தை ப்ரதிபாதித்து, அநந்தரம் இப்பத்தாலே உபேயத்வோபயுக்தமான அவனுடைய நிரதிசய போக்யதையை அருளிச்செய்வதாக அந்த போக்யதாதிசய ஸூசகமான அல்பகால விச்லேஷத்திலும் அதிக்லேசா வஹத்வத்தையும், ஆச்சர்யரூபமான உத்துங்க லலிதத்வத்தையும், 'ஸர்வஸாரஸ்ய ஸமவாயரூப திவ்ய போக்யதையையும், போகாலாபத்தில் வந்த ஆர்த்தியைப் போக்கி ரக்ஷிப்பான் அவனே' என்னுமிடத்தையும், ஆர்த்தி

---

# இரண்டாம் பத்து - அவதாரிகை

இரண்டாம் பத்தில் - இப்படி மேன்மை முதலான குணங்களாலே உயர்ந்த தலைவனான எம்பெருமானுடைய அனைவரையும் காக்கும் தன்மையால் உண்டான உபாயமாம் தன்மையைத் தெரியப்படுத்தி, பின்னர் இப்பத்தாலே உபாயத்தால் பெறப்படும் தன்மைக்குத் தேவையான அவனுடைய மிக்க இனிமையை அருளிச் செய்வதாக - அந்த இனிமையின் மிகுதியை அறிவிப்பதான சிறிது காலம் பிரிந்தாலும் மிக்க வருத்தத்தை விளைவிக்கும் தன்மையையும், வியப்பான உயர்த்தியோடு கூடிய அழகாம் தன்மையையும், எல்லாப் பொருள்களின் சுவையினுடைய சேர்க்கையாகிற உயர்ந்த இனிமையையும், 'அநுபவம் கிடையாமையால் வந்த வருத்தத்தைப் போக்கிக் காப்பவன் அவனே' என்னும் விஷயத்தையும், வருத்தம்

தீரும்படி கிட்டினவனுடைய ஹர்ஷகாரிதமான ஸௌந்தர்ய அதிசயத்தையும், ஆச்ரித ஸம்ச்லேஷப்ரீதனுடைய தத்விச்லேஷ பீருத்வத்தையும், ஸம்ச்ரிதஸம்பந்தி குலஸந்தாந பர்யந்த ஸம்ரக்ஷணத்தையும், ரக்ஷணகாஷ்ட்டையான மோக்ஷ ப்ரதத்வத்தையும், மோக்ஷ தாத்பர்யமான பாரதந்த்ர்யத்தையும், போகப்ரதிஸம்பந்திதயா ஸாந்நித்யத்தையும் அருளிச்செய்து போக்யதையை உபபாதித்தருளுகிறார்.

## 2.1 வாயும் திரையுகளும் - ப்ரவேசம்

அதில் முதல் திருவாய்மொழியில் க்ஷணவிளம்பத்திலும் க்லேசாதிசய ஜநகமான ஈச்வரனுடைய போக்யதையை அருளிச்செய்வதாக -

---

தீரும்படி கிட்டி வந்த எம்பெருமானுடைய மகிழ்ச்சியால் உண்டான அழகின் மிகுதியையும், அடியாருடன் கலந்து மகிழ்ச்சியடையும் எம்பெருமான், அவர்கள் பிரிவால் பயப்படும் தன்மையையும், தன்னைச் சரணமடைந்தவர்கள் தொடர்புடையார் குலக்குடி வரையில் காப்பாற்றும் என்னும் விஷயத்தையும், காப்பதில் எல்லையான வீடுபேறு கொடுக்கும் தன்மையையும், வீடுபேற்றின் கருத்தான எம்பெருமான் பக்கலில் வசப்பட்டு இருத்தலையும், கைங்கர்யத்தை ஏற்றுக் கொள்ளுமவனாகக் கிட்டி நிற்கையையும் அருளிச்செய்து எம்பெருமானுடைய மிக்க இனிமையை நிரூபித்துக் காட்டுகிறார்.

## 2.1. வாயும் திரையுகளும் - அவதாரிகை

அதில் முதல் திருவாய்மொழியில் சிறிது கால தாமதத்திலும் மிக்க வருத்தத்தை உண்டுபண்ணுகிற எம்பெருமானுடைய இனிமையை அருளிச்செய்வதாக -

ததுபபாதகமான அவனுடைய ஸ்ரீய:பதித்வத்தையும், சேஷசாயித்வத்தையும், அநிஷ்ட நிவர்த்தகத்வத்தையும், நிவர்த்தந பரிகரவத்வத்தையும், சக்தி யோகத்தையும், ஸத்யவாதித்வத்தையும், ஸம்பந்த விசேஷவத்வத்தையும், காருணிகத்வத்தையும், கமநீய விக்ரஹ யோகத்தையும், காரணத்வத்தையும் அநுஸந்தித்து, ஏவம்வித போக்யபூதனுடைய அல்பகால விளம்பத்தில் ஆற்றாமையாலே அசேஷ பதார்த்தங்களும் தம்மைப்போலே அவனைப்பிரிந்து நோவுபடுகிறனவாக அபிஸந்தி பண்ணும்படி கலங்கின ப்ரகாரத்தை, நாயகனான ஈச்வரனைப் பிரிந்தாள் ஒரு நாயகி, ஸகலபதார்த்தங்களும் தன்னைப் போலே தத்விரஹ து:க்கத்தாலே ஈடுபடுகிறனவாக நினைத்துப் போலிமைக்கு இரங்கியுரைத்த

---

அவற்றை நிரூபித்துக் காட்டுவதான எம்பெருமானுடைய திருமகள் நாயகனாம் தன்மையையும், திருப்பாற்கடலில் பாம்பணையில் துயிலும் தன்மையையும், துன்பங்களைப் போக்கும் தன்மையையும், அப்படிப் போக்குவதற்கு உபகரணமாயிருக்கும் தன்மையையும், ஆற்றலின் சேர்க்கையையும், உண்மையைச் சொல்லும் தன்மையையும், இயற்கையான உறவோடு கூடியிருக்கும் தன்மையையும், கருணையுடைமையையும், விரும்பத்தக்க திருமேனி ஸம்பந்தத்தையும், எல்லாவற்றுக்கும் காரணமாம் தன்மையையும் நினைத்து, இப்படிப்பட்ட இனியனான எம்பெருமானுடைய சிறிது கால தாமதத்தால் ஆற்றாமையாலே எல்லாப் பொருள்களும் தம்மைப் (ஆழ்வாரைப்) போல அவனைப் பிரிந்து வருந்துவதாக நினைத்துக் கலங்கின முறையை, நாயகனான எம்பெருமானைப் பிரிந்த ஒரு நாயகி, எல்லாப் பொருள்களும் தன்னைப் போலே அந்த நாயகனுடைய பிரிவின் காரணத்தால் வருந்துகின்றனவாக நினைத்துப் போலிமைக்கு இரங்கி உரைத்த

பாசுரத்தாலே அருளிச்செய்கிறார். "இது தன்னுடையாறெய்திடு கிளவி" என்பர்.

2.1.1 வாயும் திரையுகளும் கானல் மடநாராய்!
ஆயும் அமருலகும் துஞ்சிலும்நீ துஞ்சாயால்
நோயும் பயலைமையும் மீதூர எம்மேபோல்
நீயும் திருமாலால் நெஞ்சம்கோட் பட்டாயே?

அவ: முதற்பாட்டில் - 'மணியை வானவர் கண்ணனை' என்று - கீழ் ப்ரஸ்துதமான போக்யதாதிசயத்துக்கு வர்த்தகமாயுள்ள லக்ஷ்மீ ஸம்ச்லேஷத்தை அநுஸந்தித்து ஈடுபட்ட நாயகி, கடற்கரைக்கு அருகான தன் உத்யாநத்திலே இருந்ததொரு நாரையைப்பார்த்து, நீயும் அவனாலே நெஞ்சு பறியுண்டாயோ? என்கிறாள்.

மேன்மேலும் கிட்டுகிற திரையிலே அமுக்கி நடப்பதாய், கடற்கரையிலே (உன் நினைவு கைவருந்தனையும்) ஓங்கியிருக்கிற

---

பாசுரத்தாலே அருளிச்செய்கிறார். இது 'தன்னுள் கையாறு எய்திடு கிளவி' என்பர்.

2.1.1. முதற்பாட்டில், 'மணியை வானவர் கண்ணனை' (1.10.11) என்று கீழ்ச்சொன்ன இனிமைக்கு எல்லையான அநுபவத்தை வளர்ப்பதான பிராட்டியோடு கூடியிருத்தலை நினைத்து வருந்தின பராங்குச நாயகி (நம்மாழ்வார்) கடற்கரைக்கு அருகேயுள்ள தன்னுடைய (கானல்) தோட்டத்திலே இருந்த ஒரு நாரையைப் பார்த்து, 'நீயும் எம்பெருமானாலே நெஞ்சு பறிக்கப்பட்டாயோ? என்கிறாள்.

மேன்மேலும் போகிற அலையிலே அமுக்கி நடப்பதாய், கடற்கரையில் உன் நினைவு கிட்டுமளவும் முயலுகிற

நாராய்! (உறக்கமில்லாத) தாயும் (உறங்காமை நித்யமான) தேவலோகமும் உறங்கிலும் நீ உறங்குகிறிலை; ஆதலால் உள்ளே நோவுமுண்டாய் (அதின் கார்யமான) பயலைமையாகிற உடம்பில் வெளுப்பு மேலிட்டுவர (அபிமத விஷயமாய் அகப்பட்ட) எங்களைப் போலே (அதுக்கு அடைவற்றிருக்கிற) நீயும், (ஆஸத்தி மாத்ரமே ஹேதுவாக) ஸ்ரீய:பதியாலே நெஞ்சு பறித்துக் கொள்ளப்பட்டாயே? "ஏ" என்னும் அசை - வினா. இத்தால்- ஸாம்ஸாரிக கல்லோலத்தை மதியாதிருப்பார்க்கு உறங்காமையும் ரூப விபர்யாஸமும் பகவத் விச்லேஷ ஜநிதம் என்றிருக்கை. 1 .

2.1.2. கோட்பட்ட சிந்தையையாய்க் கூர்வாய வன்றிலே!
சேட்பட்ட யாமங்கள் சேரா திரங்குதியால்
ஆட்பட்ட வெம்மேபோல் நீயும் அரவணையான்
தாட்பட்ட தண்டுழாய்த் தாமம்கா முற்றாயே.

---

நாராய்! (உன்னைப் பெண்ணாகப் பெற்றதால்) உறக்கமில்லாத தாயும், உறங்காமை நித்யமாயுள்ள தேவலோகமும் உறங்கினாலும் நீ (நாரை) உறங்குவதில்லை; ஆதலால் உள்ளே நோயும் உண்டாகி, அதின் கார்யமான பசலை நோயுள்ள உடம்பில் வெளுப்பு நிறமும் மேலிட்டுவர, அவனுக்கு விருப்பமான விஷயமாய் ஈடுபட்ட எங்களைப் போலே அதுக்கு உரிமையில்லாதிருக்கிற நீயும் ஆசை மாத்திரமே காரணமாக திருமகள் நாயகனாலே நெஞ்சு பறித்துக் கொள்ளப்பட்டாயே? "ஏ" என்னும் அசை வினா. இத்தால்- பிறவியால் வரும் துன்பமாகிற அலையை மதியாதிருப்பார்க்கு (நாரை) உறங்காமையும் உருவம் மாறுதலும் எம்பெருமான் பிரிவால் உண்டானது என்று ஆழ்வார் நினைவு சொல்லப்பட்டது. குறிப்பு - கானல் - நெய்தல் நிலம். நோயும் பயலைமையும் என்று பிரித்துப்பொருள் கூறியது காண்க. 1

அவ: அநந்தரம், ஓரன்றிலைப்பார்த்து, நீயும் சேஷசாயியான அவன் திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்பட்டாயோ? என்கிறாள்.

பறியுண்ட நெஞ்சை உடையையாய்க்கொண்டு (அந்த ஆர்த்தியடியாக கத்கதமாகையாலே) செறிந்த குரலை யுடைத்தான அன்றிலே! நெடிதான யாமங்கள் சேக்கையிற் சேராதே து:க்கியா நின்றாய். ஆதலால் அடிமைப்பட்ட எங்களைப்போலே (பிரிவாற்றாமை தோற்றியிருக்கிற) நீயும் திருவரவணையைத் தனக்கு நிரூபகமாக உடையவனுடைய திருவடிகளிலே (போகதசையிலே) மிதியுண்ட செவ்வியை யுடைய திருத்துழாய்மாலையை ஆசைப்பட்டாயோ? வாயென்று - வாய்மையாய், குரலைச் சொல்லுகிறது. கூர்தல் - செறிவு. அன்றியே, கூர்த்த வாயென்று - பிரிந்தாரை ஈரும்

---

2.1.2. பின்னர், ஓர் அன்றிலைப் பார்த்து, நீயும் பாம்பணையில் துயிலும் எம்பெருமான் திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்பட்டாயோ? என்கிறாள்.

எம்பெருமானாலே பறியுண்ட மனதை உடையையாய்க் கொண்டு, அந்த வருத்தத்தின் காரணமாக தழதழத்துத் தொடர்ந்த குரலையுடைய அன்றிலே! நீண்டதான யாமங்கள் படுக்கையில் படுத்துக் கொள்ளாமல் வருந்தி நின்றாய்; ஆதலால் அவனுக்கு அடிமைப்பட்ட எங்களைப் போலே பிரிவாற்றாமை தோற்று இருக்கிற நீயும் பாம்பைப் பள்ளியாகக் கொண்டவனுடைய திருவடிகளிலே அநுபவநிலையில் மிதியுண்ட குளிர்ச்சியும் அழகுமுடைய திருத்துழாய் மாலையை ஆசைப்பட்டாயோ? வாயென்று - வாய்மையாய், குரலைச் சொல்லுகிறது. கூர்தல் - செறிவு. அன்றியே, கூர்த்த வாயென்று - பிரிந்தாரை ஈரும்

குரல் என்றுமாம். இத்தால் - ஆர்த்த த்வநியுடையார் அவனைப் பிரிந்து கூப்பிடுகிறார்கள் என்றிருக்கை. 2

2.1.3 காமுற்ற கையரவோ டெல்லே! இராப்பகல்
நீமுற்றக் கண்டுயிலாய் நெஞ்சுருகி யேங்குதியால்
தீமுற்றத் தென்னிலங்கை யூட்டினான் தாள்நயந்த
யாமுற்ற துற்றாயோ? வாழி கனைகடலே!

அவ: அநந்தரம், கத்துகிற கடலைப்பார்த்து, 'விரோதி நிவர்த்தகனான அவனுடைய திருவடிகளை ஆசைப்பட்ட என்னைப்போலானாயோ?" என்று சொல்லுகிறாள்.

காமிக்கப்பட்ட போகங்கள் கைப்படாத இழவோடே கூடினாற்போலே நீ இராப்பகல் முழுக்க கண் உறங்குகிறிலை; அகவாயும் நீராய் (ஏங்கின குரல் இரங்காமல்)

---

குரல் என்றுமாம். இத்தால் வருத்தத்தால் உண்டான குரலையுடையார் எம்பெருமானைப்பிரிந்து கூப்பிடுகிறார்கள் என்று ஆழ்வார் நினைக்கை. குறிப்பு: திருவரவணை - கைங்கர்ய ஸ்ரீ. து:க்கியா நின்றாய் - வடமொழி கலந்து 'ஆநின்று' என்கிற நிகழ்கால இடைநிலை வந்தது. 2

2.1.3. பின்னர், கத்துகிற கடலைப் பார்த்து, 'விரோதியை அழிக்குமவனான எம்பெருமானுடைய திருவடிகளை ஆசைப்பட்ட என்னைப் (ஆழ்வாரைப்) போலானாயோ?" என்று சொல்லுகிறாள்.

நான் ஆசைப்பட்ட அநுபவங்கள் கைப்படாத துன்பத்தோடே சேர்ந்தாற்போலே நீ (கடல்) இராப்பகல் முழுவதும் கண் உறங்குவதில்லை; நெஞ்சும் நீராய் ஏங்கின குரல் இரங்காமல்

முழுக்கக்கூப்பிடா நின்றாய்; ஆதலால், தென்னிலங்கையை முற்றத்தீயூட்டினவன் திருவடிகளை ஆசைப்பட்ட நாங்கள் பட்டது பட்டாயோ? இரைக்கிற கடலே! (உன் க்லேசம் தீர்ந்து) வாழ்வாயாக. எல்லே! என்று - கடலுக்கு ஸம்புத்தியாதல், என்னே! என்னும் வெறுப்பாதல். இத்தால் - மஹத்தையை யுடையார் வாய்விட்டு அலறுவது அவனைப் பிரிந்ததால் என்றிருக்கை. 3

2.1.4 கடலும் மலையும் விசும்பும் துழாய்எம்போல்
சுடர்கொ ளிராப்பகல் துஞ்சாயால் தண் வாடாய்!
அடல்கொள் படையாழி யம்மானைக் காண்பான்நீ
உடலம் நோயுற்றாயோ? ஊழிதோ றூழியே.

அவ: அநந்தரம், "விரோதிநிரஸந பரிகரத்தை உடையவனைக் காண வேணும் என்னும் வ்யஸநத்தை நீ யுற்றனையோ" என்று ஒரு வாடையைப் பார்த்துச் சொல்லுகிறாள்.

---

முழுக்கக் கூப்பிடுகிறாய்; ஆதலால் தென்னிலங்கையை முற்ற தீ யூட்டினவன் திருவடிகளை ஆசைப்பட்ட நாங்கள் பட்டது (அநுபவித்தது) பட்டாயோ? இரைக்கிற கடலே! உன் வருத்தம் தீர்ந்து சுகமாக இருப்பாயாக. 'எல்லே' என்று கடலுக்கு விளியாவது. 'என்னே' என்று வெறுப்பாவது. இத்தால் - மிகவும் பெரியவர்கள் (கடல்) வாய்விட்டு அலறுவது எம்பெருமானைப் பிரிந்ததால் என்று ஆழ்வார் நினைக்கை. குறிப்பு: காமுற்ற-காமுற்றன 'அன்' விகுதி பெறாத வினை யாலணையும் பெயர். ஏங்குதியால்-ஏங்குதி+ஆல் - அசையைச் சொல்லாக்கிப் பொருள் காண்பது. கொண்டு கூடுதல்: காமுற்ற கையறவோடு எல்லே நீ இராப்பகல் முற்றக்கண் துயிலாய், நெஞ்சுருகி ஏங்குதியால், தென்னிலங்கை முற்றத் தீயூட்டினான் தாள் நயந்த யாமுற்றது உற்றாயோ? கனைகடலே வாழி என்று உரை. 3

(ஸந்நிபதித சரீரம்போலே) குளிர்ந்திருக்கிற வாடாய்! கடலும் மலையும் விசும்பும் தடவிக்கொண்டு {अम्भस्यभारे भुवनस्य मध्ये नाकस्य पृष्टे (அம்பஸ்யபாரே புவநஸ்ய மத்யே நாகஸ்ய ப்ருஷ்டே) என்று க்ஷீராப்தியிலும் திருமலையிலும் பரமபதத்திலும் அவனை ஆராய்கிற} எங்களைப்போலே சந்த்ராதித்ய தேஜஸ்ஸுகளை நிரூபகமாகவுடைய இரவும் பகலும் (ஓரிடத்தில் பர்யவஸித்து) உறங்குகிறிலை; ஆதலால் மஹாபாரத யுத்தத்திலே ("ஆயுதமெடேன்" என்று வைத்து) எடுத்த திருவாழியையுடைய ஸர்வேச்வரனை (அந்த பீஷ்மன் கண்டாற் போலே காண நினைத்து (ஸர்வோபகாரகமான) நீ கல்பபேதங்கள் பிறந்து நடந்தாலும் காலமுள்ளதனையும் (அவனை ஒருப்பட்டு) சரீரமுள்ளதனையும் வ்யாப்தமான

---

2.1.4. பின்னர், 'விரோதியை அழிப்பதற்கான ஆயுதத்தை உடையவனைக் காணவேணும் என்னும் துயரை நீ அடைந்தாயோ' என்று ஒரு வாடையைப் பார்த்துச் சொல்லுகிறாள்.

டைபாய்டு சுரம் வந்த உடல் போலே குளிர்ந்திருக்கிற வாடாய்! கடலும் மலையும் விசும்பும் துழாவிக் கொண்டுத் திருப்பாற்கடலிலும் திருமலையிலும் பரமபதத்திலும் அவனை ஆராய்கிற எங்களைப் போலே சந்திர சூரியர்களின் ஒளிகளைச் சிறப்பாகவுடைய இரவும் பகலும் ஓரிடத்தில் நிலைத்து நின்று உறங்குகின்றதில்லை; ஆதலால் மகாபாரத யுத்தத்திலே 'ஆயுதமெடேன்' என்று வைத்து, எடுத்த திருவாழியையுடைய எம்பெருமானை அந்த பீஷ்மன் கண்டாற்போலே காண நினைத்து, எல்லோருக்கும் உதவுமவனான நீ (வாடை) கல்பபேதங்கள் பிறந்து நடந்தாலும் காலம் என்ற பொருள் உள்ள அளவும் அவனை ஒருப்பட்டு உடலுள்ள காலமும் பரவியிருக்கிறதான

வ்யாதியைக் கொண்டாயோ? உபகார சீலர்க்கும் உடம்பில் வரும் விகாரங்கள் அவனைக் காணப் பெறாமல் என்று கருத்து.

2.1.5 ஊழிதோ றூழி யுலகுக்கு நீர்கொண்டு
தோழியரும் யாமும் போல் நீராய் நெகிழ்கின்ற
வாழிய வானமே! நீயும் மதுசூதன்
பாழிமையில் பட்டவன்கண் பாசத்தால் நைவாயே.

அவ: அநந்தரம், "நீயும் அவன் சக்தியோகத்திலே அகப்பட்டு சிதிலமாகிறாயோ?" என்று ஒரு மேகத்தைக்கண்டு உரைக்கிறாள்.

(ஸமாநது:க்கைகளான) தோழிமாரும் (து:க்கோத்தரைகளான) நாங்களும் போலே லோகம் நிரம்ப வேண்டும் நீரைக் கொண்டு காலமுள்ளதனையும் ஜலமயமாய் இற்று

நோயைக் கொண்டாயோ? உதவி செய்பவர்க்கும் உடம்பில் வரும் விகாரங்கள் அவனைக் காணப் பெறாமையால் என்று கருத்து. குறிப்பு - அடல் - யுத்தம். கொண்டு கூட்டுதல்: தண்வாடாய்! கடலும் மலையும் என்று தொடங்கி அடல்கொள் படையாழியம்மானைக் காண்பான் நீ ஊழிதோறூழி உடலம் நோயுற்றாயோ, என்று உரை. 4

2.1.5. பின்னர், "நீயும் அவன் ஆற்றலின் சேர்க்கையிலே ஈடுபட்டுத் தளர்வுற்றாயோ" என்று ஒரு மேகத்தைக் கண்டு உரைக்கிறாள்.

சமானமான துன்பத்தையுடைய தோழிமார்களையும் மிக்க துன்பத்தையுடைய எங்களையும் போலே உலகம் நிரம்ப வேண்டும் நீரைக் கொண்டு காலம் என்ற பொருள் உள்ள அளவும் ஜலமயமாய் நைந்து

விழுகிற மேகமே! உதாரசீலமான நீயும் மதுமர்த்தநனுடைய பெருமிடுக்கிலே அகப்பட்டு அவன்பக்கல் ஸ்நேஹத்தாலே சிதிலமாகிறாயே; இந்த சைதில்யம் தீர்ந்து வாழ்வாயாக. உதார ஸ்வபாவர்க்கு சைதில்யம் பகவத்விரஹஜநிதம் என்கை. 5

2.1.6 நைவாய வெம்மேபோல் நாண்மதியே! நீயிந்நாள்
மைவா னிருளகற்றாய் மாழாந்து தேம்புதியால்
ஐவா யரவணைமே லாழிப் பெருமானார்
மெய்வாச கங்கேட்டுன் மெய்ந்நீர்மை தோற்றாயே?

அவ: அநந்தரம், "எங்களைப்போலே அவன் ஸத்ய வாதித்வத்திலே நீ அகப்பட்டாயோ?" என்று க்ஷீணனான சந்த்ரனைக் குறித்துச் சொல்லுகிறாள்.

---

விழுகிற மேகமே! வண்மைத் தன்மையுடையதான நீயும், மது என்னும் அசுரனை அழித்தவனுடைய பெருமிடுக்கிலே அகப்பட்டு அவன் பக்கல் பாசத்தால் தளர்வுறுகிறாயோ? இந்தத் தளர்ச்சி தீர்ந்து வாழ்வாயாக. வள்ளல் தன்மையுடையார்க்கு தளர்ச்சி எம்பெருமானை விட்டு வந்த பிரிவால் உண்டானது என்கை. நைவாயே-ஏகாரம் ஓகாரப் பொருள். கொண்டு கூட்டுதல்: தோழியரும் யாமும்போல், உலகுக்கு நீர் கொண்டு ஊழிதோறூழி நீராய் நெகிழ்கின்ற வானமே என்று தொடங்கி, வாழிய என்று உரை. 5

2.1.6. பின்னர், 'எங்களைப் போலே அவன் உண்மை பேசும் தன்மையிலே நீ அகப்பட்டாயோ?' என்று ஒருநாள் அளவில் கலையுடையவன் என்ற குறையையுடையனான சந்திரனைக் குறித்துச் சொல்லுகிறாள்.

நைகையே ஸ்வபாவமான எங்களைப் போலே கலாமாத்ரமான சந்திரனே! (தேஜோபமான) நீ இக்காலத்திலே மைபோலேயிருக்கிற ஆகாசத்தில் இருளைப் போக்குகிறிலை; மழுங்கிக் குறையா நின்றாயே; ஆதலால் பொய்மைக்குப் பல முகமும் இரண்டு நாவுமுடைய திருவரவணை மேற்கொண்டு (பொய்க்குப் பெருநிலை நிற்கும்) திருவாழியையுடையராய், இவர்களைப் (பொய் கற்பிக்கும்) பெருமையையுடையவருடைய பெரும் பொய்யான வார்த்தையைக் கேட்டு உன் வடிவில் உஜ்ஜ்வலபாவத்தை இழந்தாயோ? நாண் மதி - புதுமதி. மைவானிருள் - கறுத்த பெரிய இருள் என்றுமாம். மாழாந்து - மழுங்கி. இத்தால் - உஜ்ஜ்வல ஸ்வபாவருடைய ஒளி மழுக்கம் அவனுடைய உக்திவையர்த்ய சங்காவஹமான விளம்பம் என்று கருத்து. 6

---

நைகையே தன்மையான எங்களைப் போலே ஒருநாள் அளவில் கலையோடு கூடிய சந்திரனே! ஒளியையுடைய நீ இக்காலத்திலே மைபோலே இருக்கிற ஆகாயத்தில் இருளைப் போக்குகின்றிலை; மழுங்கிக் குறையாக நின்றாயே; ஆதலால் பொய்மைக்குப் பலமுகமும் இரண்டு நாவுமுடைய திருவனந்தாழ்வானாகிய ஆதிசேஷனை மேற்கொண்டு பொய் சொல்லுவதற்குச் சாட்சியாக நிற்கும் திருவாழியை உடையவராய், இவர்களைப் (ஆதிசேஷன், திருவாழி) பொய் கற்பிக்கும் பெருமையையுடையவருடைய பெரும் பொய்யான வார்த்தையைக் கேட்டு உன் வடிவில் பளபளக்கும் தன்மையை இழந்தாயோ? நாண் மதி - புதுமதி. ஒருகலை. மைவானிருள் - கறுத்த பெரிய இருள் என்றுமாம். மாழாந்து - மழுங்கி. இத்தால் - பளபளப்பான தன்மையரானவருடைய ஒளி மழுக்கம் அவனுடைய வார்த்தை பொய்த்துப் போதல் என்கிற நினைப்பை உண்டு பண்ணுவதான விளம்பம் என்று கருத்து. குறிப்பு -தோற்றாயே - ஏகாரம் ஓகாரப்பொருளில் வந்தது. 6

2.1.7 தோற்றோம் மடநெஞ்ச மெம்பெருமான் நாரணற்கு, எம்
ஆற்றாமை சொல்லி யழுவோமை நீநடுவே
வேற்றோர் வகையில் கொடிதாய் எனையூழி
மாற்றாண்மை நிற்றியோ? வாழி கனையிருளே!

2.1.7 அநந்தரம், 'நிருபாதிக ஸம்பந்தயுக்தனானவனைப் பிரிந்து ஆர்த்தையான என்னை, உன் ஈடுபாட்டைக் காட்டி நலிவதே' என்று இருளைக் கண்டு ஈடுபட்டு உரைக்கிறாள்.

எங்கள் ஸ்வாமியான நாராயணனுக்கு, எங்களுக்கு விதேயமான நெஞ்சை இழந்தோமாய், (அதடியான) எங்கள் ஆற்றாமையை வாய்விட்டுச் சொல்லி அழுகிற எங்களைப்பற்ற நீ (பாத்யபாதக ஸம்பந்தமற்றிருக்க) நடுவே புகுந்து சத்ருக்கள் படியிலும் கொடிதாம்படி காலமுள்ளதனையும் (எங்கள் நோவுக்கு) மறுதலையான ஆளாகையாலே நிலை நிற்கிறாயோ? திணுங்கின இருளே! உன் ஸந்நிதியைக் காட்டி நலியாதே

---

2.1.7. பின்னர், "இயற்கையான உறவோடு கூடியவனைப் பிரிந்து வருந்துகிறவளான என்னை, உன் (இருள்) வருத்தத்தைக் காட்டி நலிவதே!" என்று இருளைக்கண்டு வருந்தி உரைக்கிறாள்.

எங்கள் தலைவனான நாராயணனுக்கு எங்கள் சொல்லைக் கேட்குமதான நெஞ்சை இழந்தோமாய், அது காரணமான எங்கள் ஆற்றாமையை வாய்விட்டுச் சொல்லி அழுகிற எங்களைக் குறித்து நீ வருந்துபவன் - வருத்துபவன் என்ற உறவற்றிருக்க, நடுவே புகுந்து பகைவர்கள் பக்கலிலும் கொடிதாம்படி காலம் என்ற பொருள் உள்ள அளவும் எங்கள் நோவுக்கு மறுதலையான ஆளாகையாலே நிலை நிற்கிறாயோ? நெருங்கின இருளே! உன் இடத்தைக் காட்டி நலியாதே

க்லேசம் தீர்ந்து வாழவேணும். கனையிருள் - திணுங்கின இருள். இவள் நோவுக்கு மறுதலையான ஆளாகையாவது - இருள்தானும் ஈடுபடுகை. இதின் கருகுதல் விரஹத்தாலே என்று நினைத்து, பொறுக்கமாட்டாமல் உரைத்தாளாயிற்று. இத்தால் -தம:ப்ரக்ருதிகளுடைய மாலிந்யமும் ஸர்வேச்வரனைப் பிரிந்து என்றிருக்கை 7

2.1.8 இருளின் திணிவண்ணம் மாநீர்க் கழியே! போய்
மருளுற்றி ராப்பகல் துஞ்சிலும்நீ துஞ்சாயால்
உருளும் சகட முதைத்த பெருமானா
ரருளின் பெருநசையால் ஆழாந்து நொந்தாயே?

அவ: அநந்தரம், 'அவன் காருணிகத்வத்தாலே நசை பண்ணி ஆழங்காற்பட்டாயோ?' என்று கழியைப்பார்த்துக் கலங்கி உரைக்கிறாள்.

---

வருத்தம் தீர்ந்து வாழ வேணும். கனையிருள் - நெருங்கின இருள். இவள் நோவுக்கு மறுதலையான ஆளாகையாவது -இவள் நோவுக்கு இருள்தானும் ஈடுபடுகை. இதின் கருகுதல் பிரிவிலே என்று நினைத்து, பொறுக்கமாட்டாமல் உரைத்தாளாயிற்று. இத்தால் - தமோகுணத்தை இயற்கையாக உடையவர்களுடைய (இருள்) ஒளி மழுங்குதலும் (கறுப்பு) எம்பெருமானைப் பிரிந்ததனால் வந்தது என்று நினைக்கை. கொண்டு கூட்டுதல்: எம்பெருமான் நாரணற்கு மடநெஞ்சம் தோற்றோம்; எம் ஆற்றாமை சொல்லி அழுவோமை நீ நடுவே என்று தொடங்கி, கனை இருளே வாழி என்று உரை. 7

2.1.8 பின்னர், அவன் கருணையாயிருக்கும் தன்மையிலே ஆசை வைத்து ஆழங்கால் பட்டாயோ? என்று கழியைப் பார்த்து கலங்கி உரைக்கிறாள்.

இருளினுடைய செறிந்த நிறத்தையுடைத்தான பெரிய நீரையுடைய கழியே! மிகவும் அறிவுகெட்டு அஹோராத்ர ரூபமான காலமும் முடியிலும் நீ உறங்குகிறிலை; ஆதலால் உருளுதலையுடைத்தான சகடத்தை (திருவடிகளாலே) உதைத்த பெரியவருடைய க்ருபா குணத்திலுண்டான பெரிய ஆசையாலே ஆழங்காற்பட்டு நொந்தாயோ?"மாநீர்" என்றது - கறுத்த நீர் என்றுமாம். இத்தால் ஜல(ட) ப்ருக்ருதிகளும் அவன் க்ருபாகுணத்திலே அகப்பட்டால் கால் தாழ்வர் என்று கருத்து.8

2.1.9 நொந்தாரக் காதல் நோய் மெல்லாவி யுள்ளுலர்த்த
நந்தா விளக்கமே! நீயு மளியத்தாய்
செந்தா மரைத்தடங்கண் செங்கனிவா
யெம்பெருமான்
அந்தாமத் தண்டுழா யாசையால் வேவாயே?

அவ: அநந்தரம், "கமநீயவிக்ரஹனானவனுடைய போக்யதா

---

இருளினுடைய செறிந்த நிறத்தையுடைத்தான பெரிய நீரையுடைய கழியே! மிகவும் அறிவுகெட்டு பகலிரவான காலமும் முடிந்தாலும் நீ உறங்குவதில்லை; ஆதலால் உருளுதலையுடைய வண்டியைத் திருவடிகளாலே உதைத்த பெரியவருடைய கருணை என்னும் குணத்தால் உண்டான பெரிய ஆசையாலே ஆழங்கால் பட்டு நொந்தாயோ? "மாநீர்" என்றது - கறுத்த நீர் என்றுமாம். இத்தால் ஜலமாக இருப்பவர்களும் (அதாவது மிக்க அறிவு கெட்டு உள்ளுள்ளவையெல்லாம் கலங்கினவர்கள்) எம்பெருமான் கருணை என்கிற குணத்திலே ஈடுபாட்டால் வருந்துவர் என்று கருத்து.
குறிப்பு: போய் - மிகவும். 8

2.1.9. பின்னர், 'விரும்பத்தக்க திருமேனியை உடையவனுடைய

சுவைக்கத் தக்க விஷயமான ஆசையாலே வெதும்புகிறாயோ?" என்று ஒரு விளக்கை உரைக்கிறாள்.

ஒன்றாய் வீவற்ற விளக்கே! (இப்படி) விலக்ஷணமான நீயும் ஈடுபட்டிருக்கச்செய்தேயும் ஈடுபடுத்துகிறதால் வயிறு நிறையாத காதலாகிற நோயானது (உன் மேனி போலே) மெல்லிதான ப்ராணனையும் உள்ளே உலர்த்தும்படியாக சிவந்த தாமரைபோன்ற பெரிய கண்களையும் சிவந்த கனி போன்ற வாயையுமுடையனான என் ஸ்வாமியானவனுடைய அழகிய திருத்துழாய் மாலையிலுண்டான ஆசையாலே பரிதபிக்கிறாயோ? "அளியத்தாய்" என்று - 'அருமந்த" என்னுமா போலே நன்மையைக் காட்டுகிறது. இத்தால் - அவன் வடிவழகில் ஆசை தேஜஸ்விகளையும் பரிதபிக்கும் என்கை. 9

திருத்துழாய் விஷயமான ஆசையாலே வருந்துகிறாயோ?' என்று ஒரு விளக்கைக் கண்டு உரைக்கிறாள்.

ஒருபடிப்பட்டு அழிவில்லாத விளக்கே! இப்படி பிரிதொன்றுக் கில்லாச் சிறப்பான நீயும் ஈடுபட்டிருக்கச் செய்தேயும், ஈடுபடுத்துகிறதால் வயிறு நிறையாத-திருப்தியில்லாத காதலாகிற நோயானது (உன் மேனி போலே) மெல்லிதான ப்ராணனையும் உள்ளே உலர்த்தும்படியாகச் சிவந்த தாமரைபோன்ற பெரிய கண்களையும் சிவந்த கனி போன்ற வாயையுமுடையனான என் பெருமானுடைய அழகிய திருத்துழாய் மாலையிலுண்டான ஆசையாலே வருந்து கிறாயோ? "அளியத்தாய்" என்று - 'அருமந்த" என்னுமா போலே நன்மையைக் காட்டுகிறது. இத்தால் - அவன் வடிவழகில் ஆசை ஒளியுடையவர்களையும் (விளக்கு) வருத்தும் என்று நினைக்கை. 9

2.1.10 வேவாரா வேட்கைநோய் மெல்லாவி யுள்ளுலர்த்த
ஓவாதி ராப்பக லுன்பாலே வீழ்த்தொழிந்தாய்
மாவாய் பிளந்து மருதிடைபோய் மண்ணளந்த
மூவா முதல்வா! இனி யெம்மைச் சோரேலே.

அவ: அநந்தரம், இவ்வார்த்தியைக் கண்டு ஸந்நிஹிதனான ஸர்வ காரணபூதனாயுள்ள ஈச்வரனை, 'நீ என்னை நழுவாதொழிய வேணும்' என்று அபேக்ஷிக்கிறார்.

வேவித்து த்ருப்தமாகாத ஆசையாகிற நோயானது (விரஹத்தாலே) பலஹீநமான ஆத்மாவைக் குறுத்துவற்றாக வற்றுவிக்க இராப்பகல் இடைவிடாதே உன் ஸ்வபாவங்களிலே தாழ்ந்து அகப்படும்படி பண்ணினவனாய், (உன்னைக் கிட்டுவார்க்கு விரோதியான கேசியாகிற) குதிரையின் வாயைப் பிளந்து (த்வந்த்வமான) மருது (முறியும்படி) நடுவே போய் (அநந்யார்ஹமாம்படி) பூமியை அளந்துகொண்டு அத்தாலே

---

2.1.10 பின்னர், இத்துன்பத்தைக் கண்டு கிட்டியிருப்பவனாய், எல்லாவற்றுக்கும் முதற்காரணனாயுள்ள எம்பெருமானை, 'நீ என்னை நழுவாதொழியவேணும்' என்று வேண்டுகிறார்.

வெந்து திருப்தியடையாத ஆசையாகிற நோயானது பிரிவாலே வலிமையற்றதான ஆத்மாவை எப்படி வற்றச் செய்யுமோ அப்படி வற்றுவிக்க, இரவும் பகலும் இடைவிடாமல் உன் தன்மைகளிலே தாழ்ந்து ஈடுபடும்படி பண்ணுமவனாய், உன்னைக் கிட்டுவார்க்கு விரோதியான கேசி என்னும் குதிரையின் வாயைப் பிளந்து இரட்டையான மருதமரம் முறியும்படி நடுவே போய், மற்றொருவர்க்கு உரிமையாகாது எம்பெருமானுக்கே உரிமையாம்படி பூமியை அளந்துகொண்டு, அத்தால்

இளகிப்பதித்த ஸர்வகாரணபூதனே! இனி ஒரு காலமும் எங்களை நழுவவிடாதொழிய வேணும். "மூவா முதல்வா" என்றது- நித்ய யெளவந ஸ்வபாவனான உத்பாதகன் என்றுமாம். இத்தால் - தம்முடைய அநிஷ்டங்களைப் போக்கி ஸத்தையை உண்டாக்கினபடியை அநுஸந்தித்தாராயிற்று. இதில் ஏகாரம் தேற்றம். 10

2.1.11 சோராத வெப்பொருட்கு மாதியாம் சோதிக்கே
ஆராத காதல் குருகூர்ச் சடகோபன்
ஓரா யிரம்சொன்ன வவற்றுள் இவைபத்தும்
சோரார் விடார்கண்டீர் வைகுந்தம் திண்ணெனவே.

அவ: அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலம் பரமபதப்ராப்தி என்று அருளிச்செய்கிறார்.

இளகிப் பதித்த எல்லாவற்றுக்கும் முதற்காரணமானவனே! இனி ஒரு காலமும் எங்களை நழுவவிடாதொழிய வேண்டும்.. "மூவா முதல்வா" என்றது- நித்ய இளமையுடையனான உண்டு பண்ணுபவன் என்றுமாம். இத்தால் - தம்முடைய துன்பங்களைப் போக்கி இருப்பை உண்டாக்கினபடியை நினைத்தாராயிற்று. இதில் ஏகாரம் தேற்றம். குறிப்பு - உள் - குருத்துவற்றாக-எப்படி வற்றுமோ அப்படி. கொண்டு கூட்டுதல்: வேவாரா வேட்கை நோய் மெல்லாவி உள்ளுலர்த்த, இராப்பகல் ஓவாதே வீழ்த்து ஒழிந்தாய் என்று தொடங்கி உரை. 10

2.1.11. பின்னர், இத்திருவாய்மொழிக்குப் பயன் வீடுபேற்றை அடைவது என்று அருளிச் செய்கிறார்.

**ஒன்றும் சோராதபடி எல்லாப் பொருளுக்கும் காரண பூதனான பரஞ்ஜ்யோதிச் சப்த வாச்யனுக்கே (ஒரு காலும்) த்ருப்தி பிறவாத அபிநிவேசத்தையுடைய ஆழ்வார் அத்விதீயமான ஆயிரமாகச் சொன்னவற்றுக்குள்ளே (அதிப்ரேம ப்ரகாசகமான) இவை பத்தையும் நழுவ நில்லாதவர்கள் பரமபதத்தை அறுதியாக விடாதவர்கள் கிடீர். 11**

இது - கலி விருத்தம். நாலடித்தாழிசையுமாம்.

வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர் திருவடிகளே சரணம்

---

ஒன்றும் விடாதபடி எல்லாப் பொருள்களுக்கும் காரணனான பரஞ்சோதி என்னும் சொல்லுக்கு பொருளா னவனுக்கே ஒருகாலும் திருப்தி பிறவாத அதிகமான ஆசையையுடைய ஆழ்வார், ஒப்பற்றதான ஆயிரமாகச் சொன்னவற்றுக்குள்ளே மிக்க ஆசையை வெளிப்படுத்துவதான இவை பத்தையும் நழுவ நில்லாதவர்கள் பரமபதத்தை நிச்சயமாக விடாதவர்கள் காண்மின். கொண்டு கூட்டுதல்: சோராத என்று தொடங்கி, வைகுந்தம் திண்ணனவே விடார் கண்டீர் என்று உரை. 11

இது - கலி விருத்தம். நாலடித்தாழிசையுமாம்.

வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர் திருவடிகளே சரணம்.


@@@@@@@@@@@@@@@@

## 2.2. திண்ணன் வீடு ப்ரவேசம்

இரண்டாம் திருவாய்மொழியில் - கீழ் உக்தமான போக்யத் வத்தினுடைய நிரதிசயத்வாபாதகமாய், "மாவாய் பிளந்து" என்று தொடங்கிக் கீழ் ப்ரக்ருதமான ஸௌலப்யத்துக்கும், ஸ்வாமி த்வத்துக்கும் ப்ரகாசகமான மநுஷ்யத்வே பரத்வத்துக்கு உபபாதகமான, அவதாரதசையிலும் அவனுடைய ஸர்வ நிர்வாஹகத்வத்தையும், அநிஷ்டநிவ்ருத்தி இஷ்டப்ராப்தி ஹேதுத்வத்தையும், ஸர்வாதிக த்வத்தையும், ஸர்வப்ரகார ஸமாராத்யதையையும், ஆதிக்ய ஸூசகமான புண்டரீகா க்ஷத்வத்தையும், ஆச்ரித ரக்ஷணார்த்தமான அர்ணவசாயித் வத்தையும், அகடிதகடநா ஸாமர்த்யத்தையும், ஸர்வ ப்ரகார

---

## 2.2. திண்ணன் வீடு அவதாரிகை

இரண்டாம் திருவாய்மொழியில் - கீழ்ச்சொன்ன இனிமையின் மிகுதியை உண்டுபண்ணுவதாய், 'மாவாய் பிளந்து' (2.1.10) என்று தொடங்கிச் கீழ்ச்சொன்ன எளிமைத் தன்மைக்கும் தலைவனாம் தன்மைக்கும் ஒளி செய்வதான மானிடப்பிறவியிலேயே பரம புருஷனின் தன்மையை நிரூபித்துக்காட்டுவதான- அவதார நிலைமையிலும் அவன் தலைவனாயிருந்து மேன்மையைக் காட்டும் தன்மையையும், வெறுப்பானவற்றைப் போக்கி விருப்பமானவற்றைக் கொடுக்கக் காரணமாம் தன்மையையும், எல்லாரையும் விட முதன்மையையும், எல்லா முறையிலும் சமமாக ஆராதிக்கும் தன்மையையும் மேன்மையைக் குறிப்பிடுவதான தாமரைக் கண்ணனாக இருக்கும் தன்மையையும், அடியார்களைக் காக்கும் பொருட்டு கடலில் படுத்துக்கொண்டு கண்வளர்வதையும், பொருந்தாததைப் பொருந்த வைக்கும் ஆற்றலையும், எல்லா முறையாலும்

ரக்ஷகத்வத்தையும், ஜகஜ் ஜந்மாதி ஹேதுத்வத்தையும், ஸர்வ தேவதா ஸமாச்ரயணீ யத்வத்தையும் அருளிச்செய்து, ஸர்வ ஸ்மாத்பரனாய் ஸர்வ ஸுலபனான ஈச்வரனுடைய போக்யத்வ வர்த்தகமான உத்துங்க லலிதத்வத்தை உபபாதிக்கிறார்.

2.2.1 திண்ணன் வீடு முதல் முழுதுமாய்
எண்ணின் மீதிய னெம்பெரு மான்
மண்ணும் விண்ணுமெல் லாமுட னுண்டநம்
கண்ணன் கண்ணல்ல தில்லையோர் கண்ணே.

அவ: முதற்பாட்டில் - க்ருஷ்ணனே ஸர்வநிர்வாஹகன் என்கிறார்.

திண்மையையுடைத்தாய், விலக்ஷணமான மோக்ஷம் முதல் ஸகலப்ரயோஜந நிர்வாஹகனாய், நினைவுக்கு அவ்வருகான அபரிச்சிந்ந ஸ்வபாவனாய், (இம்

---

காப்பவனாம் தன்மையையும், உலகப்படைப்பு முதலானவற்றுக்குக் காரணமாம் தன்மையையும், எல்லா தேவதைகளாலும் சமமாகத் தன்னை அடையும் தன்மையையும் அருளிச்செய்து, எல்லாரைக் காட்டிலும் உயர்ந்தவனாய் எல்லாருக்கும் எளியவனான எம்பெருமானுடைய இனிமையை - அநுபவத்தை வளர்ப்பதான அவதார நிலைமையில் உள்ள மேன்மையை விவரிக்கிறார்.

2.2.1. முதற்பாட்டில்-கண்ணனே அனைத்து நிர்வாகமும் செய்பவன் என்கிறார்.

திண்மையையுடைத்தாய் சிறந்ததான மோக்ஷம் முதல் எல்லாப் பயனுக்கும் பொறுப்பாளனாய், எண்ணுவதற்கு அவ்வருகான எண்ணமுடியாத தன்மையனாய், இம்

மேன்மையைக்காட்டி) என்னை அடிமை கொண்ட ஸ்வாமியாய், பூமியும் ஊர்த்வலோகமும் ஒன்றொழியாமல் (தாரதம்ய மில்லாதபடி) ஏகோத்யோகத்திலே வயிற்றிலே வைத்து நோக்கி க்ருஷ்ணனாய் அவதரித்து நமக்கே தன்னைத்தந்த ஸுலபனே ஜகத்துக்கு நிர்வாஹகன்; அல்லது ஒரு நிர்வாஹகவஸ்து இல்லை. கண் - களைகண். திண்ணன் என்றது - நிச்சிதம் என்றுமாம். 1

2.2.2 ஏ! பா வம்பர மேயே ழுலகும்
ஈ பா வஞ்செய் தருளா லளிப்பாரார்
மாபா வம்விட அரற்குப் பிச்சை பெய்
கோபா லகோ ளரியே றன்றியே.

---

மேன்மையைக்காட்டி என்னை அடிமை கொண்ட தலைவனாய், பூமியும் மேல் உலகங்களும் ஒன்றொழியாமல் உயர்வு தாழ்வு என்ற பேதமில்லாமல் ஒரே முயற்சியிலே வயிற்றிலே வைத்துக் காத்து, கண்ணனாய் அவதரித்து நமக்கே தன்னைத் தந்த எளியனே உலகை நிர்வாகம் செய்பவன் ஆவான்; அல்லது ஒரு தலைவனான வஸ்து இல்லை. கண் - களைகண் - காப்பவன். திண்ணன் என்றது - நிச்சயம் என்றுமாம். குறிப்பு: திண் - திரும்பி வர முடியாத திண்மை. 'திண்ணன் வீடு' என்பதை 'திண் நல் வீடு' என்று பிரித்து 'திண் நல்' என்பதை வீட்டுக்கு அடைமொழியாக்கி உரை. விலக்ஷணமான- துக்கம் கலக்காத சுகம். 'உண்ட' என்பதற்கு 'நோக்கின' என்று பொருள் கொண்டு காப்பாற்றுதலையே 'உண்ட' என்றபடி. திண்ணன் - மகரநகர போலி. மீதியன் - மிஞ்சியிருப்பவன். சொல் ஆட்சி காண்க. கொண்டு கூட்டுதல் -திண்ணன் வீடு என்று, தொடங்கி, நம் கண்ணன் கண்ணல்லதோர் கண்ணில்லை என்று உரை. 1

அவ: அநந்தரம், அநிஷ்டநிவ்ருத்திக்கும் இஷ்டப்ராப்திக்கும் ஹேது க்ருஷ்ணன் என்கிறார்.

அறப்பெரியதான குருபாதகம் விட்டுப்போம்படி ருத்ரனுக்கு பிக்ஷாப்ரதாநம் பண்ணினவனாய், கோபகுலத்தில் பிறந்தார்க்குள் ஸிம்ஹச்ரேஷ்டமான க்ருஷ்ணன் அன்றி ஸர்வலோகத்தையும் நசித்த பாபத்தையுடைத்தாம்படி பண்ணி தன் க்ருபையாலே (அபிமதங்களைக் கொடுத்து) ரக்ஷிப்பார் ஆர்? என்ன பாவமிருந்தபடி! இவனுடைய ஸர்வாதிகத்வம் சொல்லுதல் நமக்கு பரமாவதே! 'ஏ' என்று வெறுப்பைக் காட்டுகிறது. 2

2.2.3 ஏறனைப் பூவனைப் பூமகள் தன்னை
வேறின்றி விண்தொழத் தன்னுள் வைத்து
மேறன்னை மீறிட நிமிர்ந்துமண் கொண்ட
மாறனில் மிக்குமோர் தேவு முளதே?

---

2.2.2 பின்னர், வேண்டாததைப் போக்குகைக்கும் விரும்பியதை அடைவிக்கைக்கும் காரணம் கண்ணன் என்கிறார்.

மிகப் பெரியதான - தகப்பன் தலையைக் கிள்ளியதால் உண்டான பாபம் விட்டுப்போம்படி சிவனுக்குப் பிச்சை யிட்டவனாய், இடையர் குலத்தில் பிறந்தார்க்குள் சிம்மம் போல் உயர்ந்தவனான கண்ணன் அன்றி, எல்லா உலகத்தையும் அழித்த பாபத்தையுடைத்தாம்படி பண்ணி தன் அருளாலே விரும்பியதைக் கொடுத்துக் காப்பாற்றுவது யார்? என்ன பாவமிருந்தபடி! இவனுடைய எல்லாரைக் காட்டிலும் மேம்பட்டிருக்கும் தன்மையைச் சொல்லுதல் நமக்குப் பொறுப்பாவதே! ஏ-என்று வெறுப்பைக் காட்டுகிறது.

அவ: அநந்தரம், இவனே ஸர்வஸ்மாத்பரன் என்கிறார்.

ருஷபவாஹநனான ருத்ரனையும், கமலாஸநனான ப்ரஹ்மாவையும், பத்மவாஸிநியாய்த் தனக்கு அஸாதாரணை யான பிராட்டியையும், (தன் திருமார்பில் வைத்ததிற் காட்டில்) வேறு தோன்றாதபடி தன் திருமேனிக் குள்ளே (இந்த சீலமறிந்த) பரமபத வாஸிகள் தன்னைத் தொழும்படி வைத்து, ஊர்த்வ லோகத்தைக் கீழ்த்தும்படி வளர்ந்து பூமியை அளந்துகொண்ட பெரியவனை மிகுத்தி ருப்பது ஒரு தேவதாதத்வமும் உண்டோ? உளதே - ஏகாரம் வினா. 3

---

குறிப்பு - ஈ - ஒழிதல், அழிவு. (அரிய பொருள்). கொண்டு கூட்டுதல்: மாபாவம் விட என்று தொடங்கி, ஏழுலகும் ஈபாவம் செய்து அருளாலளிப்பாரார்? ஏ பாவம் பரமே என்று உரை. 2

2.2.3 பின்னர், எம்பெருமானே எல்லாரைக் காட்டிலும் உயர்ந்தவன் என்கிறார்.

எருதை வாகனமாகவுடையனான சிவனையும், கொப்பூழ்த் தாமரையை இருப்பிடமாக உடையனான பிரமனையும், தாமரைப் பூவில் வசிப்பவளாய் எம்பெருமானுக்கே உரியளான பிராட்டியையும், தன் திருமார்பில் வைத்ததிற் காட்டிலும் பேதம் தோன்றாதபடி தன் திருமேனிக்குள்ளே இந்த குணமறிந்த நித்யசூரிகள் தன்னைத் தொழும்படி வைத்து, மேல் உலகங்களையும் விஞ்சும்படி வளர்ந்து பூமியை அளந்து கொண்ட பெரியவனை மிகுத்திருப்பது ஒரு தேவதை என்கிற பொருளும் உண்டோ? இல்லை என்று கருத்து. உளதே - ஏகாரம் வினா? உண்டோ - எதிர்மறை.. குறிப்பு: பூமகள் தன்னை - பெருமையைச் சொல்லிற்று. விண் - இடவாகு பெயர் - விண்ணில் உள்ளார். மீதிட - கீழ்த்தும்படி.

2.2.4 தேவு மெம்பொரு ளும்ப டைக்கப்
பூவில் நான்முகனைப்ப டைத்த
தேவ னெம்பெரு மானுக் கல்லால்
பூவும் பூச னையும் தகுமே.

அவ: அநந்தரம், ஆராத்யதைக்கு ஈடான ஆதிக்யம் அவனுக்கு ஒழிய இல்லை என்கிறார்.

தேவஜாதியையும் (மநுஷ்யாதி) ஸகலபதார்த்தங்களையும் ஸ்ருஷ்டிக்கைக்காகத் திருநாபீகமலத்திலே சதுர்முகனான ப்ரஹ்மாவைப் படைத்த பரதேவதையான என் நாயனுக்கு அல்லது புஷ்பாத்யுபஹாரமும் ஆராதநோபசாரமும் (வேறு சிலர்க்குத்) தகுமோ? தகாது என்று கருத்து. 4

---

கொண்டு கூட்டுதல்: ஏறனைப் பூவனைப் பூமகள்தன்னை வேறன்றித் தன்னுள் விணதொழ வைத்து, மேல் தன்னை மீதிட என்று தொடங்கி உரை.. 3

2.2.4. பின்னர் பூஜிப்பதற்குத் தகுதியான பெருமை எம்பெருமானுக்கொழிய மற்றொருவர்க்கில்லை என்கிறார்

தேவ ஜாதியையும் மனிதன் முதலான எல்லாப் பொருள்களையும் படைப்பதற்காகத் திருநாபீகமலத்திலே நான்முகனான பிரமனைப் படைத்த உயர்ந்த தேவதையான என் நாயகனுக்கல்லது புஷ்பம் முதலியவற்றால் காணிக்கையும் ஆராதனம் என்கிற உபசாரமும் வேறு சிலருக்குத் தகுமோ? தகாது என்று கருத்து. குறிப்பு - தகுமே - ஏகாரம் எதிர்மறை 4

2.2.5 **தகும்சீர்த் தன்தனி முதலி னுள்ளே**
**மிகும்தே வுமெப் பொருளும் படைக்க**
**தகும்கோலத் தாமரைக் கண்ண னெம்மான்**
**மிகும்சோ திமே லறிவார் யவரே.**

அவ: அநந்தரம், இப்பரத்வ ஸூசகமான புண்டரீகாக்ஷத்வத்தை அருளிச்செய்கிறார்.

(ஸ்ருஷ்ட்யாதிகளுக்குத்) தகுதியான ஜ்ஞாநசக்த்யாதி களையுடையனான தன்னுடைய அத்விதீயமான (ஜகத்துக்கு) மூலமான ஸங்கல்பத்துக்குள்ளே ("ஈச்வரன்" என்று சங்கிக்கலாம்படி) மிக்க (ப்ரஹ்மருத்ராதி) தேவ ஜாதியையும், (மநுஷ்யாதி) ஸகல பதார்த்தங்களையும் ஸ்ருஷ்டிக்க "இவன் தனக்குத் தகும்" என்ன ஸூசகமான அழகிய தாமரை போன்ற கண்களையுடைய என் ஸ்வாமியானவனைக் காட்டிலும் பரஞ்

---

2.2.5 பின்னர், இம்மேன்மையைக் குறிப்பதான தாமரைக் கண்ணனாக இருக்கும் தன்மையை அருளிச் செய்கிறார்.

படைத்தல் முதலானவற்றுக்குத் தகுதியான ஞானம், சக்தி முதலியனவற்றை உடையவனான தன்னுடைய தனிப்பட்ட உலகுக்குக் காரணமான ஸங்கல்பத்துக்குள்ளே 'ஈச்வரன்' என்று சந்தேகம் கொள்ளும்படி மிக்க பிரமன் சிவன் முதலான தேவ ஜாதியையும், மனிதர் முதலான எல்லாப் பொருள்களையும் படைக்க, 'இவன் தனக்குத் தகும்' என்று சொல்லும்படியைக் குறிப்பதான அழகிய தாமரைப் போன்ற கண்களையுடைய என் தலைவனைக் காட்டிலும் ,பரஞ்சோதி ஒன்று இதுக்குமேல் ஒரு பொருள் உண்டு என்று வேதமறிந்த வைதிகரில் அறிவார் யார்? உண்டு என்று அறிவார் வேதத்துக்குப் புறம்பானவர் என்று கருத்து. குறிப்பு: எம்மான் - 5ம் வேற்றுமையில் (இன்)

ஜ்யோதிஸ்ஸு இதுக்குமேல் (ஒரு தத்வமுண்டென்று வைதிகரில்) அறிவார் ஆர்? உண்டு என்று அறிவார் அவைதிகர் என்று கருத்து.

2.2.6 யவரும் யாவையு மெல்லாப் பொருளும்
கவர்வின்றித் தன்னு ளொடுங்க நின்ற
பவர்கொள் ஞானவெள் ளச்சுடர் மூர்த்தி
அவரெம் மாழியம் பள்ளி யாரே.

அவ: அநந்தரம், ஆச்ரிதரக்ஷணார்த்தமாக க்ஷீரார்ணவத்திலே கண் வளர்ந்தருளினார் என்கிறார்.

எல்லாச் சேதநரும் எல்லா அசேதநங்களுமாகிற ஸமஸ்த பதார்த்தங்களும் சோர்வின்றித் தன் ஸ்வரூபைக தேசத்திலே அடங்கும்படியாக நின்ற பரப்பையுடைத்தான ஜ்ஞாந வெள்ளத்தை (தனக்கு) ப்ரபையாகவுடைய ஸ்வாமிகளான ஸர்வாதிகரானவர் நமக்கு போக்யமாய் தர்சநீயமான க்ஷீரார்ண வத்திலே கண் வளர்ந்து அருளுகிறார்.

---

காட்டிலும் என்று பொருள் உறட்சிப்பொருள்.

2.2.6 பின்னர், அடியார்களைக் காப்பாற்றுவதற்காகத் திருப்பாற்கடலில் பள்ளிகொண்டருளுகிறார் என்கிறார்.

அனைத்து அறிவுடைய பொருள்களும், அறிவில் பொருள் களுமாகிற எல்லாப்பொருள்களும் சோர்வின்றி தன் இயல்பான இடத்திலே அடங்கும்படியாக நின்ற பரப்பையுடைய ஞான வெள்ளத்தைத் தமக்கு ஒளியாகவுடைய தலைவரான எல்லாரைக்காட்டிலும் உயர்ந்தவர் நமக்கு இனியதாய், அழகாய் உள்ள திருப்பாற்கடலிலே பள்ளிகொண்டு இருக்கிறார்.

கவர்வு - சோர்வு. பவர்வு - பரப்பு, சுடர் மூர்த்தி - விக்ரஹமாகவுமாம். 6

2.2.7 பள்ளி யாலிலை ஏழுல கும்கொள்ளும்
வள்ளல் வல்வ யிற்றுப் பெருமான்
உள்ளு ளாரறி வார்அ வன்றன்
கள்ள மாய மனக்கருத்தே.

அவ: அநந்தரம், வடதளசாயித்வரூபமான அகடிதகடநா ஸாமர்த்யத்தாலே அவன் பரத்வம் துரவபோதம் என்கிறார்.

படுக்கை ஆலிலையாக எல்லா லோகத்தையும் கொள்ளுகைக்கு இடம் கொடுக்கும் ஔதார்யத்தையும், சக்தியையுமுடைத்தான வயிற்றையுமுடைய ஸர்வாதிகனான வனுடைய ஒருவர்க்கும் தோன்றாதே ஆச்சர்யமான மாநஸ

---

கவர்வு - சோர்வு. பவர்வு-பரப்பு. சொல் ஆட்சி காண்க. சுடர்மூர்த்தி- திரு மேனியைச் சொல்லிற்றாகவுமாம். குறிப்பு - ஆழி - பாற்கடல் வலிந்து பொருள். மூர்த்தி - ஸ்வாமி (அரிய பொருள்). 6

2.2.7. பின்னர், ஆலிலையில் பள்ளிகொள்ளும் தன்மையான பொருந்தாததைப் பொருந்த வைக்கும் ஆற்றலாலே எம்பெருமானின் மேன்மையை உண்மையாகவும் முழுமை யாகவும் யாராலும் அறியமுடியாது என்கிறார்.

படுக்கை ஆலிலையாக எல்லா உலகையும் கொள்ளுகைக்கு இடம் கொடுக்கும் வள்ளலையும் ஆற்றலையுமுடையதான வயிற்றையுமுடைய எல்லாரையும்விட மேன்மையுடையவனாய் ஒருவருக்கும் தோன்றாத வியப்பான மனத்தால்

வ்யாபாரம் (ஜகதர்த்தமான ரக்ஷண சிந்தாவ்யாபாரம்) மாநஸவ்யாபாரத்தாலே அறியுமவர்கள் ஆர்? எவர்க்கும் அறிய அரிது என்று கருத்து. 7

2.2.8 கருத்தில் தேவு மெல்லாப் பொருளும்
வருத்தித்த மாயப் பிரானையன்றி யாரே
திருத்தித் திண்ணிலை மூவுலகும் தம்முள்
இருத்திக் காக்கு மியல்வி னரே.

அவ: அநந்தரம், ஸர்வப்ரகாரரக்ஷகன் அவனே என்கிறார்.

தன் நினைவாலே தேவ வர்க்கமும் (மநுஷ்யாதி) ஸகல பதார்த்தங்களும் (ஸத்தை பெற்று அபிவ்ருத்தமாம்படி) உண்டாக்கின ஆச்சர்ய சக்த்யாதிகளையுடைய

நினைக்கும் தொழில் - உலகின் பொருட்டு காக்கும் சிந்தனைத் தொழில் - நம்முடைய மனத்தினால் அறியுமவர்கள் யார்? எவர்க்கும் அறிய (அறிதல்) அரிது என்று கருத்து. குறிப்பு: 'வள்ளல்', 'வல்' என்ற சொற்கள் வயிற்றுக்கு அடை மொழியாயின. 'கள்ளமாயமனக்கருத்து' என்பதை 'கள்ளம், மாயம், மனக்கருத்து' என்று பிரித்து உரை. கொண்டு கூட்டுதல்: பள்ளி ஆலிலை என்று தொடங்கி, அவன்தன் கள்ளமாய மனக்கருத்தை உள்ளுளறிவாரார்? என்று உரை. 7

2.2.8. பின்னர், எல்லா விதத்தாலும் காப்பவன் அவனே என்கிறார்.

தன் நினைவாலே தேவ சமூகமும் மனிதர் முதலான எல்லாப்பொருள்களும் இருப்புபெற்று வளரும்படி உண்டாக்கின வியப்பான சக்தி முதலானவற்றையுடைய

ஈச்வரனை ஒழிய ஆர்தான் **ஸமஸ்தலோகத்தை**யும், **திண்ணி**தான **நிலையையுடை**த்தாம்படி (அநிஷ்ட நிவ்ருத்த்யாதி **களாலே**) திருந்த**ச்செய்து தம் நி**னைவுக்குள்ளே (அவற்றை) ப்ரதிஷ்டி**தமாக்கி ரக்ஷிக்கும் ஸ்வ**பாவத்தையுடையார்? **ரக்ஷணைக** ஸ்வபாவன் **அவன் என்று கருத்து.** 8

229 **காக்கு மியல்வினன் கண்**ண பெருமான்
**சேர்க்கை செய்துதன் னுந்தி யுள்ளே**
**வாய்த்த திசைமுக னிந்திரன் வானவர்**
**ஆக்கி னான்தெய்வ வுலகு களே.**

**ஈச்வரனை** ஒழிய யார்தான் எல்லா உலகையும் திண்ணிதான **நிலையை** உடைத்தாம்படி வேண்டாததைப் போக்குதல் விரும்பியதைக் கொடுத்தல் முதலானவற்றாலே திருந்தச் செய்து தம் நினைவுக்குள்ளே அவற்றை நிலைபெறுத்திக் காக்கும் தன்மையையுடையார்? காப்பாற்றுவது ஒன்றையே தன்மையாக உடையவன் அவன் என்று கருத்து. குறிப்பு-கருத்தில் - என்பதில் 5ம் வேற்றுமை உருபை கருத்தினால் என்று 3ம் வேற்றுமை உருபுடன் பொருள் கூறியது காண்க. வருத்தித்த - வடமொழியில் 'வர்த்தனம்' என்பதற்கு பிறப்பித்த என்றும் வர்த்த(dh)னம் என்பதற்கு வளர்த்த என்றும் பொருள் உண்டு. இரண்டையும் சேர்த்து (இரட்டுற மொழிதல்) இங்கு உரை. பிரான் - ஈச்வரன். திண்நிலை - திண்ணிதான நிலை அன் மொழித்தொகை. கொண்டு கூட்டுதல்: கருத்தில் தேவும் என்று தொடங்கி, மாயப்பிரானையன்றியாரே ...மூவுலகும் திண்ணிலை திருத்தி, தம்முள் இருத்திக்காக்கும் இயல்வினர்? என்று உரை. 8

அவ: அநந்தரம், இந்த ரக்ஷணத்தோபாதி ஜகதுத்பத்தி ஸம்ஹாரங்களும் ததீநம் என்கிறார்.

ரக்ஷணத்தை ஸ்வபாவமாகவுடைய க்ருஷ்ணனான ஸர்வேச்வரன் (ஸம்ஹ்ருதி ஸமயத்திலே நாமரூபவிபாக ரஹிதமாய், तम एकीभवति (தம ஏகீபவதி) என்கிறபடியே) சேரும்படி பண்ணித் தன் திருநாபிக்குள்ளே (ஸ்ருஷ்டிக்கு) வாய்த்த சதுர்முகன், இந்த்ரன், தேவர்கள் (அவர்களுக்கு வாஸ ஸ்தானமான) திவ்ய லோகங்கள் இவற்றை உண்டாக்கினான். உந்தியுள்ளே பிறந்த திசைமுகன் என்றுமாம். 9

2.2.10 கள்வா! எம்மையு மேழுல கும்நின்
னுள்ளே தோற்றிய இறைவா! என்று
வெள்ளேறன் நான்முக னிந்திரன் வானவர்
புள்ளூர் திகழல் பணிந்தேத் துவரே.

---

2.2.9. பின்னர், இப்படிக் காத்தல் போலே உலகைப் படைத்தலும், அழித்தலும் தன் (எம்பெருமான்) வசப்பட்டது என்கிறார்.

காத்தலைத் தன்மையாக உடைய கண்ணனான எம்பெருமான் அழிக்கும் சமயத்தில் பெயர், உருவம் என்கிற பேதமில்லாமல் 'தம: என்கிற பொருள் ஒன்றாக ஆகிறது' (சுபாலோபநிடதம்) என்கிறபடியே சேரும்படி பண்ணித் தன் திருநாபிக்குள்ளே படைப்புக்கு நன்கு அமைந்த நான்முகன், இந்திரன், தேவர்கள், அவர்களுக்கு இருப்பிடமான திவ்ய உலகுகள் முதலானவற்றை உண்டாக்கினான். வாய்த்த - பிறந்த என்ற பொருளில் உந்தியுள்ளே பிறந்த திசைமுகன் என்றுமாம். முதற்பொருளில் உந்தியுள்ளே நான்முகன், இந்திரன் மற்றும் எல்லாரையும் படைத்ததைக் கூறியபடி. கொண்டு கூட்டுதல்: காக்கும் இயல்வினன் என்று தொடங்கி, தெய்வுலகுகள் ஆக்கினான் என்று உரை. 9

அவ: அநந்தரம், ஸர்வஸ்மாத்பரனாகையாலே ஸர்வதேவதா ஸமாச்ரயணீயன் அவனே என்கிறார்.

(அவதாரமுகத்தாலே ஆதிக்யத்தை மறைக்கும்) க்ருத்ரிமனே! எம்மையும் ஸமஸ்த லோகங்களையும் உன்னுடைய ஸங்கல்பத்துக்குள் தோன்றுவித்த ஸ்வாமியே! என்று கொண்டு வெளுத்த ஏற்றையுடைய ருத்ரனும், சதுர்முகனும், இந்த்ரனும், ஸ்வர்க்கவாஸிகளும், கருட வாஹநனுடைய திருவடிகளை ப்ரணாமம் பண்ணி ஸ்துதியா நிற்பார்கள். இத்தால் - தர்ம பர்யாயவ்ருஷப வாஹநத்வத்தாலே ருத்ரனுடைய கர்ம வச்யத்தையும், வேதமயனான கருடன் வாஹநமாகையாலே ஈச்வரனுடைய வேதாந்த வேத்யத்வமும் தோற்றுகிறது. 10

---

2.2.10 பின்னர், எல்லாரைக் காட்டிலும் உயர்ந்தவனாகையாலே எல்லா தேவதைகளாலும் அடையப்படுமவன் அவனே என்கிறார்.

'அவதாரத்தின் வாயிலாகப் பெருமையை மறைக்கும் கபடத்தைச் செய்பவனே! எம்மையும் எல்லா உலகங்களையும் உன்னுடைய ஸங்கல்பத்துக்குள்ளே (மனதின் நினைவு) தோன்றுவித்த இறைவா!' என்று வெளுத்த எருதை வாகனமாக உடைய சிவனும், நான்முகனும், இந்திரனும், தேவர்களும் (சுவர்க்கத்தில் உள்ளவர்கள்) கருடனை வாகனமாக உடைய எம்பெருமானின் திருவடிகளைப் பணிந்து ஸ்தோத்திரம் செய்வார்கள். தர்மத்தின் வேறு பெயரான எருதை வாகனமாக உடைய சிவபிரானுடைய கர்மத்துக்கு வசப்படும் தன்மையும், வேதமயமான கருடன் வாகனமாகையாலே எம்பெருமானுடைய 'உபநிடதத்தாலே பரம்பொருளாக கர்மத்துக்கு வசப்படாதவன்' என்று வேதாந்தத்தாலே அறியப்படும் என்ற தன்மையும் தோற்றுகிறது. குறிப்பு - வெள்ளேறு - ரிஷபம் (தர்மம்), புள்ளூர்தி - கருடன் (வேதம்). 10

2.2.11 ஏத்த வேழுல குங்கொண்ட கோலக்
கூத்த னைக்குரு கூர்ச்சட கோபன்சொல்
வாய்த்த வாயிரத் துள்ளிவை பத்துடன்
ஏத்த வல்லவர்க் கில்லையோ ருனமே.

அவ: அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக ஸர்வ ப்ரகாரவைகல்யராஹித்யத்தை அருளிச்செய்கிறார்.

லௌகிகர் ஏத்துகிற இதுவே விளைநீராக ஸமஸ்த லோகத்தையும் அளந்துகொண்ட வடிவழகையும் வல்லார் ஆடினாற்போலே அளந்து, அநாயாஸத்தையும் உடையவனை, ஆழ்வார் அருளிச்செய்த (லோகத்துக்கு) அலப்ய லாபமான ஆயிரத்துள் இவை பத்தையும் (அர்த்தத்தோடே) உடன்பட்டு ஸ்துதிரூபமாகச்சொல்ல வல்லவர்க்கு (தேவதாந்தரங் களினுடைய உத்கர்ஷ புத்தியும், அவர்களோடு உண்டான ஸாம்யபுத்தியும், அவர்களில் நிகர்ஷபுத்தியுமாகிற) குறைவுகள்

---

2.2.11. பின்னர், இத்திருவாய்மொழிக்குப் பயனாக எல்லா முறையிலும் குறைவற்றிருக்கும் தன்மையை அருளிச் செய்கிறார்.

தேவர்களும் மனிதர்களும் போற்றுவதையே . விளை நீராக எல்லா உலகையும் அளந்துகொண்ட வடிவழகையும் கூத்தாட நன்கு தெரிந்தவன் ஆடினாற்போலே அளந்து, அதனால் சோர்வில்லாமையையுமுடைய எம்பெருமானை, ஆழ்வார் அருளிச் செய்த உலகுக்குப் பெறாப்பேறான ஆயிரம் பாட்டினுள் இவை பத்தையும் அர்த்தத்துடன் இசைந்து போற்றிச் சொல்ல வல்லவர்க்கு மற்ற தேவதைகளிடம் உயர்வான புத்தியும், அவர்களோடு உண்டான ஒப்புமை புத்தியும், அவர்களில் எம்பெருமான் தாழ்ந்தவன் என்கிற புத்தியும் ஆகிய குறைகள்

ஒன்றும் இல்லை. ஊனம் - குறைவு; சொல் வாய்த்த என்று - அர்த்த ப்ரதிபாதந ஸாமர்த்யமாகவுமாம். "ஏழுலகு" என்று கீழும் மேலும் கூட்டுகிறது. 11

இது கலிவிருத்தம்.

வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயர் திருவடிகளே சரணம்

---

ஒன்றும் இல்லை. ஊனம் - குறைவு. சொல் வாய்த்த- சொல்லுதலில் வாய்ப்பையுடைய. அதாவது பொருளைச் சொல்லுவதில் ஆற்றலுடைய என்றுமாம். ஏழுலகம் என்று கீழும் மேலும் கூட்டுகிறது. அதாவது ஏழுலகம் ஏத்த, குறிப்பு - ஏழுலகம் கொண்ட - காகாக்ஷி ந்யாயம். ஓரூனம் - மூன்று குறைகளைக்காட்டி சீயர் உரை. கொண்டு கூட்டுதல்: ஏத்த ஏழுலகும் என்று தொடங்கி, ஏத்தவல்லவர்க்கு ஓரூனமில்லை என்று உரை. 11

இது கலிவிருத்தம்

வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர் திருவடிகளே சரணம்.

******************************

## 2.3. ஊனில் வாழ் ப்ரவேசம்

மூன்றாம் திருவாய்மொழியில் - இப்படி உத்துங்க லலிதனான இவனுடைய ஸர்வவித ஸாரஸ்யாதிசய ப்ரயுக்தமான திவ்யபோக்யதையை அருளிச் செய்வதாக; அவனுடைய ஸர்வரஸாத்மகத்வத்தையும், ஸாரஸ்யயுக்தனான அவன் விஷயத்தில் தம்முடைய உபகாரஸ்ம்ருதியையும், ஸ்வவிஷயத்தில் தம்மை அவன் அபிநிவேசிப்பித்தபடியையும், அவ்வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லாதபடியையும், தன்னுடைய அபராக்ருத போக்யதையையும் ப்ரகாசிப்பித்துச் சேர்த்துக் கொண்டபடியையும், இந்த ஸம்ச்லேஷம் ஸ்வரூப ப்ரயுக்த மாகையாலே அநாதி ஸித்தமானபடியையும், போக்யதாதிச யத்தாலே வ்யதிரேகத்தில் தரிக்க அருமையையும், அவ்வநுபவம் தமக்குக் கை புகுந்தமையையும்,

---

## 2.3. ஊனில் வாழ் அவதாரிகை

மூன்றாம் திருவாய்மொழியில் - இப்படி அவதார நிலைமையில் மேன்மையைக்காட்டும் அழகனான எம்பெரு மானுடைய எல்லா வகையாலும் சுவை மிகுதியால் உண்டான தெய்வீக அநுபவத்தை அருளிச் செய்வதாக; எம்பெருமான் எல்லா இனிமையோடு கூடியிருக்கும் தன்மையையும், இன்சுவையோடு கூடிய அவன் திறத்து தம்முடைய நன்றி அறிதலையும்,; அவன் திறத்து தம்மை மிகவும் ஆர்வமுறச் செய்த வகையையும், அவ்வுதவிக்குக் கைம்மாறு இல்லாமை யையும்; தன்னுடைய தெய்வீக அழகையும் வெளிப்படுத்திச் சேர்த்துக் கொண்டமையையும், இந்தக் கலவி இயல்போடு கூடியதாகையாலே அநாதியாய் இருத்தலையும், மிக்க இன் சுவையாலே பிரிவில் தரிக்க முடியாமையையும், அவ்வனுபவம் தமக்குக் கை புகுந்தமையையும்,

ஸர்வப்ரகாரானுபவத்தால் பிறந்த ஆநந்த விசேஷத்தையும், இப்படி அநுபவித்து ஆநந்திகளான ஸூரிகளோடு தாம்கூடி அநுபவிக்கையிலுண்டான ஆசையையும் அருளிச்செய்து, கீழ்ச்சொன்ன ஸர்வப்ரகாரஸாரஸ்யம் ஸூரிபோக்யம் என்னுமிடத்தையும் உபபாதித்தருளுகிறார்.

2.3.1 ஊனில்வா ழுயிரே! நல்லைபோ உன்னைப் பெற்று
வானுளார் பெருமான் மதுசூத னென்னம்மான்
தானும்யா னுமெல்லாம் தன்னுள்ளே
கலந்தொழிந்தோம்
தேனும்பா லும்நெய்யும் கன்னலு மமுதுமொத்தே.

அவ: முதற்பாட்டில் - ஸர்வரஸமான வஸ்துவோடு தமக்கு உண்டான ஸம்ச்லேஷம் தம்முடைய திருவுள்ளமடியாக வாதலால் நெஞ்சைப் பார்த்து உகக்கிறார்.

மாம்ஸமயமான சரீரத்திலே (இந்தளத்தில்

---

அனைத்து வகை அநுபவத்தால் பிறந்த ஆனந்த விசேஷத்தையும், இப்படி அநுபவித்து ஆனந்தம் அடைந்தவர்களான நித்யசூரிகளோடு தாம் கூடி அநுபவிக்கையில் உண்டான ஆசையையும் அருளிச் செய்து, கீழ்ச்சொன்ன எல்லா முறையாலும் இனிமை நித்யசூரிகளுக்குச் சுவைக்க இனியது என்னும் இடத்தையும் தெரியப்படுத்துகிறார்.

2.3.1. முதற்பாட்டில் - எல்லா இனிமையான பொருளோடு தமக்கு உண்டான கலவி தம்முடைய திருவுள்ளம் காரணமாக வந்ததால் நெஞ்சைப் பார்த்து உகக்கிறார்.

ஊன்மயமான உடலிலே இந்தளத்திலே (கும்மட்டியில்)

தாமரை போலே பகவதநுபவத்தைப் பெற்று) வாழுகிற நெஞ்சே! நல்லைகாண்! (எங்ஙனேயென்னில்;) உன்னை (எனக்கு விதேயமாகப்) பெறுகையாலே பரமபதவாஸிகளான நித்ய சூரிகளுக்கும் மேலான மேன்மையைய்டையனாய், (தன்னை அநுபவிக்கப் பாரித்த) என்னுடைய ப்ரதிபந்தகத்தை மதுவை முடித்தாற்போலே முடித்து, என்னை அடிமைகொண்டருளின தன்மையுடைய அவனும் (அவனை அநுபவிக்க ஆசைப்பட்டு அடிமைபுக்க) நானும், தனக்குள்ளே எல்லா இனிமையுமாம்படி தேனும் தேனும், பாலும் பாலும், நெய்யும் நெய்யும், கன்னலும் கன்னலும், அமுதமும் அமுதமும் போல கலந்துவிட்டோம். இத்தால் - ஏகஜாதி த்ரவ்யம் கலந்தாற்போலே என்றபடி. அநேக த்ரஷ்டாந்த தாத்பர்யம் - ஸர்வவித ஸாரஸ்யமும் தோற்றுகைக்காக. தேனென்று ஸர்வரஸ ஸமவாயம்.

---

தாமரை போலே இறை அநுபவத்தைப் பெற்று வாழ்கிற நெஞ்சே! நல்லைகாண்! எங்ஙனேயென்னில், உன்னை எனக்குச் சொன்னபடி கேட்கப்பெறுகையாலே பரமபதத்திலிருக்கும் நித்ய சூரிகளுக்கும் மேலான மேன்மையையுடையனாய், தன்னை அநுபவிக்கப் பாரித்த என்னுடைய விரோதிகளை மது என்னும் அரக்கனை முடித்தாற்போலே முடித்து, என்னை அடிமை கொண்ட தன்மையையுடைய அவனும், அவனை அநுபவிக்க ஆசைப்பட்டு அடிமை புகுந்த நானும் (ஆழ்வாரும்) தனக்குள்ளே எல்லா இனிமையுமாம்படி தேனும் தேனும், பாலும் பாலும், நெய்யும் நெய்யும், கன்னலும் கன்னலும், அமுதும் அமுதும் போலே கலந்து விட்டோம் என்கிறார். இத்தால் - ஒரே சாதிப்பொருள் கலந்தாற்போலே என்றபடி. பல எடுத்துக் காட்டுகளின் கருத்து - எல்லாவித இனிமையும் தோற்றுகைக்காக, தேன் என்று எல்லா இனிமையின் கலப்பு. அதாவது பல பூக்களின் இனிமையை வண்டு ஒரே இடத்தில் வைக்குமாபோலே;

பாலென்று - ஸ்வாபாவிகரஸம். நெய்யென்று - ப்ரும்ஹண ரஸம். கன்னல் என்று - கரும்பாய், அதினுடைய பாகஜ ரஸத்தை நினைக்கிறது. அமுதென்று - நித்யரஸம். உயிரென்று - ப்ராணாச்ரயமான நெஞ்சைச் சொல்லுகிறது. போ(Bho) வென்று - ஸாதரமான ஸம்புத்தி ஸூசகம். 1

2.3.2 ஒத்தார்மிக் காரை யிலையாய மாமாயா!
ஒத்தாயெப் பொருட்கு முயிராய்என் னைப்பெற்ற
அத்தாயாய்த் தந்தையா யறியாதன வறிவித்த
அத்தா! நீசெய்தன அடியே னறியேனே.

அவ: அநந்தரம், ஏவம்விதஸாரஸ்யயுக்தன் தம் விஷயத்தில்

பால் என்று இயற்கையான இனிமை; நெய் என்று ப்ரும்ஹண ரஸம்; கன்னல் என்று கரும்பாய், அதனைக் காய்ச்சியதால் உண்டான இனிமையைச் சொல்லுகிறது; அமுது என்று நித்ய ரஸம்; உயிர் என்று பிராணனுக்கு ஆதாரமான நெஞ்சைச் சொல்லுகிறது. போ(Bho) என்று பரிவுடையதான விளியைக் குறிக்கிறது. நல்லைபோ -முன்னிலை அசை. குறிப்பு - பெற்று- பெற-செய்ய என்னும் வாய்பாட்டில் வந்தது. ஊன்- மாம்சம் என்ற சொல்லாலே உடலைச் சொல்லுகிறது. தேனும் தேனும்... என்று சீயர் ஆளவந்தார் பொருளாட்சி பின்பற்றி உரை. கலந்தொழிந்தோம்-ஒழி தேற்றப்பொருளில் வந்தது. எல்லாம் - எல்லா இனிமையும் ஆம்படி. (அரிய பொருள்). கொண்டு கூட்டுதல்: ஊனில் வாழுயிரே! என்று தொடங்கி, தானும் யானும் தன்னுள்ளே எல்லாம் தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதும் ஒத்துக் கலந்தொழிந்தோம் என்று உரை. 1

2.3.2. பின்னர், இப்படி இன்சுவையோடு கூடிய எம்பெருமான் தம் (ஆழ்வார்) திறத்து

பண்ணின உபகாரம் அபரிச்சேத்யம் என்கிறார்.

(இந்த ஸாரஸ்யாதிசயத்துக்கு) ஸமாப்யதிக தரித்ரனாய், (ப்ரதிக்ஷணம் அநுபவியாநின்றாலும் அபூர்வவத் விஸ்மயா வஹமான) மஹாச்சர்யயுக்தனாய், ஸர்வபதார்த்த ஸஜாதீயனாய் வந்து அவதரித்து அநுபவிப்பிக்குமவனாய், (ஆத்மா சரீரத்துக்கு தாரகனாமோபாதி) ஸர்வபதார்த்த தாரகனாய், என்னை உத்பாதித்த அந்த அஸாதாரண ஸம்பந்தத்தையுடைய தாயாம்படி ப்ரியபரனாய், ததாவிதோத்பத்தி ஹேதுவான பிதாவாம்படி ஹிதபரனுமாய், (ஆசார்யனோபாதி)அஜ்ஞாதமான அநுபவாதிகளை அறிவிப்பதுஞ்செய்து (இவ்வுபகாரங்களுக்கு அடியான) ஸம்பந்தத்தையுமுடையவனே! (ஸோபாதிகரான அவர்களைப் போலன்றியே நிருபாதிக ஸம்பந்தயுக்தனான) நீ

---

பண்ணின உதவி அளவிடமுடியாதது என்கிறார்.

இந்த எல்லையில்லாத இன்சுவைக்கு ஒப்பானவன் மேம்பட்டவன் என்று இவ்விருவருமிராதவனாய், ஒவ்வொரு நிமிடமும் அநுபவித்தாலும் புதிய புதிய பொருள் போலே ஆச்சரியத்தை விளைவிப்பதான பெரிய வியப்பைத் தருமவனாய், எல்லாப் பொருளோடும் ஒத்து வந்து அவதரித்து அநுபவிப்பிக்குமவனாய், ஆத்மா உடலுக்கு ஆதாரமாம் போலே எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரனாய், என்னைப் பெற்ற அந்த தனிப்பட்ட உறவையுடைய தாயாம்படி அன்பிலே ஊன்றினவனாய், அப்படிப்பட்ட இவர் பிறப்புக்குக் காரணமான தந்தையாம்படி நன்மையிலே நோக்குள்ளவனாய், ஆசாரியனைப் போலே அறியாதவைகளான அபயப்ரதானம், கீதை முதலானவற்றை அறிவிப்பதும் செய்து, இந்த உதவிகளுக்குக் காரணமான உறவையுமுடையவனே! பயன் நோக்குடையரான உறவினர்களைப் போலன்றியே ஒரு காரணமின்றி இயற்கையான உறவோடு கூடியவனான நீ

செய்த உபகாரங்கள் அடியேனான உறவாலே என்றிருக்கும தொழிய(அளவிட்டு)அறியமாட்டுகிறிலேன். ஸர்வவிதபந்துவான நாராயணனிறே மாதாவும் பிதாவும் குருவும் என்று கருத்து. 2

2.3.3.அறியாக் காலத்துள்ளே யடிமைக்கணன்பு செய்வித்து
அறியா மாமாயத் தடியேனை வைத்தாயால்
அறியா மைக்குறளாய் நிலம்மாவலி! மூவடியென்று
அறியாமை வஞ்சித்தா யெனதாவி யுள்கலந்தே.

அநந்தரம், தன்பக்கலிலே அவன் தம்மை அபிநிவேசிப்பித்த படியை அருளிச்செய்கிறார்.

(பிறர் தன்னை உள்ளபடி அறியாதபடி வடிவழகாலே) மதிமயக்கின வாமநனானவனாய், 'நிலம் மாவலி மூவடி' என்று (அநந்விதபதமாய் அபரிஸமாப்தமான வாக்யத்தாலே), (இவன் ஈச்வரன்" என்று அறிவிக்கிற சுக்ராதிகள் பாசுரமும்) நெஞ்சில்

---

செய்த உதவிகள் அடியேனான உறவாலே என்று இருக்கும தொழிய அளவிட்டு அறியவல்லேனல்லேன். எல்லா வித உறவுமான நாராயணன் அன்றோ தாயும் தந்தையும் குருவும் என்று கருத்து. குறிப்பு - அறிவித்து - சீயர் உரை பாடம். 2

2.3.3. பின்னர், தன் பக்கலிலே அவன் தம்மை ஆர்வமுறச் செய்தபடியை அருளிச்செய்கிறார்.

பிறர் தன்னை உள்ளபடி அறியாதபடி வடிவழகாலே மதிமயக்கின வாமநனானவனாய், 'நிலம் மாவலி மூவடி' என்று ஒன்றுக்கொன்று சேராத பதமாய் பயனிலை இல்லாத வாக்யத்தாலே 'இவன் ஈச்வரன்' என்று அறிவிக்கிற சுக்ராசாரியர் முதலானவர்கள் வார்த்தையும் நெஞ்சில்

படாதபடியாக (அவன் "தன்னது" என்றிருந்த ஜகத்தை) வஞ்சித்துக்கொண்டவனே! (இவ்வபதாநத்தை எனக்கு ப்ரகாசிப்பித்து) என்னெஞ்சுக்குள்ளே கலந்து, (அக்கணக்கிலே) அறியாமையை விளைப்பதாய், துஸ்தரமான பெருமையையுடைத்தாய், மாயாகார்யமான ஸம்ஸாரத்திலே (ஸ்வதஸ்ஸித்தமான சேஷத்வ ஸம்பந்தம் பற்றாசாக) என்னை அந்த சேஷத்வ மறிகைக்கு ஸம்பாவனையில்லாக் காலத்திலே தத்பலமான சேஷ வ்ருத்தியிலே ஆதரத்தை பிறப்பித்து வைத்தா யிறே. இது, உன்னுடைமை நழுவவிடாமைக்கிறே என்று கருத்து. 3

---

படாதபடியாக மாவலி 'தன்னது' என்று அபிமானித்திருந்த உலகை வஞ்சித்துக் கொண்டவனே! இவ்வியத்தகு செயலை எனக்குத் (ஆழ்வாருக்குத்) தெரியப்படுத்தி என் நெஞ்சுக்குள்ளே கலந்து, அக்கணக்கிலே அறியாமையை விளைவிப்பதாய், தாண்ட முடியாத பெருமையையுடைத்தாய், பிரகிருதியின் செயலான பிறவியிலே இயற்கையாக அடிமையாய் இருக்கும் உறவில் பிடிப்பாக என்னை அந்த அடிமைத்தன்மையை அறிகைக்கு இடமில்லாத காலத்திலே அதன் பயனான கைங்கர்யம் செய்வதில் பெருவிருப்பைப் பிறப்பித்து வைத்தா யன்றோ என்கிறார். இது உன்னுடைய உடைமைப் பொருளை நழுவ விடாமைக்கு அன்றோ என்று கருத்து. குறிப்பு - 'அறியாமைக் குறளாய்' என்று தொடங்கி 'அன்பு செய்வித்து வைத்தாயால்' என்று முடித்துப் பொருள் கூறியது எம்பெருமானார் பொருளாட்சியைப் பின்பற்றியபடி. ஓர் உபகாரமாக்கி அருளிச் செய்தபடி. அறியா - காரியப்பொருளில் வந்த பெயரெச்சம். கொண்டு கூட்டுதல்: அறியாமைக்குறளாய், நிலம் மாவலி மூவடி என்று அறியாமை வஞ்சித்தாய் எனதாவியுள் கலந்து அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து அறியாமாமாயத்து அடியேனை வைத்தா யால் என்று உரை. 3

2.3.4 எனதாவியுள் கலந்தபெரு நல்லுதவிக் கைம்மாறு
எனதாவி தந்தொழிந்தே னினிமீள்வ
தென்பதுண்டே
எனதாவி யாவியும்நீ பொழிலேழு முண்டவெந்தாய்
எனதாவி யார்? யானார்? தந்தநீகொண்
டாக்கினையே.

அவ: அநந்தரம், இவ்வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லை என்கிறார்.

ஸமஸ்தலோகங்களும் (ப்ரளயத்திலே அழியப்புக) வயிற்றிலே வைத்து நோக்கின ஸ்வாமியே! (அப்படி நானும் அழிந்து போகாதபடி (அத்யந்தஹேயமான) என் ஆத்மாவுக்குள்ளே ஒரு நீராகக்கலந்த (அது தன்பேறாம்படி) பெருத்து, (நிர்ஹேதுகமாகையாலே) நன்றான உதவிக்கு ப்ரத்யுபகாரமாக என் ஆத்மாவை (உனக்குத்) தந்தேவிட்டேன்; இனி (அதுக்கு) மீட்சி என்பதொன்று இல்லை; (இதுதான் ஆரதென்று ஆராயில்) என் ஆத்மாவுக்கும் ஆத்மா நீ

---

2.3.4. பின்னர், இந்த உதவிக்குக் கைம்மாறு இல்லை என்கிறார்.

எல்லா உலகங்களும் பிரளயத்திலே அழியும்போது தன் வயிற்றிலே வைத்துக் காத்த தலைவனே! அப்படி நானும் (ஆழ்வாரும்) அழிந்து போகாதபடி மிகவும் இழிவான என் ஆத்மாவுக்குள்ளே ஒரு நீராகக் கலந்த, அது தன் பேறாம்படி பெருமையுடையதாய், ஒரு காரணமின்றி இயற்கையாகையாலே நன்றாகச் செய்த உதவிக்குக் கைம்மாறாக என் ஆத்மாவை உனக்குத் தந்தேவிட்டேன்; இனி அதுக்கு மீட்சி என்பதொன்றுமில்லை; இது தான் யாருடையது என்று ஆராய்ந்தால் என் ஆத்மாவுக்கும் ஆத்மா நீ.

(ஆதலால்) (தரப்படுகிற) என் ஸ்வரூபத்தினுடைய கர்மத்வமும் நானிட்ட வழக்கல்ல; தருகிற என்னுடைய கர்த்ருத்வமும் நானிட்ட வழக்கல்ல; (தாத்ருத்வ கர்த்ருத்வாதி விசிஷ்டமான இவ்வஸ்துவினுடைய ஸத்தையை அடியிலே) உண்டாக்கித்தந்த நீதானே பின்னையும் ஸ்வீகரித்தாய். ஆதலால், உனக்கே சேஷமென்றிட்டு எனக்கு ஸமர்ப்பணத்தில் கர்மத்வமுமில்லை, கர்த்ருத்வமுமில்லை. கைம்மாறு -ப்ரத்யுபகாரம். 4

---

ஆதலால் தரப்படுகிற என் இயல்பினுடைய செய்யும் தன்மையும் நானிட்ட வழக்கல்ல; தருகிற என்னுடைய செய்பவனாம் தன்மையும் நானிட்ட வழக்கல்ல; கொடையாள னாயிருக்கும் தன்மை, செய்பவனாம் தன்மை முதலான வற்றோடு சேர்ந்ததான இந்த ஆத்மா வினுடைய இருப்பை முன்பு மயர்வற மதிநலமருளின போது உண்டாக்கித் தந்த நீ தானே பின்பும் உனதாக்கிக் கொண்டாய் என்கிறார். ஆதலால் உனக்கே அடிமை என்று கூறி எனக்கு ஸமர்ப்பணத்தில் செயலின் தன்மையும் இல்லை; செய்பவன் தன்மையும் இல்லை. கைம்மாறு - பதிலுதவி.

குறிப்பு - எனதாவியுள் கலந்த என்று சீயர் பாடம். அப்போது 'உதவி' என்பதோடு சேர்த்துப் பொருள் காண்க. கொண்டாக்கினை - ஆக்கிக்கொண்டனை. 'எனதாவியாவியும் நீ' என்பதை 'எனதாவியும் ஆவி நீ' என்று கொண்டு பொருள் கூறியது காண்க. உண்டே - இல்லை என்று நிச்சயப்பொருள். தந்தொழிந்தேன் - ஒழி நிச்சயப்பொருள். கொண்டு கூட்டுதல் - பொழிலேழும் உண்ட எந்தாய் - எனதாவியுள் கலந்த என்று தொடங்கி, எனதாவியாவியும் நீ எனதாவியார் யானார், தந்த நீ கொண்டாக்கினை என்று உரை. 4

2.3.5 இனியார் ஞானங்களா லெடுக்க லெழாதவெந்தாய்!
கனிவார் வீட்டின்பமே! யென்கடல் படாவமுதே!
தனியேன் வாழ்முதலே! பொழிலேழு
மேனமொன்றாய்
நுனியார் கோட்டில் வைத்தா யுனபாதம்
சேர்ந்தேனே.

அவ: அநந்தரம், உன்னுடைய அப்ராக்ருத போக்யதையைக் காட்டி ருசி ஜநகனானபடியாலே உன் திருவடிகளைப் பெற்றேனல்லேனோ? என்கிறார்.

எத்தனையேனும் அதிசயிதரானவர்களுடைய ஜ்ஞானங்களால் எடுக்கைக்கு எடுப்புண்ணாத ஸ்வாமியாய், (உன் பக்கல் ஸ்நேஹத்தாலே) பரிபக்வஹ்ருதயரானவர்களுக்கு மோக்ஷாநந்தபூதனாய், (உபயவ்யாவ்ருத்தனான) எனக்கு (மதநாதி யத்நத்தால்) கடலிலே உண்டாகாத (அப்ராக்ருதமான) அம்ருதமாய், (ஸம்ஸாரத்தில் பொருந்தாமையாலே) தனியனான

2.3.5. பின்னர், உன்னுடைய திவ்வியமான அநுபவிக்கப்படும் தன்மையைக் காட்டி ருசியை உண்டுபண்ணின படியாலே உன் திருவடிகளைப் பெற்றேன் அல்லேனோ? என்கிறார்.

எத்துணை மேம்பட்டவர்களுடைய ஞானங்களால் அறிவதற்கு விஷயமாகாத தலைவனாய், உன் பக்கல் நட்பாலே இளகிய மனத்தையுடையவர்களுக்குப் பேரின்பமானவனாய், இந்த இரு வகுப்பிலும் (ஞானவகுப்பு, சிநேக வகுப்பு) வேறுபட்டவனான எனக்குக் கடைதல் முதலிய முயற்சியால் கடலிலே உண்டாகாத தெய்வீகமான அமுதமாய், பிறவியில் பொருந்தாமையாலே தனியனான

என்னுடைய (த்வதநுபவரூபமான) வாழ்வுக்கு (ருசிஜநக த்வாதியாலே) ப்ரதமஹேதுபூதனாய், (என்னை ஸம்ஸாரார்ணவத்தினின்றும் எடுக்கைக்கு ஸூசகமாக) ஸப்த த்வீபயுக்தமான ஜகத்தை அத்விதீயமான மஹா வராஹமாய்க் கொண்டு கூர்மைமிக்க கொம்பிலே வைத்தவனே! இனி (நீயே ஹேதுபூதனாய் நிர்வஹிக்கிற பின்பு) உன் திருவடிகளை ப்ராபித்தேனேயன்றோ. சேர்ந்தேனே- ஏகாரம் தேற்றம். எடுக்கல் - தம் வசமாக்குதல். 5

2.3.6 சேர்ந்தார் தீவினைகட் கருநெஞ்சைத் திண்மதியைத்
தீர்ந்தார் தன்மனத்துப் பிரியா தவருயிரைச்
சோர்ந்தே போகல்கொடாச் சுடரை அரக்கியைமூக்
கீர்ந்தா யைஅடியே னடைந்தேன் முதல்
முன்னமே..

---

என்னுடைய- உன்னை அநுபவித்தலாகிற வாழ்வுக்கு ருசியை உண்டுபண்ணுவது முதலானவற்றாலே முதற் காரணமானவனாய், என்னைப் பிறவிக் கடலிலிருந்தும் எடுக்கைக்குக் குறிப்பாக ஏழு தீவுகளோடு கூடியதான உலகை ஒப்பற்றதான மகாவராகமாய்க் கொண்டு கூர்மைமிக்க கொம்பிலே வைத்தவனே! இனி நீயே காரணனாய் ஆளுகிற பின்பு உன் திருவடிகளை அடைந்து விட்டேனேயன்றோ என்கிறார். சேர்ந்தேனே - ஏகாரம் தேற்றம். எடுக்கல்-தம்வசமாக்குதல். குறிப்பு - 'ஏனமொன்றாய்' என்பதை 'ஒன்று ஏனமாய்' என்று கொண்டு தனிப்பொருள் கூறியது காண்க. கனிவார் - வினையாலணையும் பெயர். இப்பாசுரம் பூட்டுவிற்பொருள் கோள் (இனி, சேர்ந்தேனே என்று கூட்டியது காண்க). கொண்டு கூட்டுதல் - ஆர் ஞானங்களால் என்று தொடங்கி, நுனியார் கோட்டில் வைத்தாய்! இனி உன பாதம் சேர்ந்தேனே என்று உரை. 5

அவ: அநந்தரம், இந்த ப்ராப்தி ஸ்வரூபப்ரயுக்தமாகையாலே அநாதிஸித்தமன்றோ என்கிறார்.

(உன்னை) அடைந்தவர்களுடைய க்ரூரமான பாபங்களுக்கு ஆற்றவரிய நஞ்சாய், திண்ணிதான மதியாகிற வ்யவஸாயந்தானாய் நிற்கிறான் என்னலாம்படி இதுக்கு உத்பாதகனாய், அந்த அத்யவஸாயத்தையுடைவர்களுடைய மனஸ்ஸிலே விடாதே அவர்கள் ஆத்மவஸ்துவை (என்றும் விஷயாந்தரங்களிலே புக்குச்) சோர்ந்து போகக்கொடாதே (தன் வடிவையே அவர்களுக்கு விஷயமாக்கும்) உஜ்ஜ்வல ஸ்வபாவனாய், (அவர்கள் விஷயருசியை) சூர்ப்பணகியை அழித்தாற்போலே அழித்துக் கொடுக்கவல்ல உன்னை, உனக்கு சேஷபூதமான ஸ்வரூபத்தையுடைய நான் முதலுக்கு முன்னே அடைந்தேனல்லவோ?

---

2.3.6. பின்னர், இந்த உரிமை, இயல்போடு கூடியதாகையாலே தொன்றுதொட்டே ஏற்பட்டதன்றோ என்கிறார்.

உன்னை அடைந்தவர்களுடைய கொடியதான பாபங்களுக்கு ஆற்றமுடியாத விஷமாய், உறுதியான மதியாகிற - நிச்சயமாய் நிற்கிறான் என்னலாம்படி இதுக்குப் படைப்பவனாய், அந்த நிச்சயத்தை உடையவர்களுடைய மனதில் விடாதே, அவர்கள் ஆத்ம வஸ்துவை (உயிரை) என்றும் மற்ற விஷயங்களில் புகுந்து சோர்ந்து போக விடாமல் தன் (எம்பெருமான்) வடிவையே அவர்களுக்கு விஷயமாக்கும் ஒளியைத் தன்மையாக உடையவனாய், அவர்கள் விஷய ருசியை (பொருட்சுவை), சூர்ப்பணகையை அழித்தாற் போலே அழித்துக் கொடுக்கவல்ல உன்னை, உனக்கு அடிமையான இயல்பையுடைய நான் முதலுக்கு முன்னே அடைந்தேன் அல்லவோ? என்கிறார்.

மயர்வற மதிநலம் அருளுவதற்கு முன்னே ப்ராப்தி உண்டல்லவோ என்று கருத்து. 6

2.3.7 முன்நல் யாழ்பயில்நூல் நரம்பின் முதிர்சுவையே!
பன்ன லார்பயிலும் பரனே! பவித்திரனே!
கன்னலே! யமுதே! கார்முகிலே! யென்கண்ணா!
நின்னலா லிலேன்கா ணென்னைநீ குறிக்கொள்ளே.

அவ: அநந்தரம், இப்படி உபகரித்த நிரதிசயபோக்யனான உன்னையொழிந்தால் எனக்கு ஸத்தையுண்டோ? என்கிறார்.

அநாதியாய், விலக்ஷணமாய், யாழைப்பற்றியிருப்பதாய், (வ்யுத்பித்ஸுக்களாலே) பயிலப்படுவதான கீதசாஸ்த்ரத்தில் லக்ஷணம் தப்பாத நரம்பிலே கிளர்ந்த முதிர்ந்த

அறியாமையைப் போக்கி பக்தியையும் ஞானத்தையும் அருளுவதற்கு முன்னே உரிமை உண்டு அன்றோ என்று கருத்து. குறிப்பு காற்றவரிய - காலுதல் - கக்குதல், காற்றுதல் - கக்க வைத்தல். முன்னமே என்பதிலுள்ள ஏகாரத்தை அடைந்தேனே என்பதிலும் கூட்டி பொருள் கூறியது காண்க. கொண்டு கூட்டுதல் - சேர்ந்தார், என்று தொடங்கி, அடியேன் முதல்முன்னம் அடைந்தேனே என்று உரை. 6

2.3.7. பின்னர், இப்படி உதவின எல்லையில்லாது நுகர இன்பனான உன்னை ஒழிந்தால் எனக்கு இருப்பு உண்டோ? என்கிறார்.

பழையதாய்ச் சிறந்ததாய், யாழ் விஷயமாக ஞானத்தை அடைய ஆசைப்பட்டவர்களாலே கற்கப்படுவதான சங்கீத சாஸ்த்ரத்தில் லக்ஷணம் தப்பாத நரம்பிலே மிகுதியான முதிர்ந்த

கீதரஸம்போலே நிரதிசய போக்யபூதனாய், (இந்த ரஸஜ்ஞராய்) பஹுவிதராயிருக்கிற (அஸ்கலிதஜ்ஞாநாதி) வைலக்ஷண்யத்தை யுடையார் நித்யாநுபவம் பண்ணுவதற்கு மேலாய் இருக்குமவனாய், (இந்த ரஸஜ்ஞரல்லாதார்க்கும் அஜ்ஞாநாதி தோஷங்களைப்போக்கி புஜிப்பிக்கும்) பாவநபூதனாய், இக்ஷுரஸம்போலே, பர்வந்தோறும் நிரதிசயபோக்யபூதனாய் (அழிந்தாரையும் ஆக்குவதான) அம்ருதரஸமாய், (ஏவம்வித ஸாரஸ்யத்துக்கு ஆச்ரயமான) கார்காலத்தில் மேகம்போலே உதாரவிக்ரஹயுக்தனாய், (அவ்வடிவழகோடே) எனக்கு அநுபாவ்யனாகைக்கு க்ருஷ்ணனானவனே! (இப்படி நிரதிசய போக்யபூதனான) உன்னையொழிந்தால் (எனக்கு) ஸத்தை யில்லை காண்! (வ்யதிரேகத்தில் அழியும்படியான) என்னை (வ்யதிரேகத்தில் அழிக்கும்படியான போக்யதையையுடைய) நீ

சங்கீத சுவைபோலே எல்லையில்லா இனியனாய், இந்த இனிமையை அறிந்தவர்களாய்ப் பலவிதமாயிருக்கிற தடையற்ற அறிவு முதலானவற்றால் பிரிதொன்றுக்கில்லாச்சிறப்பையுடைய நித்யசூரிகள் தினமும் அநுபவிப்பதற்கு மேலாய் இருக்குமவனாய், இந்த இனிமையை அறியாதார்க்கும் அறிவின்மை முதலான குற்றங்களைப் போக்கித் தன்னை (எம்பெருமானை) அநுபவிப்பிக்கும் தூயனாய், கரும்புச்சாறு போலே கணுவு (பாகம்) தோறும் எல்லையில்லா இனிமையனாய், அறிவை இழந்தாரையும் உண்டாக்குமதான அமுதச்சுவையாய்,, இப்படிப்பட்ட இனிமைக்கு இருப்பிடமான கார்காலத்தில் மேகம் போலே கைம்மாறு கருதாது கொடுக்கும் திருமேனியோடு கூடியவனாய், அவ்வடிவழகோடே எனக்குத் தன் அநுபவத்தைக் கொடுப்பதற்குக் கண்ணனாக பிறந்தவனே! இப்படி எல்லையில்லா இனியனான உன்னை விட்டால் எனக்கு இருப்பு இல்லை காண்! உன்னை விட்டுப் பிரிதலில் அழியும்படியான என்னை விட்டுப் பிரிதலில் அழிக்கும்படியான அழகையுடைய நீ

(இரண்டு தலையையுமறிந்து) திருவுள்ளம் பற்றவேணும். 7

2.3.8. குறிக்கொள் ஞானங்களா லெனையூழி செய்தவமும்
கிறிக்கொண் டிப்பிறப்பே சிலநாளி லெய்தினன்யான்
உறிக்கொண்ட வெண்ணைய்பா லொளித் துண்ணு
மம்மான்பின்
நெறிக்கொண்ட நெஞ்சனாய்ப் பிறவித் துயர்
கடிந்தே.

அவ: அநந்தரம், இவ்வநுபவம் தமக்குக் கைவந்தபடியை அருளிச்செய்கிறார்.

உறியிலே சேமித்துவைத்துக்கொண்ட வெண்ணெயையும் பாலையும் (உடையவர்களறியாமல்) க்ருத்ரிமத்தாலே புக்கு அமுதுசெய்த செயலாலே (அடிமைகொண்ட) ஸ்வாமியான

---

இரண்டு பக்கத்தையும் (உன் அழகையும் என் படியையும்) அறிந்து திருவுள்ளம் பற்றவேணும். குறிப்பு - இரண்டு தலை - உன் வடிவையும், என் படியையும்). முன், நல் - என்று சங்கீத நூலுக்கு அடைமொழி. நூல் - சங்கீத சாஸ்த்ரம். கார் என்ற சொல்லுக்குரிய நான்கு பொருள்களில் காலம் ஒன்றைச் சொன்னபடி. 7

2.3.8 பின்னர், இவ்வனுபவம் தமக்குக் கைவசமாகிவிட்டபடியை அருளிச் செய்கிறார்.

உறியிலே சேமித்து வைத்துக் கொண்ட வெண்ணெயையும் பாலையும் உடையவர்கள் அறியாமல் கள்ளத்தனமாய்ப் புகுந்து அமுது செய்த செயலாலே என்னை அடிமை கொண்ட தலைவனான

க்ருஷ்ணனுடைய பின்னே (அவ்வபதாநத்துக்குத் தோற்று) (அவன்போன) வழியே போய்த்திரிகிற நெஞ்சை யுடையேனாய், ஜந்மப்ரயுக்த துரிதங்களைக் காற்கடைக் கொண்டு அநாதரித்து (கர்த்ருத்வாதி த்யாகத்தாலும் யமநியமாதி களாலும்) குறிக்கொள்ளப்படுவதான (வேதநத்யாந உபாஸநரூப பர்வ பேதங்களாலும், ஸத்வித்யாதஹரவித்யாதிவ்யக்தி பேதங்களாலும்) பலவகைப்பட்ட ஜ்ஞாநயோகங்களாலே, जन्मानतरसहस्रेषु (ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு) बहूनां जन्मनामन्ते (பஹூநாம் ஜந்மநாமந்தே) என்கிறபடியே) அநேக காலங்களிலே செய்யப்பட்ட (பக்தியோகமாகிற) தபஸ்ஸினுடைய பலத்தை (பகவத் க்ருபையாகிற)

---

கண்ணனுடைய பின்னே அவன் வியத்தகுசெயலுக்குத் தோற்று அவன் போன வழியே போய்த்திரிகிற நெஞ்சை யுடையேனாய், பிறவியைப் பற்றிய துயரங்களை அலட்சியம் செய்து பொருட்படுத்தாமல் செய்வேன் என்னும் எண்ணம், வினைகள், பயன் ஆகியற்றை விடுகையாலும், காமம், கோபம் முதலானவற்றை அடக்குவதாகிய இயமம், தனக்குரிய மறையை ஓதுதல் முதலிய நியமம் ஆகியவற்றாலும், ஊற்றத்தோடு செய்யப்படுவதான வேதத்தை அறிதல், இடையறாச் சிந்தனை, வழிபாடு ஆகிய நிலைமையின் பேதங்களாலும் பரமாத்மாவின் ஸ்வரூபம், குணம் ஆகியவற்றை த்யானித்தல், இதயத்தின் உள்ளிருக்கும் பரமாத்மாவைப் பற்றிய வித்யை முதலிய உபாஸன வகையின் வேறுபாட்டாலும், பலவகைப்பட்ட ஜ்ஞான யோகங்களாலே 'எத்தனையோ ஆயிரக்கணக்கான முன்னைப் பிறவிகளில்' என்று லக்வத்ரிஸ்ம்ருதியில் சொல்லிய படியும், 'பல பிறவிகளின் இறுதியில்' என்று பகவத் கீதையில் (7-16) சொல்லியபடியும் அநேக காலங்களிலே செய்யப்பட்ட பக்தி யோகமாகிற தவப்பயனை இறைவனுடைய கருணையாகிற

நல்விரகைக்கொண்டு இஜ்ஜந்மத்திலே அல்பகாலத்திலே (அநுபவத்துக்கு அடைவில்லாத) நான் கிட்டப்பெற்றேன். கிறி - விரகு. 8

2.3.9 கடிவார் தண்ணந்துழாய்க் கண்ணன் விண்ணவர்பெருமான்
படிவா னமிறந்த பரமன் பவித்திரன்சீர்
செடியார் நோய்கள்கெடப் படிந்து குடைந்தாடி
அடியேன் வாய்மடுத்துப் பருகிக் களித்தேனே.

---

நல்ல உபாயத்தைக் கொண்டு இப்பிறவியில் சில நாளில் அநுபவத்துக்குத் தகுதியில்லாத நான் கிட்டப்பெற்றேன் என்கிறார். கிறி - விரகு. குறிப்பு - நெறிக்கொண்ட - எதுகை நோக்கி க் வந்தது. கர்த்ருத்வாதி த்யாகம் - ஆதி சப்தத்தினால் கர்மத்யாகம், பலத்யாகம் சொல்லப்பட்டது. கர்த்ருத்வத்யாகம் - நான் செய்கிறேனில்லை. அவன் செய்கிறான். கர்மத்யாகம் - இது என்னுடைய த்யாகமன்று. அவன் செய்யும் த்யாகம். பலத்யாகம் - பலன் என்னுடையது அன்று. அவனுடையது. யமநியமாதிகள் - இயமம் - புலனடக்கம் ஆசாரங்கள் - ஆசனம், சந்த்யாவந்தனம். வேதநம். த்யாநம், உபாசனம் - இவை பக்திக்கு நிலைமை. வேதனமாவது ஆசார்யனிடத்தில் கேட்டுத்தெரிந்து கொள்ளுதலும், கேட்டதை யுக்திகளைக் கொண்டு ஆராய்ந்து இது தகும் என்று நிச்சயித்தலுமாகும். த்யானமாவது அப்படி நிச்சயித்த குணத்தோடு கூடிய எம்பிரானை இடைவிடாது நினைத்தலாகும். உபாசனமாவது இடைவிடாமல் நினைத்தல், கண்ணுக்குத் தென்படுவதுபோல இருக்கும் நிலையை அடைந்தால் அது உபாசனம் ஆகும். தவம் - இலக்கணையால் பக்தியைச் சொன்னபடி. 8

அவ: அநந்தரம், இப்படி அவன் குணங்களை அநுபவித்து ஆநந்தியானேன் என்கிறார்.

பரிமளம் ப்ரவஹியாநிற்கிற செவ்வித் திருத்துழாயை யுடையனாய்க்கொண்டு (ஆச்ரிதபவ்யனான) க்ருஷ்ணனாய், (இவ்வடிவழகை அநுபவிக்கிற) பரமபதவாஸிகளுக்கு அவ்வருகான மேன்மையுடைய தனக்கு பரமபதத்திலும் ஒப்பு இல்லையாகையாலே தனக்கு மேலெல்லையான பெரியவனாய், (இப்பெருமை அறியாதார் அறிவுகேட்டையும் போக்கி அநுபவிப்பிக்கும்) பாவநபூதனுடைய (பரத்வஸௌலப்ய போக்யத்வபாவநத்வ ப்ரகாசகமான) குணங்களிலே ஒன்றோ டொன்று மிடைந்து தூறுமண்டினாற்போலேயிருக்கிற (விஷயருசி தொடக்கமான) மஹாவ்யாதிகள் நசிக்கும்படி கிட்டி எங்கும் உட்புக்கு முழுகி, (அவனையொழியச் செல்லாதபடி)

---

2.3.9. பின்னர், இப்படி எம்பெருமான் குணங்களை அநுபவித்து ஆனந்தத்தையுடையேனாக ஆனேன் என்கிறார்.

மணம் கமழ்கின்ற குளிர்ந்த திருத்துழாயை யுடையவனாய்க் கொண்டு அடியார்கள் சொன்னபடி கேட்பவனான கண்ணனாய், இவ்வடிவழகை அநுபவிக்கிற பரமபதத்தில் உள்ளார்க்கு அவ்வருகான மேன்மையுடைய தனக்கு பரமபதத்திலும் ஒப்பு இல்லையாகையாலே தனக்கு மேல் எல்லையான பெரியவனாய், இப்பெருமை அறியாதார் அறிவுக்கேட்டையும், போக்கி அநுபவிப்பிக்கும் தூயவனுடைய மேன்மை, எளிமை, சுவையுடைமை, தூய்மை ஆகிய ஒளி செய்யுமதான குணங்களிலே ஒன்றோடொன்று நெருங்கி, தீங்கு மிகுந்தாற் போல் இருக்கிற விஷயருசியான காமம், குரோதம் முதலான கொடிய துன்பங்கள் அழியும்படி கிட்டி 'எங்கும் உட்புகுந்து' முழுகி, அவனை விட்டுச் செல்லாதபடி

அநந்யார்ஹனான நான் (புஜிக்கைக்கு உபகரணமான அபிநிவேசமாகிற) வாயை மடுத்து (பெருவிடாயன் தண்ணீர் குடித்தாற் போலே) நிரம்ப புஜித்து நிரதிசயமான ஆனந்தத்தைப் பெற்றேன். "படிவானமிறந்த" என்று வடிவழகுக்கு மேகம் ஒப்பல்ல என்றுமாம். 9

2..3.10 களிப்பும் கவர்வுமற்றுப் பிறப்புப்பிணி மூப்பிறப்பற்று
ஒளிக்கொண்ட சோதியமா யுடன்கூடுவ
தென்றுகொலோ
துளிக்கின்ற வானுந்நிலம் சுடராழி சங்கேந்தி
அளிக்கின்ற மாயப்பிரா னடியார்கள்குழாங்களையே.

அவ: அநந்தரம், ஏவம்விதபோகாநந்தத்துக்கு முக்ய போக்தாக்கள் ஸூரிகளாகையாலே,

---

மற்றவர்கட்கு ஆட்படாது அவனுக்கே ஆட்பட்டவனான நான் அநுபவிப்பதற்குக் கருவியான ஆசையாகிற வாயை மடுத்துப் பெரிய விடாயன் தாகம் கொண்டவன் தண்ணீர் குடித்தாற் போலே நிரம்ப அநுபவித்து எல்லையற்றதான ஆனந்தத்தைப் பெற்றேன் என்கிறார் ஆழ்வார். "படிவானமிறந்த" என்று வடிவழகுக்கு மேகம் ஒப்பல்ல என்றுமாம். இதில் வானம் என்பதற்கு மேகம் என்று பொருள் கொண்டது காண்க. குறிப்பு - வாய்மடுத்து - ஆசைப்பட்டு. இப்பாட்டில் 'வானம் படி இறந்த பரமன் - மேன்மை, 'தண்ணந்துழாய்க் கண்ணன்' - எளிவந்ததன்மை, 'விண்ணவர்பெருமான்' அநுபவிப்பிக்கும் தன்மை, 'பவித்திரன்' - தூய்மை சொல்லப்பட்டது காண்க. 9

2.3.10. பின்னர், இப்படிப்பட்ட அநுபவத்தால் வரக்கூடிய ஆனந்தத்தைச் சிறப்பாக அநுபவிப்பவர்கள் நித்ய சூரிகளாகையாலே .

அவர்களோடே கூடுகையை அர்த்திக்கிறார்.

(விஷய லாபத்தில்) களிப்பும் (ததலாபத்தில்) அபிநிவேசமும் அற்று (அதுக்கடியான) ஜந்மவ்யாதி ஜரா மரணங்களுமற்று (ஆவிர்பூதமான ஜ்ஞாநாதிகளாகிற) ஒளிகளுக்கு ப்ரகாசகமான ஜ்யோதிர்மய விக்ரஹத்தை யுடையோமாய்க் கொண்டு வர்ஷிக்கிற ஆகாசத்தையும் (அத்தாலே தரிக்கிற) பூமியையும் (பாதகரஹிதமாம்படி) பேரொளியையுடைய திருவாழியையும் திருச்சங்கையும் ஏந்தி ரக்ஷித்தருளுகிற மஹோபகாரகனுடைய நித்யதாஸ்யைக நிரூபணீயரான ஸூரிகளுடைய ஸங்கங்களை (ஒருநீராம்படி) உடன்பட்டுக் கூடுவது என்றோ? ஸமஸ்தவிரோதி நிவ்ருத்தி பிறந்து ஆவிர்பூத ஸ்வரூப ஸ்வபாவரானவர்க்கு ப்ராப்யம் அடியரான ஸூரிகள் என்று கருத்து. 10

அவர்களோடே கூடுகையை வேண்டுகிறார்

அநுபவிக்கும் பொருள் கிடைத்தபோது களிப்பும், அது கிடைக்காதபோது துயரமும் நீங்கி அதுக்குக் காரணமான பிறப்பு, பிணி, மூப்பு, இறப்பு ஆகியவையும் நீங்கி, தோன்றின ஞானம் முதலான ஒளிகளுக்கு ஒளி செய்வதான ஒளிமயமான திருமேனியையுடையோமாய்க் கொண்டு பொழிகின்ற ஆகாசத்தையும், அதனால் தாங்கப்படுகிற பூமியையும், துன்பம் ஒன்றுமில்லாதபடி பேரொளியையுடைய திருவாழியையும் திருச் சங்கையும் ஏந்திக்காத்து அருளுகிற பேருதவி செய்தவனான எம்பெருமானுடைய - எப்போதும் அடிமையையே அடையாளமாகவுடைய நித்யசூரிகளுடைய கூட்டங்களை ஒருநீராம்படி உடன்பட்டுக் கூடுவது என்றோ? எல்லா விரோதி தொலைந்து பின்னர் தோன்றின இயல்பு, தன்மைகளை உடையரானவர்க்குச் சேரத்தகுந்தவர் அடியரான நித்யசூரிகள் என்கிறார்.

2.3.11 குழாங்கொள் பேரரக்கன் குலம்வீய
முனிந்தவனைக்
குழாங்கொள் தென்குருகூர்ச் சடகோபன்
தெரிந்துரைத்த
குழாங்க ளாயிரத்து ளிவைபத்து முடன்பாடி
குழாங்களா யடியீருடன் கூடிநின் றாடுமினே.

அவ: அநந்தரம், 'இத்திருவாய்மொழியைப்பாடி பரஸ்பர ஸங்கதராய் ஸங்கீபவித்து ப்ரீதிப்ரேரிதராய் அர்த்தியுங்கோள்" என்று பலத்தை அருளிச்செய்கிறார்.

(பாதகரான ராக்ஷஸரைத்) திரள்திரளாகவுடையனாய் இருக்கிற பெருமையையுடையனான ராவணனாகிற ராக்ஷஸனுடைய குலம் அகப்பட நசிக்கும்படி முனிந்து அருளினவனை

---

குறிப்பு - வானும் நிலம் - சீயர் பாடம். சோதியமாய் - அம் விகுதி வந்த தன்மைப்பன்மை. மாயப்பிரான் - மாயம் என்பதற்கு இப்பாட்டில் சொன்ன உதவியை நினைத்து 'பெரிய' என்று சீயர் உரை. சோதியமாய் - அம் விகுதி வந்த தன்மைப்பன்மை. கொண்டு கூட்டுதல் - களிப்பும் கவர்வுமற்று என்று தொடங்கி, ஒளிக்கொண்ட சோதியமாய் துளிக்கின்ற வானும் என்று தொடங்கி, குழாங்களை உடன்கூடிநின்று என்[illegible] [illegible] என்று உரை. 10

2.3.11. பின்னர். இத்திருவாய்மொழியைப் பாடி ஒருவருக் கொருவர் கூடினவராய்ச் சேர்ந்து அன்பினால் ஏவப்பட்டவராய் வேண்டுங்கோள் என்று பயனை அருளிச்செய்கிறார்.

பொல்லா அரக்கர்களைத் திரள் திரளாக உடையவனாய் இருக்கிற பெருமையையுடையவனான இராவணனாகிற ராக்ஷஸனுடைய குலம் முழுவதும் அழியும்படி கோபித்தவனை,

(ஸ்ரீ வைஷ்ணவர்கள்) திரளையுடைத்தான திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார் ஆராய்ந்து அருளிச்செய்த பத்தான திரளை வடிவாகவுடைத்தான ஆயிரம் திருவாய்மொழியிலும் இவை பத்தையும் (அர்த்தத்தோடே) உடன்பட்டு (ப்ரீதிக்குப் போக்குவீடாகப்) பாடி (பரஸ்பர ஸம்ச்லிஷ்டராய்க்கொண்டு) பல திரளாய் அடியீரான உங்கள் ஸ்வரூபத்துக்கு அநுரூபமாம்படி ஏககண்டராய் ஸம்ச்லேஷித்து (இடைவிடாதே) நின்று ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணப் பாருங்கோள். 11

இது கலிவிருத்தம்

வாதிகேசரி அழகியமணவாளச் சீயர் திருவடிகளே சரணம்

---

ஸ்ரீ வைஷ்ணவர்கள் திரளையுடையதான ஆழ்வார் திருநகரிக்குத் தலைவரான நம்மாழ்வார் ஆராய்ந்து அருளிச்செய்த பத்தான திரளை வடிவாக உடையதான ஆயிரம் திருவாய்மொழியிலும் இந்தப் பத்துப் பாட்டையும் பொருளோடே ஒப்புக்கொண்டு பக்திக்குப் போக்குவீடாகப் பாடி ஒருவர்க்கொருவர் கலந்துகொண்டுப் பல திரளாய், அடியீரான உங்கள் இயல்புக்குத் தக்கபடி ஒத்த கருத்துள்ளவராய்ச் சேர்ந்து இடைவிடாதே நின்று பரபரப்புடன் கூடிய நடனத்தைப் பண்ணப் பாருங்கோள் என்கிறார். 11

இது கலிவிருத்தம்

வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர் திருவடிகளே சரணம்.



## 2.4. ஆடியாடி ப்ரவேசம்

நாலாம் திருவாய்மொழியில் - இப்படி தாம் ஆசைப்பட்ட படியை அநுபவிக்கப் பெறாமையால் அவஸந்நராய், "தமக்குப் பிறந்த ஆர்த்யதிசயத்தை சமிப்பிக்கைக்கு, ஸர்வரக்ஷகனாய் போக்யபூதனான அவனையொழிய இல்லை" என்று அறுதியிட்டு; அவன் ஆச்ரிதனான ப்ரஹ்லாதனுக்கு உதவின படியையும் அநிருத்தனுக்கு உதவினபடியையும், அபிமதையான பிராட்டிக்கு உதவின படியையும், நாட்டுக்கு உதவினபடியையும், சுத்தபாவத்தையும், நிரதிசய போக்யதையையும், ரக்ஷணார்த்தமான ஆஸத்தியையும், ஆஸந்ந ஜநங்களுக்கு அநுபவ விரோதிகளைப் போக்கினபடியையும், ரக்ஷணோபகரண வத்தையையும், விரோதி மிகுந்தாலும் வெந்துவிழப் பண்ணும் வீரப்பாட்டையும்,

---

## 2.4. ஆடியாடி அவதாரிகை

நாலாம் திருவாய்மொழியில் - இப்படி தாம் ஆசைப்பட்ட படியை அநுபவிக்கப்பெறாமையால் துன்புற்றவராய், "தமக்குப் பிறந்த துன்ப மிகுதியைப் போக்குகைக்கு, எல்லோரையும் காப்பவனாய் சுவை நிரம்பியவனான அவனை ஒழிய இல்லை" என்று நிச்சயித்து; அவன் அடியனான பிரகலாதனுக்கு உதவின படியையும், அநிருத்தனுக்கு உதவினபடியையும், அவனால் விரும்பப்படுமவளான பிராட்டிக்கு உதவினபடியையும், நாட்டுக்கு உதவினபடியையும், தூயநினைவையும், எல்லை யில்லாது அநுபவிக்கப்படும் தன்மையையும், காப்பதன் பொருட்டு கிட்டியிருப்பதையும், நெருங்கிய மக்கள் அநுபவிக்கப்படுவதற்குத் தடையானவைகளைப் போக்கின படியையும், காப்பதற்குத் தகுந்த கருவியையும், விரோதி மிகுந்தாலும் வெந்து விழப்பண்ணும் வீரச் செயல்களையும்

அநுஸந்தித்து, தம்முடைய ஆர்த்தியைப் பரிவர் முகத்தாலே அவனுக்கு அறிவித்தபடியை, பிரிந்த தலைமகள் ஆற்றாமைக்கு நற்றாய் இரங்கின பாசுரத்தாலே அருளிச் செய்கிறார்.

2.4.1 ஆடியாடி யகம்க ரைந்துஇசை
பாடிப்பாடிக் கண்ணீர்மல் கிஎங்கும்
நாடிநாடி நரசிங்கா வென்று
வாடி வாடுமிவ் வாணுதலே.

அவ: முதற்பாட்டில் - "ப்ரஹ்லாதனுக்கு உதவினாற்போலே வந்து உதவுகிறிலன்" என்று இவள் தளராநின்றாள் என்கிறாள்.

ஒளி விடுகிற நெற்றியையுடையளான இவள் (வல்லார் ஆடினாற்போலே தர்சநீயமாம்படி, தன் ஆற்றாமையாலே நின்றவிடத்தில் நில்லாதே) பலகாலும் உலாவி மநச்சைதில்யம்

நினைத்து, தம்முடைய (ஆழ்வாருடைய) துக்கத்தைத் தம்மிடம் அன்புள்ளவர் வாயிலாக எம்பெருமானுக்கு அறிவித்தபடியை, பிரிந்த தலைமகளான பராங்குசநாயகி ஆற்றாமைக்குப் பெற்ற தாய் இரங்கின - வருந்தின பாசுரத்தாலே அருளிச்செய்கிறார்.

2.4.1. முதற்பாட்டில் - 'பிரகலாதனுக்கு உதவினாற்போலே வந்து உதவுகிறிலன்' என்று இவள் பராங்குச நாயகி) தளராநின்றாள் என்கிறாள் நற்றாய்.

ஒளி விடுகிற நெற்றியையுடையளான பராங்குச நாயகி, வல்லாராடினாற்போலே அழகாயிருக்கும்படி, தன் ஆற்றாமையாலே நின்ற இடத்தில் நில்லாதே பலகாலும் உலாவி, மனம் தளர்ந்து.

பிறந்து (அந்த க்லேசமடியாக) இசையிலே பலகாலும் பாடுவாரைப் போலே ப்ரலாபித்து, (கரைந்த நெஞ்சு ப்ரவஹிக்குமாபோலே) கண்கள் நீர்மல்கி, ஸர்வதேசத்திலும் (அவன் வரவை) ஆராய்ந்து பலகாலும் பார்த்து (எங்கும் தோற்றவல்ல) நரஸிம்ஹரூபத்தையுடையவனே! என்று (அவ்வளவிலும் வரக் காணாமையாலே) வாட்டத்தின்மேல் வாட்டமாம்படி தளரா நிற்கும். 1

2.4.2 வாணுதலிம் மடவரல் உம்மைக்
காணுமாசையுள் நைகின் றாள்விறல்
வாணனாயிரந் தோள்துணித் தீர்உம்மைக்
காணநீ ரிரக்க மிலீரே.

அவ: அநந்தரம், அநிருத்தனை நிரோதித்த பாணனைத் தோள்மிடுக்கு அறுத்த நீர் இவளுக்கு இரங்குகிறிலீர் என்கிறாள்.

அந்தத்துன்பம் காரணமாக இசையிலே பலகாலும் பாடுவாரைப் போலே புலம்பி, கரைந்த நெஞ்சு வெள்ளமிடுமாபோலே கண்கள் நீர் மல்கி, எல்லா இடத்திலும் அவன் வரவை ஆராய்ந்து பலகாலும் தேடித்தேடிப் பார்த்து எங்கும் தோற்ற வல்ல நரசிம்மவடிவையுடையவனே! என்று சொன்ன அவ்வளவிலும் வரக்காணாமையாலே வாட்டத்தின் மேல் வாட்டமாம்படி தளரா நிற்கும். கொண்டு கூட்டுதல் - இவ்வாணுதல் - ஆடியாடி என்று தொடங்கி, வாடிவாடும் என்று உரை. 1

2.4.2. பின்னர், அநிருத்தனைச் சிறையில் அடைத்த பாணாசுரனைத் தோள் மிடுக்கு அறுத்த நீர் (எம்பெருமான்) இவளுக்கு கருணை செய்யவில்லை என்கிறாள்.

ஒளிவிடுகிற நுதலையுடையளாய், மடப்பத்தால் விஞ்சின இவள் (தர்சநீயரான) உம்மைக் "காணவேணும்" என்கிற ஆசையிலே சிதிலையாகா நின்றாள்; பெருமிடுக்கனான பாணனுடைய ஆயிரந்தோள் துணித்தவரே! உம்மைக் காண்கைக்கு நீர் இரக்கமில்லாமையாயிராநின்றீர். இவள் ஆசைப்பட்டாலும் பசையில்லை; உம்முடைய இரக்கமிறே காட்டுவது என்று கருத்து. 2

2.4.3 இரக்க மனத்தோ டெரியணை
அரக்கும் மெழுகுமொக் கும்இவள்
இரக்க மெழீரிதற் கென்செய்கேன்
அரக்க னிலங்கைசெற் றீருக்கே

அவ: அநந்தரம், பிராட்டிக்காக ராவணனனையும் லங்கையையும் அழித்த நீர் இரங்குகிறிலீர்: இதற்குச் செய்வதென்? என்கிறாள்.

---

ஒளிவிடுகிற நெற்றியையுடையவளாய், மென்மையால், விஞ்சின இவள் அழகான உம்மை 'காணவேணும்' என்கிற ஆசையாலே தளர்ந்து இருக்கிறாள்; பெருமிடுக்கனான பாணாசுரனுடைய ஆயிரம் தோள்களைத் துணித்தவரே! உம்மைக் காண்கைக்கு நீர் இரக்கமில்லாது இருக்கிறீர். இவள் ஆசைப்பட்டாலும் பயன் இல்லை; உம்முடைய இரக்கமன்றோ உம்மைக் காட்டுவது என்று கருத்து. குறிப்பு - மடவரல் இவள் -ஆகுபெயர்/அன்மொழித்தொகை.. 2

2.4.3. பின்னர், பிராட்டிக்காக இராவணனையும் இலங்கையையும் அழித்த நீர் இரக்கமில்லாது இருக்கிறீர்; இதற்குச் செய்வது என்? என்கிறாள்.

க்லேசோத்தரமான நெஞ்சோடே இவள் (சிக்கென்ற) அரக்கும், (மெத்தென்ற) மெழுகும் அக்நிஸகாசத்தில் ஒக்க உருகுமாபோலே, கற்பும் மடமும் கட்டுக்குலையா நின்றாள்; நீர் இரக்கந்தோற்ற இருக்கிறிலீர்; இது நிமித்தமாக ராக்ஷஸனான ராவணனுடைய லங்கையை அழித்த உமக்கு எத்தைச் செய்வேன்? இல்லாத இரக்கத்தை உண்டாக்கவோ? இவள் சைதில்யத்தை तत् सदृसं भवेत् (தத் ஸத்ருசம் பவேத்) என்றவள் நெஞ்சுபோலே சிக்கெனப் பண்ணவோ? என்று கருத்து. 3

2.4.4 இலங்கைசெற் றவனே யென்னும்பின்னும்
வலங்கொள் புள்ளுயர்த்தாய்! என்னும்உள்ளம்
மலங்கவெவ் வுயிர்க்கும் கண்ணீர்மிகக்
கலங்கிக் கைதொழும் நின்றிவளே.

---

வருத்தம் மிகுதியான நெஞ்சோடே இவள் கெட்டியான அரக்கும் மெத்தென்ற மெழுகும் தீயின் உதவியால் உருகுமாபோலே கற்பும் மடமும் (சொன்னதைக் கேட்பது) கட்டுக்குலைய நின்றாள்; நீர் இரக்கம் தோற்ற இருக்கிறதில்லை; இது காரணமாக அரக்கனான இராவணனுடைய இலங்கையை அழித்த உமக்கு எத்தைச் செய்வேன்? இல்லாத இரக்கத்தை உண்டாக்கவோ? இவள் தளர்ச்சியை 'அது அவருக்குத் (இராமபிரானுக்குத்) தகுந்ததாக இருக்கும்' (இ.சு.கா. 39.30) என்று சீதை நெஞ்சு போலே கெட்டியாகப் பண்ணவோ? என்று கருத்து. குறிப்பு - அரக்கு கற்புக்கு உவமையாகவும், மெழுகு மடத்திற்கு உவமையாகவும் கூறியது காண்க. மடம் - சொன்னதைக் கேட்பது. கொண்டு கூட்டுதல் - இரக்கமனத்தோடு - இவள் அரக்கும் மெழுகும் - எரியணை ஒக்கும். இரக்கமெழீர்; இதற்கு - அரக்கன் இலங்கை செற்றீருக்கு - என் செய்கேன் என்று உரை. 3

அவ: அநந்தரம், நாட்டுக்கு உதவினபடியைச் சொல்லி க்லேசியா நின்றாள் என்கிறாள்.

இவள் (முன்புத்தை க்லேசத்தளவன்றியே) பின்னையும் (மாலிப்ரப்ருதிகள் இருந்த) லங்கையைச் செறுத்தவனே! என்னும்; (அதுக்கு உறுப்பாக) பலவானான பெரிய திருவடியை வாஹநமும் த்வஜமுமாக உடையவனே! என்னும்; (அப்படி தனக்கு வந்து தோற்றாமையாலே) நெஞ்சு அலமாக்கும்படி வெவ்விதாக மூச்சுவிடும். கண்ணீரானது மேலிட அறிவு கலங்சி வருகிறானாக) நினைத்து அஞ்சலி பண்ணா நிற்கும். 4

2.4.5 இவளிராப் பகல்வாய் வெரீஇத்தன
குவளையொண் கண்ணநீர் கொண்டாள்வண்டு
திவளும்தண் ணந்துழாய் கொடீர்என
தவள வண்ணர் தகவுகளே.

---

2.4.4. பின்னர், 'நாட்டுக்கு உதவினபடியைச் சொல்லி அறிவு கலங்கி நின்றாள்' என்கிறாள்.

பராங்குச நாயகி, முன்பாட்டில் சொன்னபடி இருந்த வருத்தமின்றியே, பின்னையும் இராவணனுக்கு முன் மாலி, சுமாலி முதலானவர்கள் இருந்த இலங்கையைக் கோபித்து அழித்தவனே! என்று சொல்லும்; அதுக்கு உறுப்பாக வலிமையையுடையனான கருடனை வாகனமாகவும் கொடியாகவும் உடையவனே! என்று சொல்லும்; அப்படி தனக்கு வந்து தோற்றாமையாலே நெஞ்சு சுழலும்படி வெம்மையாக மூச்சுவிடும்; கண்ணீரானது அதிகமாக அறிவு கலங்கி, அவன் வருகிறானாக நினைத்துக் கைதொழும். குறிப்பு - மாலி, சுமாலி முதலானவர்களின் வரலாறு மற்ற உரைகளில் இல்லை. உயர்த்தாய் - இரட்டுறமொழிதல். 4

அவ: அநந்தரம், ஸுத்தபாவரான உம்முடைய ஸ்வபாவம் இருந்தபடி யென்? என்கிறாள்.

(விலக்ஷணையான) இவள் இரவோடு பகலோடு வாசியற (திருத்துழாயை) வாய்வெருவி (அது கிடையாமையாலே) தன்னுடைய நெய்தல்போலே அழகியவான கண்களிலே சோகாச்ருவை உடையளானாள்; வண்டுகள் (மதுபானம் பண்ணி, ரஸாயநஸேவை பண்ணினாரைப்போலே) படிந்து ஒளிவிடும் படியான திருத்துழாயைக் கொடுக்கிறிலீர், (ஆச்ரித விஷயத்தில்) ஸுத்தஸ்வபாவரான உம்முடைய க்ருபாதிஸ்வபாவங்கள் என்னென்னவாயிருக்கின்றன? வாய்வெருவினதற்கு இரக்கமற்று, கண்ணநீர்க்கு இரக்கமற்று, "இவளுக்குக் கொடுக்க வேணும்"

2.4.5. பின்னர், தூய நினைவையுடையரான உம்முடைய தன்மை இருந்தபடி என்! என்கிறாள்.

உயர்ந்தவளான பராங்குச நாயகி இரவோடு பகலோடு வாசியில்லாமல் திருத்துழாயை வாய் வெருவி, அது கிடையாமையாலே தன்னுடைய நெய்தல் போலே அழகியவான கண்களிலே துக்க நீரை உடையவளானாள்; வண்டுகள் மதுவைக் குடித்து சிறந்த மருந்தை உண்டாரைப் போலே படிந்து ஒளிவிடும்படியான திருத்துழாயைக் கொடுக்காமலிருக்கிறீர். அடியார் திறத்து தூய நினைவை யுடையரான உம்முடைய கருணை முதலான இயல்பான தன்மைகள் என்னென்னவாய் இருக்கின்றன? 'இவ்ள்இராப்பகல் வாய்வெரீஇ' என்று வாய் வெருவினதற்கு இரக்கமற்று, 'குவளை ஒண்கண்ணநீர் கொண்டாள்' என்று கண்ணீர் கொண்டதற்கு இரக்கமற்று, 'வண்டு திவளும் தண்ணந் துழாய் கொடீர்' என்று 'இவளுக்குக் கொடுக்கவேணும்'

என்று இரக்கமற்று, வண்டுகளுக்குக் கொள்ளை கொடுத்தது என்ன ஸ்வபாவம்? என்று கருத்து. 5

2.4.6 தகவுடை யவனே யென்னும்பின்னும்
மிகவிரும் பும் பிரானே என்னும்என
தகவுயிர்க் கமுதே! யென்னும் உள்ளம்
உகவுருகிநின் றுள்ளுளே.

அவ: அநந்தரம், தன்னிலே சிதிலையாய், உம்முடைய போக்யதாதிசயத்தைப் பேசி வாய்புலற்றா நின்றாள் என்கிறாள்.

தன் நெஞ்சு அழியும்படி (ஸ்வரூபம்) நீராய் உருகி, தன்னிலே தன்னிலே நின்று (என்னை புஜிப்பிக்கைக்கு அடியான) க்ருபாதி ஸ்வபாவங்களை உடையவனே என்னும், அவ்வளவிலே நில்லாதே மேன்மேலும் விரும்பும்படியான உபகாரகனே

---

என்று இரக்கமற்று, வண்டுகளுக்குக் கொள்ளை கொடுத்தது என்ன தன்மை? என்றபடி குறிப்பு - கண்ணநீர் - அ அசை. கொடீரென - என - என்ன என்பதின் தொகுத்தல் விகாரம். 5

2.4.6. பின்னர், 'தனக்குள்ளே மனம் கரைந்தவளாய், உம்முடைய அநுபவிக்கத்தக்க மிக்க இனிமையைப் பேசி வாய் பிதற்றுகிறாள்' என்று நற்றாய் நாயகி நிலைமையைக் கூறுகிறாள்.

"நாயகி தன் நெஞ்சு அழியும்படி ஸ்வரூபம் நீராய் உருகி தனக்குள்ளே நின்று, 'எனக்குத் தன் (எம்பெருமான்) அநுபவத்தைக் கொடுப்பதற்குக் காரணமான கருணை முதலான தன்மைகளையுடையவனே!' என்று சொல்லும். அவ்வளவிலே நில்லாதே மேன்மேலும் விரும்பும்படியான உதவுபவனே!

என்னும்; என்னுடைய அந்தராத்மாவுக்கு நித்யமான நிரதிசய போக்யமே என்னாநிற்கும். "மிக விரும்பும்" என்று - தன்னை அவன் விரும்பினபடியாகவுமாம். ..6

2.4.7 உள்ளு ளாவி யுலர்ந்துலர்ந்துஎன
வள்ளலே! கண்ணனே! யென்னும்பின்னும்
வெள்ளநீர்க் கிடந்தாய்! என்னும்என
கள்விதான் பட்ட வஞ்சனையே.

அவ: அநந்தரம், "அபேக்ஷித்தார்க்கு உபகரிக்க அணித்தாக வர்த்திக்கிறவனே!" என்னாநின்றாள் என்கிறாள்.

எனக்கு (தன் நெஞ்சில் விகாரம் தோன்றாதபடி மறைக்கும்) களவையுடைய இவள் தான் அகப்படும்படி

---

என்று சொல்லும்; என்னுடைய (நாயகியுடைய) ஆத்மாவுக்கு நித்யமான எல்லையில்லா அநுபவிக்கத்தக்க இனிமை யானவனே என்று சொல்லும்" என்கிறாள். "மிக விரும்பும்" என்று - தன்னை அவன் விரும்பின படியாகவுமாம். இரட்டுற மொழிதல். குறிப்பு - புலற்றா - புதுச்சொல்; தகவுடையவனே! என்று விளியாகக் கொண்டு சீயர் உரை. கொண்டு கூட்டுதல் - உள்ளம் உகவுருகி-உள்ளுளே நின்று தகவுடையவனே என்னும் என்று தொடங்கி, எனதகவுயிர்க்கமுதே என்னும் என்று உரை.

2.4.7. பின்னர், "விரும்பியவர்களுக்கு உதவி செய்ய கிட்டியிருப்பவனே! என்று சொல்லுகிறாள்" என்று நற்றாய் கூறுகிறாள்.

எனக்கு (தாய்க்கு) தன் நெஞ்சில் வேறுபாடு தோன்றாதபடி மறைக்கும் களவையுடைய பராங்குச நாயகி, தான் ஈடுபடும்படி

அவன்செய்த வஞ்சனைகள் இருந்தபடி ஹ்ருதய ஸ்தாநத்துக்குள்ளே நிற்கிற (அசோஷ்யமான) அந்தராத்மாவானது உலர்த்திமேல் உலர்த்தியாம்படியாய் எனக்கு உன்னை முற்றூட்டாகத் தந்த மஹோதாரனே! (அதுதான் உன் பேறாம்படியான தாழ்ச்சியையுடைய) க்ருஷ்ணனே! என்னும்; அதுக்குமேலே (அவதார கந்தமாம்படி அணித்தாக) பரிபூர்ண ஜலமான கடலிலே கண்வளர்ந்தருளினவனே! என்னும். அப்படுக்கை தனக்கு உறுப்பென்று இருக்கிறாள். 7

2.4.8 வஞ்சனே! என்னும் கைதொழும்தன
நெஞ்சம் வேவ நெடிதுயிர்க்கும்விறல்
கஞ்சனை வஞ்சனை செய்தீர்உம்மைத்
தஞ்சமென் றிவள்பட் டனவே.

---

அவன் செய்த வஞ்சனைகள் இருந்தபடி - இதயத்திற்குள்ளே நிற்கிற உலர்த்தப்படாத காற்று முதலான எந்த வஸ்துக்களாலும் உலர்த்தப்படாததான) ஜீவாத்மாவானது உலர்த்திமேல் உலர்த்தியாம்படியாய் (வாடினதாய்) எனக்குத் உன்னை நன்றாக அநுபவிக்க வைத்த சிறந்த வள்ளலே! அவ்வண்மை தான் உன் பேறாம் படியான தாழ்ச்சியையுடைய கண்ணனே! என்று சொல்லும்; அதுக்குமேலே அவதாரத்தின் வித்தாம்படி கிட்டி அதிகமான நீரையுடைய கடலிலே-திருப்பாற்கடலிலே கண் வளர்ந்தருளினவனே! என்று சொல்லும். பள்ளிகொண்ட அப்படுக்கை தனக்கு உறுப்பு என்று இருக்கிறாள். குறிப்பு - வெள்ளம்+நீர் - வெள்ளநீர். என கள்வி - என பெயரெச்சம் (?) என் என்பதில் வந்த இடைச்சொல். தான்பட்ட-காரியப் பொருளில் வந்த பெயரெச்சம். உன் பேறாம் - பரகதஸ்வீகாரம். கொண்டுகூட்டுதல்: என கள்வி தான்பட்ட வஞ்சனை - உள்ளுளாவி என்று தொடங்கி, வெள்ளநீர்க் கிடந்தாய் என்னும் என்று உரை. 7

அவ: அநந்தரம், ஆஸந்ந ஜநங்களுக்கு அநுபவவிரோதி நிவர்த்தகரான உம்மை விச்வஸித்து இவள் பட்டபாடுகள் என்! என்கிறாள்.

(உட்புகுந்தாரைப்போலே பவ்யதையைக் காட்டி) வஞ்சித்தவனே! என்னும்; (அவ்வஞ்சநத்துக்குத் தொழ வேண்டாவோ?" என்று ப்ரணய ரோஷத்தாலே) கை எடுத்துத் தொழாநிற்கும்; (பூர்வ ஸம்ச்லேஷ ப்ரகாரத்தை நினைத்து) தன் நெஞ்சானது தக்தமாம்படி நெடுமூச்செறியும்; பெருமிடுக்கனான கம்ஸனை அவன் வஞ்சனை அவனோடே போம்படி பண்ணினவரே! (மதுரையில் பெண்களுக்கு உதவின) உம்மை (தனக்குத்) தஞ்சமென்று இவள் பட்ட வெள்ளம் என்! இப்படி கரணத்ரயமும் சிதிலமாம்படி பண்ண வேணுமோ? என்று கருத்து. 8

---

2.4.8. பின்னர், நெருங்கிய மக்கள் அநுபவத்துக்கு விரோதியை அழிப்பவரான உம்மை நினைத்து இவள் பட்ட பாடுகள் என்! என்கிறாள்.

'தன் வயப்பட்டாரைப் போலே சொல்லும்படி கேட்கும் தன்மையைக் காட்டி வஞ்சித்தவனே!' என்று சொல்லும்; 'அப்படி வஞ்சித்ததற்குத் தொழவேண்டாவோ' என்று அன்பினாலே ஏற்பட்ட கோபத்தால் கை எடுத்துத்தொழும்; முன்பு கலந்தபடியை நினைத்து தன் நெஞ்சானது எரியும்படி நெடுமூச்செறியும்; பெருமிடுக்கனான கம்சனை, அவன் வஞ்சனை அவனோடே போம்படி பண்ணினவரே! மதுரையில் பெண்களுக்கு உதவின உம்மைத் தனக்குத் தஞ்சம் என்று இவள் (நாயகி) பட்ட துன்பவெள்ளம் என்! இப்படி கை, மனம், வாக்கு ஆகிய முக்கரணமும் தளரும்படி பண்ண வேணுமோ? என்று கருத்து. குறிப்பு - பட்டன-பன்மைக்கு எண்ணிக்கை இல்லை. 8

2.4.9 பட்ட போதெழு போதறியாள்விரை
மட்டலர் தண்டுழா யென்னும்சுடர்
வட்ட வாய்நுதி நேமியீர்!நும
திட்ட மென்கொலிவ் வேழைக்கே?

அவ: அநந்தரம், இவ்வளவில், ரக்ஷணோபகரணவத்தையையுடைய உம்முடைய நினைவு ஏதாயிருக்கிறது? என்கிறாள்.

(உறங்காமையாலும், உணர்ந்து தெளிவுடையளாய் இராமையாலும்) அஸ்தமித்தபோதும் உதித்தபோதும் அறிகிறிலள்; (அறிகிறது நெஞ்சத்திலேயாகையாலே) பரிமளமும் மதுவும் பரம்பின செவ்வித்திருத்துழாய் என்னா நிற்கும்; ஜ்வாலைகளையுடைய வட்டமான வாயையும் கூர்மையை யுமுடைய திருவாழியையுடையவரே! (ப்ரதி பந்தகத்தைக் கழித்துக் கிட்டப் பரிகரமுடையீரான) உம்முடைய நினைவானது (பற்றிற்று விடமாட்டாத) இச்சபலைக்கு

---

2.4.9. பின்னர், இச்சமயத்தில் விரோதியைப் போக்கிக் காப்பதற்குத் தக்க கருவியையுடைய உம்முடைய (எம்பெரு மானுடைய) நினைவு ஏதாக இருக்கிறது? என்கிறாள் நற்றாய்.

உறங்காமையாலும் உணர்ந்து தெளிவுடையளாய் இராமையாலும் (சூரியன்) மறைந்தபோதும் உதித்த போதும் அறியாள்; அறிவது நெஞ்சத்திலே ஆகையாலே 'மணமும் மதுவும் அதிகமாயிருக்கிற அழகான திருத்துழாய்' என்று சொல்லுகிறாள்; ஒளியையுடைய வட்டமான நுனியையும் கூர்மையையுமுடைய திருவாழியைக் கையிலே உடையவரே! விரோதியைப்போக்கி அருகில் கருவியையுடையரான உம்முடைய நினைவானது பற்றிற்று விடமாட்டாத இந்த ஏழைக்கு

ஏதாயிருக்கிறது? ஸத்தைக்கு உறுப்பாயிருக்கிறதோ, முடிவுக்கு உறுப்பாயிருக்கிறதோ? என்று கருத்து. 9

2.4.10 ஏழை பேதை யிராப்பகல்தன
கேழிலொண் கண்ணநீர் கொண்டாள்கிளர்
வாழ்வைவேவ இலங்கைசெற்றீர்! இவள்
மழைநோக் கொன்றும் வாட்டேன்மினே.

அவ: அநந்தரம், விரோதி மிக்கால் வெந்துவிழப்பண்ணும் வீரப்பாட்டையுடைய நீர் - இவள் நோக்கொன்றுமொழியச் சென்றற்றது; இத்தை முடியாதொழிய வேணும் என்கிறாள்.

(கிட்டாதொழியிலும் விடாத) சபலையுமாய், (என்சொற்கேளாத) பேதையுமான இவள் இரவோடு பகலோடு வாசியற தன் ஒப்பு இல்லாத அழகிய கண்கள் நீர்

---

ஏதாயிருக்கிறது? என்கிறாள். இருப்புக்கு உறுப்பாயிருக்கிறதோ, முடிவுக்கு உறுப்பாயிருக்கிறதோ? என்றபடி. கொண்டு கூட்டுதல் - பட்டபோது என்று தொடங்கி, நுமதிட்டம் இவ்வேழைக்கு என் கொல்? என்று உரை. 9

2.4.10. பின்னர், விரோதி மிகுதியால் வெந்து விழப் பண்ணும் வீரச்செயலையுடைய நீர் இவள் (பராங்குசநாயகி) நோக்கு (பார்வை) ஒன்று ஒழியப் போய்விட்டது; இத்தை அழியாதொழிய வேணும் என்று நற்றாய் கூறுகிறாள்.

எம்பெருமானைக் கிட்டாதொழியிலும் விடமாட்டாத பேராசையுடையளாய், என் சொற் கேளாத பேதைப் பருவமுமான பராங்குசநாயகி இரவோடு பகலோடு பேதமில்லாமல் தன் ஒப்பில்லாத அழகிய கண்கள் நீர்

கொள்ளும்படியானாள்; மிக்க உயர்த்தியையுடைத்தாய் (பரபீடா பலமான) ராவணைச்வர்யம் அக்நிஸாத்தாம்படி லங்கையை அழியச்செற்றவனே!(அவளுக்குஉதவினாற்போலே)இவளுடைய முக்தமான மானின் நோக்குப் போலே இருக்கிற நோக்கை ஒன்றையுமாகிலும் க்ஷயிப்பியாதொழிய வேணும். இவள் நோக்குக்கிடீர் எல்லர்க்கும் உஜ்ஜீவந ஹேது என்று கருத்து. 10

2.4.11 வாட்ட மில்புகழ் வாமனனை இசை
கூட்டி வண்சட கோபன்சொல் அமை
பாட்டோ ராயிரத் திப்பத்தால் அடி
சூட்ட லாகுமந் தாமமே.

அவ: அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக பகவதாராதநரூப கைங்கர்யத்தை அருளிச்செய்கிறார்.

(நோக்கு வாடாதபடி தன் குறைவு தோன்ற அர்த்தியாய்

கொள்ளும்படியானாள்; மிக்க உயர்வையுடையதாய், குபேரனை நலிந்து பெற்ற இராவணனுடைய செல்வமான இலங்கையைத் தீக்கு இறையாகும்படி அழியச்செய்த கோபத்தையுடையவனே! சீதைக்கு உதவினாற்போல் பராங்குச நாயகியுடைய இளமையான மானின் நோக்கு போலே இருக்கிற நோக்கை ஒன்றையுமேயாகிலும் அழிக்காமல் வி. வேணும் இவள் நோக்கு அன்றோ எல்லாருக்கும் (எம்பெருமான் உள்பட) உய்யும் வழிக்குக் காரணம் என்றபடி. 10

2.4.11. பின்னர், இத்திருவாய்மொழிக்குப் பயனாக எம்பெருமானை வழிபடும் கைங்கர்யத்தை அருளிச் செய்கிறார்.

நோக்கு வாடாதபடி தன் குறைவு (குற்றம்) தோன்ற இரப்பாளனாய்

வந்து முகங் காட்டினபடியாலே) வாட்டம் இல்லாத குணப்ரதையையுடைய வாமநனைக் குறித்து உதாரரான ஆழ்வார் இசையோடே கூட்டிச் சொன்ன (லக்ஷண பூர்த்தியாலே) அமைதியையுடைய அத்விதீயமான பாட்டுக்கள் ஆயிரத்திலும், இப்பத்தால் அந்த வாமநனடியிலே அழகிய மாலையைச் சூட்டலாம். 11

இது வஞ்சி விருத்தம்

வாதி கேஸரி அழகியமணவாளச்சீயர் திருவடிகளே சரணம்

---

வந்து முகம் காட்டினபடியாலே வாட்டமில்லாத குணப் பெருமையையுடைய வாமனனைக் குறித்து வள்ளலான ஆழ்வார் இசையோடே கூட்டிச் சொன்னதாய், இலக்கணங்களால் நிறைவையுடைய ஒப்பற்றதான பாட்டுக்கள் ஆயிரத்திலும் இப்பத்தால் அந்த வாமனன் திருவடியிலே அழகிய மாலையைச் சூட்டலாம். கொண்டுகூட்டுதல் - வாட்டமில் புகழ் வாமனனை - வண் சடகோபன் இசைகூட்டிச் சொல்லமை - ஓர் பாட்டாயிரத்து இப்பத்தால் அடி - அந்தாமம் சூட்டலாகும் என்று உரை. 11

இது வஞ்சி விருத்தம்

வாதி கேஸரி அழகியமணவாளச்சீயர் திருவடிகளே சரணம்

@@@@@@@@@

# 2.5. அந்தாமத்தன்பு ப்ரவேசம்

அஞ்சாம் திருவாய்மொழியில் - இப்படி இவருடைய ஆர்த்தியைக் கண்டு த்வரிதனாய் ஸம்ச்லேஷித்த ஸர்வேச்வரனுக்கு, ப்ரீதியாலே வந்த ஸௌந்தர்யாதிசயத்தை அருளிச்செய்கிறதாக; ப்ரதமத்திலே ஸங்க்ரஹேண பூஷண அவயவாயுத சோபாவிசிஷ்டமான வடிவழகையும், அத்தோடே கூடின விபூத்யுந்மேஷத்தையும், ஸம்ச்லேஷகாரிதமான ரக்ஷகத்வோந்மேஷத்தையும், ஸ்திரௌஜ்ஜ்வல்யத்தையும், உபமாநராஹித்யத்தையும், அபர்யந்தபூஷணாதியோகத்தையும், தர்சநீயசேஷ்டிதத்வத்தையும், ஸம்ச்லேஷ வைலக்ஷண்யத்தினுடைய வாசாமகோசரதையையும் சொல்லுகைக்கு அதிகாரிகள் இல்லை என்னுமிடத்தையும்,

# 2.5. அந்தாமத்தன்பு அவதாரிகை

அஞ்சாம் திருவாய்மொழியில் இப்படி ஆழ்வாருடைய துக்கத்தைக் கண்டு விரைந்தவனாய்க் கலந்த எம்பெருமானுக்கு, அந்த ஆசையாலே வந்த எல்லையான அழகை அருளிச் செய்கிறதாக; முதலிலே சுருக்கமாக ஆபரணங்கள், அவயவங்கள், ஆயுதங்கள் ஆகியவற்றின் அழகோடு கூடியதான வடிவழகையும், அவ்வடிவழகோடே கூடின ஆளும் தன்மையின் உயர்த்தியையும், கலவியால் உண்டான காப்பாற்றும் தன்மையின் உயர்த்தியையும், நிலையான ஒளியை உடைமையையும், உபமானம் ஒன்றுமில்லாமையையும், எல்லையற்ற ஆபரணங்கள் முதலியவற்றின் சேர்க்கையையும், காணத்தக்க திருவிளையாடல்களின் தன்மையையும், வாக்குக்கு எட்டாத கலவியின் பெருமையைச் சொல்லுகைக்கு அதிகாரிகள் இல்லையென்னும் இடத்தையும்,

சொல்லுகை அரிதென்னுமிடத்தையும் அருளிச்செய்து, தம்முடைய ஸம்ச்லேஷ ப்ரீதிகாரித ஸௌந்தர்யபாரம்யத்தை அருளிச்செய்கிறார்.

2.5.1 அந்தாமத் தன்புசெய்தென் னாவிசேரம்மானுக்கு
அந்தாம வாழ்முடிசங் காழிநூ லாரமுள
செந்தா மரைத்தடங்கண் செங்கனிவாய் செங்கமலம்
செந்தா மரையடிக்கள் செம்பொன் திருவுடம்பே.

அவ: முதற்பாட்டில் - பூஷணாதிவிசிஷ்டமான விக்ரஹ சோபையை அநுபவிக்கிறார்.

பரமபதத்தில் விருப்பத்தைப் பண்ணி (ஹேயனான) என் நெஞ்சுக்குள்ளே பொருந்தின நிருபாதிக ஸ்வாமியானவனுக்கு (சேஷித்வஸூசகமான) அழகிய மாலையையுடைத்தான

---

எம்பெருமான் தன்மையைச் சொல்லுகைக்கு முடியாது என்னும் இடத்தையும் அருளிச் செய்து, தம்மோடு எம்பெருமான் கலந்த ஆசையால் உண்டான அழகின் எல்லையை அருளிச் செய்கிறார்.

2.5.1. முதற்பாட்டில், திருவாபரணங்கள் முதலியவற்றோடு கூடியதான திருமேனி அழகை அநுபவிக்கிறார்.

பரமபதத்தில் விருப்பத்தைச் செய்து தாழ்ந்தவனான என் நெஞ்சுக்குள்ளே பொருந்தின இயற்கையான தலைவனானவனுக்கு தலைவனாயிருக்கும் தன்மையைக் குறிப்பதான அழகிய திருத்துழாய் மாலையையுடைத்தான

உஜ்ஜ்வலமான திருவபிஷேகம், திவ்யாயுதங்கள், திருயஜ்ஞோபவீதம், திருவாரம் - (இவை) ஸ்புரித்துத் தோன்றா நின்றன; திருக்கண்கள் சிவந்த தாமரைத் தடாகமாயிரா நின்றன; சிவந்த பக்வபலம் போன்ற அதரம் சிவந்த தாமரையாய் இராநின்றது; திருவடிகள் சிவந்த தாமரையாய் இராநின்றன; திருவுடம்பு செம்பொன்னாய் இராநின்றது. இப்பாட்டு - அந்தராதித்யவித்யையிற்சொன்ன ஹிரண்மய விக்ரஹ யோகத்தையும், புண்டரீகாக்ஷத்வாத்யவயவசோபையையும், கிரீடமகுடாத்யாபரணசோபையையும், த்ருதசங்கசக்ரத்வத்தையும் சொல்லி, இப்படி ஆதித்யமண்டலாந்தர்வர்த்தியானவன், "स यश्चायं पुरुषे यश्चासावादित्ये स एकः" (ஸ யச்சாயம் புருஷே யச்சா ஸாவாதித்யே ஸ ஏக:') என்கிறபடியே - அழகிய ஆதித்ய

---

ஒளியுடையதான திருவபிஷேகம் (கிரீடம்), திவ்ய ஆயுதங்கள் (சங்கு, சக்ரம்), திருயஜ்ஞோபவீதம் (பூணூல்), திருவாரம் - இவை பளபளவென்று விளங்காநின்றன; திருக்கண்கள் சிவந்த தாமரைக்குளமாயிராநின்றன; சிவந்த பழுத்த பழம்போன்ற அதரம் (கீழ் உதடு) சிவந்த தாமரையாய் இராநின்றது; திருவடிகள் சிவந்த தாமரையாய் இராநின்றன; திருவுடம்பு செம்பொன்னாய் இராநின்றது என்கிறார். இப்பாட்டு - அந்தராதித்யவித்யையில் (சூரியன் நடுவிலுள்ள எம்பெருமானை உபாசிப்பது பற்றிய வித்யை) சொன்ன தங்கமயமான திருமேனி ஸம்பந்தத்தையும், தாமரை போலே கண் முதலான உறுப்புகளின் அழகையும், கிரீடம், மகுடம் (கிரீடத்துக்கு கீழ்பாகம்), முதலான ஆபரணங்களின் அழகையும், தரிக்கப்பட்ட சங்கு சக்கரத்தையும் சொல்லி, இப்படி சூரிய மண்டலத்தின் நடுவில் இருப்பவன், 'யோகிகள் இதயத்தில் இருப்பவனும், சூரிய மண்டலத்தில் இருப்பவனும் ஒருவனே' என்று தைத்திரீய உபநிடதம் சொல்லுகிறபடியே - அழகிய சூரிய மண்டலத்தில் பண்ணும்

மண்டலத்தில் பண்ணும் விருப்பத்தை என் நெஞ்சிலே பண்ணிப் புகுந்து, அந்த வ்யக்த்யைக்யம் இங்கே ஸ்புரிக்கும்படி அத்யுஜ்ஜ்வலனாய் இரா நின்றான் என்றும் சொல்லும். 1

2.5.2 திருவுடம்பு வான்சுடர்செந் தாமரைக் கண்
கைகமலம்
திருவிடமே மார்வ மயனிடமே கொப்பூழ்
ஒருவிடமு மெந்தை பெருமாற் கரனேயோ
ஒருவிடமொன் நின்றியென் னுள்கலந் தானுக்கே.

அவ: அநந்தரம், இவ்வவயவ சோபையையுடையவன் ப்ரஹ்ம ருத்ராதிகளான விபூதிபூதர்க்கும் பிராட்டியோபாதி திருமேனியிலே இடங்கொடுத்த ஒளஜ்ஜ்வல்யத்தை அருளிச் செய்கிறார்.

(ஸ்வரூபரூபகுணவிபூதிகள்) ஒன்றும் சோராதபடி

விருப்பத்தை என் நெஞ்சிலே அவன் பண்ணிப் புகுந்து, அந்த நபருடைய ஒருமை இங்கே விளங்கும்படி மிகவும் ஒளியை யுடையவனாய் இருந்தான் என்றும் சொல்லும். குறிப்பு - அந்தாம வாள் - வாள் சீயர் பாடம். 1

2.5.2. பின்னர், இப்படி அவயவ அழகுடையவன், பிரமன், ருத்ரன் முதலான தன் கீழ் அடங்கியிருக்குமவர்க்கும் பிராட்டிக்குத் திருமேனியில் இடம் கொடுத்தது போல திருமேனியில் இடம் கொடுத்ததனால் உண்டான ஒளியை அருளிச் செய்கிறார்.

இயல்பு, வடிவு, குணம், செல்வங்கள் ஒன்றும் குறையாதபடி

என்னுள் கலந்த என்குலநாதனுக்கு ச்லாக்யமான வடிவு ஆதித்ய வர்ணமாயிராநின்றது; திருக்கண்ணும் திருக்கையும் சிவந்த தாமரைபோலே செவ்வி பெற்றது; திருமார்வு லக்ஷ்மீஸ்தாநமே ஆயிற்று; கொப்பூழ் ப்ரஹ்மாவுக்கு ஸ்தாநமே ஆயிற்று; நீக்கியுள்ளவிடம் ருத்ரனேயாயிராநின்றது; இதென்ன ஆச்சர்யம்! ஒருவுதல் - நீங்குதல். தன் திருவுள்ளத்திலே அவன் கலந்த பின்பு ரூபௌஜ்ஜ்வல்யமும் அவயவௌஜ்ஜ்வல்யமும் உண்டானவோபாதி, விபூத்யௌஜ்ஜ்வல்யமும் உண்டாயிற்று என்று கருத்து. 2

2.5.3 என்னுள் கலந்தவன் செங்கனிவாய் செங்கமலம்
மின்னும் சுடர்மலைக்குக் கண்பாதம் கைகமலம்
மன்னு முழுவே ழுலகும் வயிற்றினுள்
தன்னுள் கலவாத தெப்பொருளும் தானி(ல்)லையே.

அவ: அநந்தரம், தன்னுள் இராத வஸ்துவுக்கு ஸத்தையில்லையாமோபாதி, என்னுள் தான் கலவாதபோது தனக்கு

---

என்னுள் கலந்த என் குலநாதனுக்கு உயர்ந்ததான வடிவு சூரியவர்ணமாயிற்று; திருக்கண்ணும் திருக்கையும் சிவந்த தாமரை போலே செவ்வி பெற்றது; திருமார்பு மகாலக்ஷ்மியின் இருப்பிடமாயிற்று; கொப்பூழ் பிரமனுக்கு இடமேயாயிற்று; மற்ற இடம் (நீக்கியுள்ள இடம்) ருத்ரனேயாயிராநின்றது; இதென்ன ஆச்சர்யம்! ஒருவுதல் - நீங்குதல். தன் திருவுள்ளத்திலே அவன் கலந்த பிறகு திருமேனியின் ஒளியும் அவயவ ஒளியும் உண்டானாற்போலே, தன் கீழ்ப்பட்டவர்களை அடக்கியாளும் தன்மையின் ஒளியும் உண்டாயிற்று என்றபடி. 2

2.5.3. பின்னர், தன்னுள் (எம்பெருமானிடம்) இல்லாத வஸ்துவுக்கு உண்மைநிலை இல்லாதாப்போலே, என்னுள் (ஆழ்வாரிடம்) தான் கலவாதபோது தனக்கு

ஸத்தையில்லையாக நினைத்து, என்னுள்ளே கலந்து உஜ்ஜ்வலனானான் என்கிறார்.

என்னுள்ளே கலந்தவனாய், (அத்தாலே) விளங்கின சுடரையுடைய மலை போன்றவனுக்கு (முன்பு சொன்ன) அவயவசோபையும் யதா பூர்வம் அத்யுஜ்ஜ்வலமாய் இரா நின்றது; ஸ்திரமாய் பூர்ணமான ஸகலலோகங்களும் அவன் வயிற்றிலேயாய் ஸத்தைபெறா நின்றன; தனக்குள்ளே ஸம்பந்தியாதிருப்பது ஏதேனும் ஒரு பொருளும் இல்லை. ஸர்வவஸ்துவுக்கும் தத்வ்யதிரேகத்தில் ஸத்தா ஹாநி ஸ்வரூப ப்ரயுக்தை; "ஈச்வரனுக்கு இவருடைய வ்யதிரேகத்தில் ஸத்தை இல்லை" என்று நினைக்கிற விடம் சீலக்ருதம் என்று கருத்து. 3

2.5.4 எப்பொருளும் தானாய் மரதகக் குன்றமொக்கும்
அப்பொழுதைத் தாமரைப்பூக் கண்பாதங் கைகமலம்
எப்பொழுதும் நாள்திங்க ளாண்டூழி யூழிதொறும்
அப்பொழுதைக் கப்பொழுதென் னாரா வமுதமே.

---

(எம்பெருமானுக்கு) உண்மைநிலை இல்லையாக நினைத்து என்னுள்ளே கலந்து ஒளியையுடையனானான் என்கிறார்.

என்னுள்ளே கலந்தவனாய், அத்தாலே விளங்கின சுடரையுடைய மலை போன்றவனுக்கு முன்பாட்டில் சொன்ன அவயவ அழகும் முற்கூறியபடி மிகவும் ஒளியையுடையதாய் இராநின்றது; நிலைபெற்றதாய் நிறைவுடையதான எல்லா உலகங்களும் அவன் வயிற்றிலேயாய் இருப்பு பெற்றன. தனக்குள்ளே ஸம்பந்தம் இல்லாதிருப்பது ஏதேனும் ஒரு பொருளும் இல்லை, எல்லாப் பொருளுக்கும் அவனை விட்டுப் பிரிந்தால் உண்மை நிலை இல்லாமை இயற்கையாக வந்தது. எம்பெருமானுக்கு ஆழ்வாருடைய பிரிவில் நமக்கு இருப்பு இல்லை என்ற நினைவு அவன் சீல குணத்தின் செய்கை என்றபடி. 3

அவ: அநந்தரம், நிரதிசயபோக்யபூதனானவன் என்னுள்ளே புகுந்த பின்பு ஸ்திர ஸ்வபாவனானான் என்கிறார்.

எல்லா க்ஷணம், எல்லா நாள், எல்லா மாஸம், எல்லா ஆண்டு, எல்லா வகைப்பட்ட ஊழிதோறும் அவ்வோ காலங்களிலே என்னுள்ளே கலந்து அத்ருப்திகரமான அம்ருதமானவன், (அத்தால் வந்த தன்னுடைய ப்ரீத்யதிசயத்தாலே) எல்லாப் பொருளும் தானான ஸர்வாத்ம பாவமும் நிறம்பெற்று மரகதமலைபோலே உயர்த்தியும், நிறமும், உரமும் உடையனானான்; அப்போதலர்ந்த தாமரைபோலே கண்ணும், அப்போதைக்கமலம் போலே பாதமும் கையும் புதுமை பெற்றன. 4

---

2.5.4. பின்னர், மிகவும் அநுபவிக்கத்தக்கவனான எம்பெருமான் என்னுள்ளே புகுந்த பின்பு நிலையான தன்மையையுடையவனானான் என்கிறார்.

எல்லா நொடி, எல்லா நாள், எல்லா மாதம், எல்லா ஆண்டு, எல்லா வகைப்பட்ட யுகம்தோறும் அந்தந்த காலங்களிலே என்னுள்ளே கலந்து மனநிறைவை உண்டு பண்ணாத அமுதமானவன், அத்தால் வந்த தன்னுடைய (எம்பெருமான்) மிகுதியான சந்தோஷத்தாலே எல்லாப் பொருளும் தானான-அனைத்துயிருமாய தன்மையும் நிறம் பெற்று, மரதகமலை போலே உயர்த்தியும், நிறமும், வலிமையும் உடையவனானான்; அப்போது அலர்ந்த தாமரை போலே கண்ணும், அந்த சமயம் கமலம் போலே பாதமும் கையும் புதுமை பெற்றன. குறிப்பு - 'எப்பொழுதும், எந்நாள், எத்திங்கள், எவ்வாண்டு, எவ்வூழியூழிதொறும்' என்று எகாரம் ஒவ்வொரு பதத்திலும் சேர்த்துப் பொருள் கூறியது காண்க. 4

2.5.5 ஆரா வமுதமா யல்லாவி யுள்கலந்த
காரார் கருமுகில்போ லென்னம்மான் கண்ணனுக்கு
நேராவாய் செம்பவளம் கண்பாதம் கைகமலம்
பேராா நீண்முடிநாண் பின்னு மிழைபலவே.

அவ:அநந்தரம், தம்முடைய திருவுள்ளத்திலே கலந்தவனுடைய அவயவசோபைக்கு உபமையில்லை என்கிறார்.

நிரதிசயபோக்யபூதனாய், ஒன்றல்லாத என் நெஞ்சுக்குள்ளே கலந்து (அத்தாலே) கார்காலத்திலே பூர்ணமான காளமேகம் போலேயிருக்கிற என் நாதனான க்ருஷ்ணனுக்கு சிவந்த பவளம் அதரத்தை ஒவ்வாது; கமலங்கள் கண், பாதம், கைகளை ஒவ்வா; (அதுக்குமேலே) பெரிய ஆரமும் உயர்ந்த முடியும், நாணும் முதல் மற்றுமுண்டான ஆபரணங்களும் அஸங்க்யாதங்கள். 5

---

2..5.5 பின்னர், தம்முடைய திருவுள்ளத்திலே கலந்த எம்பெருமானுடைய அவயவ அழகுக்கு ஒப்பு இல்லை என்கிறார்.

எல்லையில்லாத அநுபவிக்கப்படுமவனாய் ஒன்றல்லாத என் நெஞ்சுக்குள்ளே கலந்து, அத்தாலே மழைக்காலத்திலே முழுமையான காளமேகம் போலே இருக்கிற என் நாதனான கண்ணனுக்கு சிவந்த பவளம் அதரத்தை (கீழ் உதடு) ஒத்து இராது; கண், பாதம், கைகளுக்குக் கமலம் ஒப்பாகாது. அதுக்கு மேலே பெரிய ஆரமும், உயர்ந்த முடியும், நாணும் முதல் மற்றுமுண்டான ஆபரணங்களும் எண்ணமுடியாதவை.
குறிப்பு - நேரா -பன்மை. ஆரம் - முத்துமாலை. ஆர்தல் - முழுமையாதல். அல் - ஒன்றல்லாத 5

2.5.6 பலபலவே யாபரணம் பேரும் பலபலவே
பலபலவே சோதி வடிவுபண் பெண்ணில்
பலபல கண்டுண்டு கேட்டுற்று மோந்தின்பம்
பலபலவே ஞானமும் பாம்பணைமே லாற்கேயோ.

அவ: அநந்தரம், பூஷணாத்யபரிச்சேதத்தை அநுபவிக்கிறார்.

திருவநந்தாழ்வானைப் படுக்கையாகக் கொண்டாற் போலே என்னோடு கலந்தவனுக்கு ஸ்வபாவநிரூபணம் பண்ணில் ஆபரணம், கிரீடாதிரூபபேதத்தாலும் ஓரொன்றில் ஸம்ஸ்தாநபாஹுள்யத்தாலும் பலபலவாயிருக்கும்; நாமமும் வ்யக்திபேதத்தாலும் நிர்வசநமுகத்தாலும் ஓரொன்று அநேக நாமாத்மகமாகையாலே பலபலவாயிருக்கும்; ஜ்யோதீரூபமான அப்ராக்ருத விக்ரஹமும், பரவ்யூஹாதி பேதத்தாலும் அவாந்தர பேதத்தாலும் பலபலவாயிருக்கும்; இந்த்ரியத்வாரா தத்தத் விஷயஸம்யோகத்தால் வருகிற ஸுகமும்,

---

2.5.6. பின்னர், ஆபரணம் முதலானவற்றின் எல்லை யில்லாமையை அநுபவிக்கிறார்.

திருவநந்தாழ்வானைப் படுக்கையாகக் கொண்டாற் போலே என்னோடு கலந்தவனுடைய தன்மை எப்படிப்பட்டது என்று ஆராய்ச்சி செய்தால், ஆபரணம், கிரீடம் முதலான உருவ பேதத்தாலும், ஒவ்வொன்றின் உருவத்தின் பன்மை யாலும் பலபலவாயிருக்கும்; நாமமும் உரு வேறுபாட்டாலும் பதம் பிரித்தல், பகுதி, விகுதி, பிரித்துப் பொருள் கூறுதல் முதலானவற்றால் பலபலவாயிருக்கும்; ஒளிவடிவான தெய்வத் திருமேனியும், பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்ற பேதத்தாலும், உட்பிரிவு பேதத்தாலும் பலபல வாயிருக்கும்; இந்த்ரியங்கள் அந்தந்த விஷயத்தோடு கூடிய சம்பந்தத்தால் வருகிற சுகமும்,

வ்யக்திபேதத்தாலும் அவாந்தரபேதத்தாலும் பலபலவாய் இருக்கும்; தத்த்வாரா பதார்த்தங்களில் பிறக்கிற ஜ்ஞாநமும் அப்படியே பலபலவாயிருக்கும். இந்த்ரியத்வாரா வருகிற ஸுகஜ்ஞாநங்களில் ஈச்வரனுக்கு யதாக்ரமத்தாலும் வ்யுத்க்ரமத்தாலும் வரும் அநியமத்தாலே பன்மை சொல்லவுமாம் 6

2.5.7 பாம்பணைமேல் பாற்கடலுள் பள்ளி யமர்ந்ததுவும்
காம்பணைதோள் பின்னைக்கா யேறுடனேழ்
செற்றதுவும்
தேம்பணைய சோலை மராமரமே ழெய்ததுவும்
பூம்பணைய தண்டுழாய்ப் பொன்முடியம் போரேறே.

அவ: அநந்தரம், தம்மோட்டை ஸம்ச்லேஷத்தாலே அவனுடைய திவ்யசேஷ்டிதங்கள் தமக்கு ப்ரகாசித்து நிறம் பெற்றபடியை அநுபவிக்கிறார்.

---

மனிதர், தேவதை முதலான பேதத்தாலும் உட்பிரிவு பேதத்தாலும் பலபலவாயிருக்கும். அவற்றின் வாயிலாக உண்டான பொருள்களில் பிறக்கும் ஞானமும் அப்படியே பலபலவாயிருக்கும். இந்த்ரியங்களால் வருகிற சுகம் ஞானம் ஆகியவற்றில் எம்பெருமானுக்கு எல்லாமுறையாலும் மாறுபாடுள்ளதாலும் வரும். வரையறையின்மையாலே பன்மை சொல்லாகவுமாம். 6

2.5.7. பின்னர், தம்மோடு (ஆழ்வாரோடு) கூடின கலவியாலே அவனுடைய திவ்யமான திருவிளையாடல்கள் தமக்குக் காட்டி அவை பெருமை பெற்றபடியை அநுபவிக்கிறார்.

பாற்கடலிலே பாம்பணையின்மேலே கண்வளர்ந் தருளுகையைப் பொருந்தினதும் மூங்கில் போன்ற தோளை யுடைய நப்பின்னைப் பிராட்டிக்காக ஏறேழையும் ஏகோத் யோகத்திலே கொன்றதுவும், தேனையும் பணையையுமுடைய (அத்தால்) சோலையாகத் தழைத்த மராமரம் ஏழு எய்ததுவும், அழகிய தொடையையுடைத்தாய், குளிர்ந்த திருத்துழாயாலே அலங்க்ருதமாய், அத்யுஜ்ஜ்வலமான முடியையுடைத்தாய், தர்சநீயமாய், விரோதி நிரஸந உத்யோகசீலமாய் செருக்கை யுடைத்தான ருஷபம் போன்ற வஸ்து. "ஏறு" என்ற சொல்லுக்கு ஈடாக-அமர்ந்ததுவும், செற்றதுவும், எய்ததுவும் என்று அஃறிணை. 7

---

பாற்கடலிலே பாம்பணையின்மேல் பொருந்தப் பள்ளி கொண்டதுவும், மூங்கில் போன்ற தோளையுடைய நப்பின்னைப் பிராட்டிக்காக ஏறு ஏழையும் ஒரே முயற்சியாலே கொன்றதுவும், தேனையும் பருமையும் கொண்டு அத்தால் சோலையாகத் தழைத்த மராமரம் ஏழ் எய்ததுவும், அழகிய சேர்த்தியை யுடையதாய் குளிர்ந்த திருத்துழாயாலே அலங்கரிக்கப்பட்டதாய் மிகவும் ஒளியான திருமுடியையுடைத்தாய், பார்க்கத் தகுந்ததாய், விரோதியை அழிப்பதை தொழிலாகவுடைய சீலமாய், செருக்கையுடையதான எருது போன்ற வஸ்து எம்பெருமான் என்கிறார். "ஏறு" என்ற சொல்லுக்கு ஈடாக- அமர்ந்ததுவும், செற்றதுவும், எய்ததுவும் என்று அஃறிணை. குறிப்பு - பள்ளி - பள்ளியை - தொழிற்பெயர். காம்பணை - உவமைத்தொகை. பணைய - தொழிற்பெயராகக் கொண்டு பருமையினையும் உடைய என்று சீயர் உரை. தேம்பணைய - தேனையும் பணையையும் என்று கொண்டு உரை (அரிய பொருள்). சோலை ஐயம் தோன்றாது இருப்பதற்காக சீயர் தேன் பிலிற்றுகின்றனவாய் - பருத்தனவாய் என்று ஆழ்வார் சொற்களைக் காரணமாக்கி 'அத்தால்' என்று சேர்த்து உரை வழங்கினார். 7

2.5.8 பொன் முடியம் போரேற்றை யெம்மானை
நால்தடந்தோள்
தன்முடிவொன் றில்லாத தண்துழாய் மாலையனை
என்முடிவு காணாதே யென்னுள் கலந்தானை
சொல்முடிவு காணேன்நான் சொல்லுவதென்
சொல்லீரே.

அவ: அநந்தரம், ஸம்ச்லேஷ வைலக்ஷண்யத்தினுடைய வாசாம கோசரதையை அருளிச்செய்கிறார்.

உஜ்ஜ்வலமான அபிஷேகத்தையுடைய பெரும் செருக்கனாய், (அந்த ஸ்வாதந்த்ர்யச் செருக்கைக் காட்டி) என்னை அடிமை கொண்ட நாதனாய், நாலுவகைப்பட்ட பெரிய திருத்தோளையுடையனாய், தன் பெருமைக்கு முடிவில்லா தவனாய், (இந்த மேன்மைக்கும் போக்யதைக்கும் ஸூசகமான) குளிர்ந்த திருத்துழாய் மாலையையுடையனாய், (தன் உத்கர்ஷத்துக்கு எல்லை காணாதவோபாதி) என் நிகர்ஷத்தின் முடிவு காணாதே என் நெஞ்சுக்குள்ளே

---

2.5.8. பின்னர், ஆழ்வாரோடு எம்பெருமான் கலந்த சிறப்பினுடைய வாக்குக்கு எட்டாமையை அருளிச் செய்கிறார்.

ஒளியான கிரீடத்தையுடைய பெரும் செருக்கனாய், அந்த உரிமையால் வந்த செருக்கைக் காட்டி என்னை அடிமை கொண்ட தலைவனாய், நாலுவகைப்பட்ட பெரிய திருத்தோளை யுடையனாய், தன் பெருமைக்கு முடிவில்லாதவனாய், இந்த மேன்மையையும் அநுபவத்தையும் குறிப்பதான குளிர்ந்த திருத்துழாய்மாலையை உடையவனாய், தன் மேன்மைக்கு எல்லை காணாதாப்போலே என் தாழ்ச்சிக்கு முடிவு காணாதே என் நெஞ்சுக்குள்ளே

கலந்தவனை நான் (ஸ்வஸம்வேத்யமாக அறியுமதொழிய) பாசுரமிட்டுச்சொல்லும் ப்ரகாரம் காணகிறிலேன்; (நீங்கள் அநுபவித்த விஷயம் வ்ருத்தகீர்த்தநம் பண்ணுமோபாதி) இங்குச் சொல்லுவது ஏது? (உண்டாகில்) சொல்லுங்கோள் என்று லௌகிகரைக் குறித்து உரைக்கிறார். லோக வ்யாவ்ருத்தனுடைய ஸம்ச்லேஷ ஸாரஸ்யம் வாசாமகோசரம் என்று கருத்து. விச்லேஷ தசையில் என்முடிவு காணாதே என்றுமாம். 8

2.5.9 சொல்லீரென் னம்மானை யென்னாவி யாவிதனை
எல்லையில் சீரென் கருமாணிக் கச்சுடரை
நல்ல வமுதம் பெறற்கரிய வீடுமாய்
அல்லி மலர்விரையொத் தாணல்லன் பெண்ணல்லனே.

அவ: அநந்தரம், நிரதிசயபோக்யபூதனானவனைச் சொல்ல வல்லிகோளாகில் சொல்லுங்கோள் என்கிறார்.

கலந்தவனை நான் தனக்கே தெரியுமாறு அநுபவிக்கும்படி அறியுமதொழிய பாசுரமிட்டுச் சொல்லும் முறை அறிகிலேன். நீங்கள் அநுபவித்த விஷயம் நடந்ததைச் சொல்லுவது போல் இங்குச் சொல்லுவது ஏது? உண்டாகில் சொல்லுங்கோள் என்று உலகமக்களைக் குறித்து உரைக்கிறார்.உலகிலுள்ளவிஷயத்தைக் காட்டிலும் உயர்ந்த எம்பெருமானுடைய கலவியின் இனிமை வாயினால் சொல்லவும் முடியாது என்று கருத்து. பிரிந்த நிலையில் என் முடிவு (அழிவு) காணாதே என்றுமாம். குறிப்பு - 'பொன் முடியம் போறேற்றினை' என்று மேன்மை சொல்லிற்று. 'நால்தடந்தோள்' என்று அழகைச் சொல்லிற்று. 8

2.5.9. பின்னர், எல்லையில்லாது அநுபவிக்கப் படுமவனான எம்பெருமானைச் சொல்லவல்லீர்களாகில் சொல்லுங்கோள் என்கிறார்.

எனக்கு ஸ்வாமியாய், என் ஆத்மாவுக்கு ஆத்மாவாய், எல்லையில்லாத (ஸௌகுமார்யாதி) குணங்களையுடைத்தான நீலரத்ந ஜ்யோதிஸ்ஸு போலேயிருக்கிற வடிவை என்னை அநுபவிப்பித்தவனை (எல்லாரும் சேர்ந்து சொல்லலாமாகில்) சொல்லுங்கோள்; (சொல்லமுடியாமைக்கு அடியென்? என்னில்) (லௌகிகாம்ருதத்தில்) விலக்ஷணமான நித்ய போக்ய அம்ருதமுமாய், (பரமயோகிகளுக்கும்) பெறுதற்கு அரிதான மோக்ஷஸ்தாந நிர்வாஹகனுமாய், தாமரைப்பூவில் பரிமளம் போலே நிஷ்க்ருஷ்டபோக்யரூபனாய், (பும்ஸ்த்வத்தாலே) ஸ்த்ரீகளில் வ்யாவ்ருத்தகனானவோபாதி புருஷோத்தம த்வத்தாலே ஸமஸ்தபுருஷவ்யாவ்ருத்தனாயிருக்கும். ஆதலால் சொல்ல அரிது என்று கருத்து. 9

எனக்குத் தலைவனாய், என் ஆத்மாவுக்கு ஆத்மாவாய், எல்லையில்லாத அழகு முதலான குணங்களையுடையதான நீலமணி ஒளி போலே இருக்கிற வடிவை நான் (ஆழ்வார்) அநுபவிப்பிக்கும்படி செய்தவனை எல்லாரும் சேர்ந்து சொல்லலாமாகில் சொல்லுங்கோள்; சொல்லமுடியாமைக்குக் காரணம் என்? என்னில் - உலகில் உள்ள அமுதத்தைக் காட்டிலும் உயர்ந்ததான நித்யமாக அநுபவிக்கப்படும் அமுதமாய், பரம யோகிகளுக்கும் பெறுவதற்கு அரிதான வீடு என்கிற இடத்துக்கு தான் (எம்பெருமான்) இட்ட வழக்காம் படியானவனாய், தாமரைப் பூவில் பரிமளம் போலே பிரித்து எடுத்த தூய அழகனாய், பரம்பொருளாயிருத்தலாலே பெண்களில் வேறுபட்டவனானாப்போலே புருஷனாயிருக்கும் தன்மையாலே எல்லா புருஷர்களைக் காட்டிலும் உயர்ந்தவனாயிருக்கும். ஆதலால் சொல்லமுடியாது என்று கருத்து. பெண்ணல்லன் - உபமானமாகச்சொன்னது. 9

2.5.10 ஆணல்லன் பெண்ணல்ல னல்லா வலியுமல்லன்
காணலு மாகா னுளனல்ல னில்லையல்லன்
பேணுங்கால் பேணு முருவாகு மல்லனுமாம்
கோணை பெரிதுடைத்தெம் பெம்மானைக்
கூறுதலே.

அவ: அநந்தரம், அவன் ஸ்வபாவத்தைச் சொல்லுகை மிகவும் அரிது என்கிறார்.

ஆணும் அன்றியே பெண்ணும் அன்றியே ப்ரயோஜநவத்தல்லாத அலியும் அன்றியே (அவற்றைக் காணும் ப்ரமாணத்தால்) காணவும் ஒண்ணாதே (ப்ரதிகூலர்க்கு) உளனன்றியே (அநுகூலர்க்கு) இலனன்றியே (ஆச்ரிதராய்) ஆதரித்த காலத்தில் (அவர்கள்) ஆதரித்த வடிவையுடையனாய் (ஆதரமில்லாதவளவில் அப்படி) அல்லனாயிருக்கும் என் ஸ்வாமியை (இப்ரகாரம் அவன் காட்டக்கண்ட நான்) கூறுமிடத்து மிகவும் மிறுக்குடைத்து. கோணை - மிறுக்கு.

2.5.10. பின்னர், எம்பெருமான் தன்மையைச் சொல்லுகை மிகவும் அரிது என்கிறார்.

ஆணுமன்றியே பெண்ணுமன்றியே பயனுடையதல்லாத அலியும் அன்றியே அவற்றைக் காணும் இந்திரியங்களால் காணவும் முடியாதே, விரோதிகளுக்குக் கிட்டமுடியுமவனாய் அன்றியே அடியவர்களுக்கு கிட்ட முடியாதவனாய் அன்றியே, அடியவர்களாய் விரும்பிய காலத்தில் அவர்கள் ஆதரித்த வடிவையுடையவனாய், ஆதரம் இல்லாத அளவில் அப்படி அல்லனாயிருக்கும் என் தலைவனை இந்த முறை அவன் காட்டக் கண்ட நான் கூறுமிடத்து மிகவும் சிரமம் உள்ளது. கோணை - மிறுக்கு.

ஸர்வ விஸஜாதீயனாகையாலே, 'ஏவம்விதன்' என்று சொல்ல அரிது என்று கருத்து 10

2.5.11 கூறுதலொன் றாராக் குடக்கூத்த வம்மானை
கூறுதலே மேவிக் குருகூர்ச் சடகோபன்
கூறினவந் தாதியோ ராயிரத்து ளிப்பத்தும்
கூறுதல்வல் லாருளரேல் கூடுவர்வை குந்தமே.

அவ: அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாகப் பரமபத ப்ராப்தியை அருளிச்செய்கிறார்..

ஒரு குணத்தைச் சொல்லிலும் சொல்லி முடிய வொண்ணாத குடக்கூத்து முதலான சீலாதிகுணங்களையுடைய ஸ்வாமியை (உள்ளபடியே) சொல்லுவதாக உத்யோகித்து (அவனாலே லப்தஜ்ஞாந ப்ரேமரான) ஆழ்வார் அருளிச்செய்த

எல்லா விதத்திலும் மிகவும் வேறுபட்டவனாகையாலே 'இப்படிப்பட்டவன்' என்று சொல்ல முடியாது என்று கருத்து. 10

2.5.11. பின்னர், இத்திருவாய்மொழிக்குப் பயனாக பரமபதம் அடைதலை அருளிச் செய்கிறார்.

ஒரு ஆனந்த குணத்தைச் சொல்லிலும் சொல்லமுடியாத குடக்கூத்து முதலான சீலம் முதலான குணங்களையுடைய தலைவனை உள்ளபடியே - தன்னோடு கலந்தபடியே சொல்லுவதாக முயன்று, அவனாலே ஞானத்தையும் பக்தியையும் பெற்றவரான ஆழ்வார் அருளிச்செய்த

அந்தாதியாகையாலே அடைவு குலைக்கவொண்ணாத அத்விதீயமான ஆயிரத்தில் இப்பத்தையும் சொல்ல வல்லார் உண்டாகில் பரமபதத்தைக் கூடுவர். 11

இது கலிவிருத்தம்

வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர் திருவடிகளே சரணம்

அந்தாதியாகையாலே முறையை மாற்ற முடியாத ஒப்பற்றதான ஆயிரம் பாசுரத்தில் இப்பத்தையும் சொல்லவல்லார் உண்டாகில் பரமபதத்தைக் கூடுவர். 11

இது கலிவிருத்தம்

வாதிகேசரி அழகியமணவாளச்சீயர் திருவடிகளே சரணம்.

## 2.6. வைகுந்தா ப்ரவேசம்

ஆறாம் திருவாய்மொழியில் - தம்மோடு ஸம்ச்லேஷித்த ப்ரீத்யதிசயத்தாலே அத்யந்தம் ஹ்ருஷ்டனான ஸர்வேச்வரன் "இவர் நிகர்ஷாநுஸந்தாநத்தாலே அகலத்தேடி இத்தைக் குலைக்கில் செய்வதென்?" என்கிற அதிசங்கை பண்ணி, தன் விச்லேஷபீருத்வத்தை இவருடைய திருவுள்ளத்திலே ப்ரகாசிப்பிக்க, "நம்முடையவளவில் இவன் அபிநிவேசம் இருந்தபடியென்!" என்று அத்யந்த ஹ்ருஷ்டராய், இவனுடைய அதிசங்கா நிவ்ருத்த்யர்த்தமாக - தாம் அவனைச் சிக்கெனப் பற்றினமையையும், அவன்தான் அநந்யபரனாய்த் தம்மோடே கலந்தபடியையும் .ஸ்வாநுபவத்தைக் கொடுத்த ஔதார்யா திசயத்தையும் அவ்வௌதார்யமடியாகத் தாம் விடமாட்டாமையையும்,

## 2.6. வைகுந்தா அவதாரிகை

ஆறாம் திருவாய்மொழியில் - தம்மோடு கலந்த அன்பின் மிகுதியாலே மிகவும் ஸந்தோஷம் அடைந்தவனான எம்பெருமான் "ஆழ்வார் தம் தாழ்ச்சியை நினைக்கும் தன்மையாலே அகல நினைத்து இந்தக் கலவியை அழிக்கில் செய்வது என்!" என்கிற சந்தேகம் வந்து, ஆழ்வாரை விட்டுப் பிரிந்தால் எம்பெருமானுக்கு உண்டாகும் பயத்தை ஆழ்வாருடைய திருவுள்ளத்திலே வெளிப்படுத்த, 'நம்முடைய அளவில் எம்பெருமான் மிகுந்த அன்பு வைத்தபடி என்!' என்று மிகவும் மகிழ்ந்தவராய், இவனுடைய சந்தேகத்தைப் போக்குவதாக நினைத்து - தாம் அவனைச் சிக்கெனப் பற்றினமையையும், அவன் தான் வேறொன்றில் ஊற்றமில்லாதவனாய்த் தம்மோடே கலந்த படியையும், தன் அனுபவத்தைக் கொடுத்த வள்ளன்மை மிகுதியையும் அவ்வண்மை காரணமாகத் தாம் விடமாட்டாமையையும்,

லப்தபோகரான தமக்கு விட யோக்யதையில்லை என்னுமிடத்தையும், இவ்வநுபவஸித்தியால் தமக்கு வந்த பூர்த்தியையும், அந்த லாபம் தம்மளவில் நில்லாமல் ஸம்பந்தி ஸம்பந்தி பர்யந்தமானபடியையும், இதுக்கு விச்லேஷம் பிறவாமையில் தமக்குண்டான அபேக்ஷையையும், க்ருஷி பண்ணினவன்தான் இத்தைக் குலையான் என்னுமிடத்தையும், அவன் குலைக்கிலும் தாம் விட க்ஷமரல்லர் என்னுமிடத்தையும் அருளிச்செய்து, அவனுடைய விச்லேஷாதிசங்கையை நிச்சேஷமாக நிவர்த்திப்பித்தருளுகிறார்.

2.6..1 வைகுந்தா! மணிவண்ணனே! என் பொல்லாத்
திருக்குறளா! என்னுள் மன்னி
வைகும் வைகல்தோறு மமுதாய வானேறே!
செய்குந் தாவருந் தீமையுன் னடியார்க்குத்
தீர்த்தசுரர்க்குத் தீமைகள்
செய்குந்தா! உன்னைநான் பிடித்தேன் கொள்
சிக்கெனவே.

---

பெற்ற அனுபவத்தையுடையரான தமக்கு விடத்தகுதி இல்லை என்னும் விஷயத்தையும், இவ்வனுபவம் கைகூடுகையால் தமக்கு வந்த நிறைவையும், அந்த லாபம் தம்மளவில் (ஆழ்வார்) நில்லாது தம் தொடர்புடையார் தொடர்புடையார் வரையான படியையும், இதுக்குப் பிரிவு பிறவாமையில் தமக்கு உண்டான விருப்பத்தையும், முயற்சி செய்தவன் தான் இத்தை அழிக்கமாட்டான் என்னும் இடத்தையும், அவன் அழித்தாலும் தாம் விடத் தகுதியுடையவரல்லர் என்னும் இடத்தையும் அருளிச் செய்து, ஆழ்வாருடைய பிரிவில் எம்பெருமானுக்கு ஏற்படும் பயத்தை எஞ்சாமல் போக்கி அருளுகிறார்.

அவ: முதற்பாட்டில் - நிரதிசயபோக்யனாய், அநிஷ்ட நிவர்த்தகனான உன்னை நான் சிக்கெனப் பற்றியிருக்கிறேன் என்று திருவுள்ளம் பற்று என்கிறார்.

பரமபதநிலயத்வத்தாலே அஸாதாரணசேஷியாய், நீலரத்னம் போன்ற வடிவையுடையனாகையாலே ஸுலபனாய், தர்சநீயமான வாமனவிக்ரஹத்தையுடையனாகையாலே போக்யனாய், (இவ்வாகாரத்ரயத்தையும் ப்ரகாசிப்பித்துக் கொண்டு) என் நெஞ்சுக்குள்ளே ஸ்திரஸம்ச்லேஷம் பண்ணியிருக்கிற காலந்தோறும் நித்யபோக்யமாய்க் கொண்டு, நித்யஸூரிஸமாநமாம்படி அநுபவிப்பிக்கிற மேன்மையையுடையனாய், தானே செய்து கொள்ளப்பட்டு பலப்ரதாநத்தில் குந்தாதே பரிஹரிக்க அரிதான கொடிய பாபங்களை உன்னோடு சேஷத்வ ஸம்பந்தமுடையார்க்கு தீர்த்து, (அவை

---

2.6.1. முதற்பாட்டில்-எல்லையில்லாது அநுபவிக்கப்படுமவனாய், விரோதியைப் போக்குமவனான உன்னை நான் சிக்கெனப் பற்றியிருக்கிறேன் என்று (எம்பெருமானைத்) திருவுள்ளம் பற்று என்கிறார்.

பரமபதத்தைத் தான் இருப்பிடமாகக் கொண்டதாலே நமக்கே உரிய தலைவனாய், நீலமணி போன்ற வடிவை உடையனாகையாலே எளியனாய்ப் பார்க்கத் தகுந்த அழகிய வாமன வடிவையுடையனாகையாலே அநுபவிக்கத் தக்கவனாய், இந்த மூன்று தன்மையையும் - மேன்மை, எளிமை, இனிமை - தெரியப்படுத்திக் கொண்டு என் நெஞ்சுக்குள்ளே நிலையாகப் பொருந்தியிருக்கிற காலந்தோறும் நித்ய அமுதமாய், நித்யசூரிகளோடு சமானமாம்படி அநுபவிப்பிக்கிற மேன்மையையுடையவனாய், தானே செய்துகொள்ளப்பட்டுப் பயனைக் கொடுப்பதில் தப்பாதே போக்கடிக்கமுடியாத கொடிய பாபங்களை உனக்கு அடிமையாயிருப்பார்க்குத் தீர்த்து, அவை

ப்ரதிகூலரான அஸுரப்ரக்ருதிகள் பக்கலிலேயாம்படி) அவர்களுக்கு அநர்த்தத்தை விளைக்கும் குந்தமாகிற ஆயுதத்தையுடையவனே! (இப்படி போக்யபூதனாய், அநிஷ்ட நிவர்த்தகனாய், ஆச்ரித பக்ஷபாதியான) உன்னை (உன் இனிமையை அறிந்து உன்னையொழியச்செல்லாத) நான் (இனி,) விடாதபடி ஸ்திரமாக பற்றினேனாக திருவுள்ளம் பற்று. 'செய்கும், தாவரும்' என்று சொல்லாய் - செய்யப்பட்டுக் கடக்கவரிய என்றுமாம். 'குந்தமென்று - மரமாய், அதின் வெளுப்பையிட்டு சுத்தியைக் காட்டுகிறது' என்றும் சொல்லுவர். 'பொல்லா' என்று - விபரீதலக்ஷணையாலே அழகைச் சொல்லுகிறது. 'என் பொல்லா' என்று - தம்மை அநந்யார்ஹராக்கிற்று அவ்வழகாலே என்று கருத்து. 1

---

விரோதியான அசுரத்தன்மை உடையவர்கள் பக்கலிலேயாம்படி அவர்களுக்குத் தீமைகளை விளைவிக்கும் ஈட்டியாகிய ஆயுதத்தை உடையவனே! இப்படி அநுபவிக்கப்படுமவனாய், விரோதியைப் போக்குமவனாய், அடியார் திறத்து ஒருதலைச் சார்புடையவனான உன்னை, உன் இனிமையை அறிந்து உன்னை, ஒழியச் செல்லாத நான், இனி விடாதபடி நிலையாக பற்றினேனாக நீ திருவுள்ளம் பற்று என்கிறார். "செய்கும், தாவரும்" என்று சொல்லாய் - செய்யப்பட்டுக் கடக்கவரிய என்றுமாம். "குந்தம் என்று மரமாய், அதின் வெளுப்பையிட்டு சுத்தியைக் காட்டுகிறது" என்றும் சொல்லுவர். "பொல்லா" என்று - எதிர்மறை இலக்கணையாலே அழகைச் சொல்லுகிறது. "என்பொல்லா' என்று - தம்மை மற்றவர்கட்கு ஆட்படாது எம்பெருமானுக்கே அடிமையாம்படி பண்ணியது அவ்வழகாலே என்று கருத்து. குறிப்பு - வடிவு - தன்மை? வானேறே - இடவாகுபெயர். குந்தா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். செய், குந்தா, வரும் என்று பிரித்தகு சீயர் உரை. 1

2.6.2 சிக்கெனச் சிறிதோ ரிடமும் புறப்படாத் தன்னுள்ளே
உலகுகள்
ஒக்கவே விழுங்கிப் புகுந்தான் புகுந்ததற்பின்
மிக்கஞான வெள்ளச் சுடர்விளக்காய்த் துளக்கற்
றமுதமாய் எங்கும்
பக்கநோக் கறியான் என் பைந்தா மரைக்
கண்ணனே.

அவ: அநந்தரம், தம்முடைய பக்கல் கலந்து அவன் உஜ்ஜவல ஸ்வரூபனாய்க் கொண்டு ஓரிடத்தில் அந்யபரதையற்று இரா நின்றான் என்கிறார்.

அல்பமான தேசமும் புறம்பு போகாதபடி உலகுகளைத் தன் ஸங்கல்பத்துக்குள்ளே ஏகப்ரகாரமாக அடக்கி, இனி ஒரு காலும் புறப்படாதபடி (என்னுள்ளே) புகுந்தான்; புகுந்தபின் மிகுத்து வருகிற ஜ்ஞாநபூர்த்தியாகிற ப்ரபைக்கு ஆச்ரயமான (ஸ்வரூபமாகிற) தேஜோத்ரவ்யமாய் (நான் சிக்கெனப் பிடித்த பின்பு விச்லேஷாதிசங்கையால் வந்த) நடுக்கமும் தீர்ந்து நிரதிசய

2.6.2. பின்னர், தம்முடைய பக்கல் கலந்து எம்பெருமான் ஒளியுடையவனாய்க் கொண்டு ஓரிடத்தில் ஆழ்வாரைத் தவிர பிறரிடத்தில் பற்றற்று இரா நின்றான் என்கிறார்.

சிறியதோர் தேசமும் வெளியே போகாதபடி உலகுகளைத் தன் நினைவுக்குள்ளே ஒருமனதாக அடக்கி இனி ஒருகாலும் புறப்படாதபடி என்னுள்ளே புகுந்தான்; புகுந்தபின் மிகுதியாக வருகிற ஞானவெள்ளமாகிற ஒளிக்கு இருப்பிடமான ஒளிவிளக்காய், நான் சிக்கெனப் பிடித்தபின்பு பிரிவின் சந்தேகத்தால் வந்த நடுக்கமும் தீர்ந்து எல்லையில்லாத

போக்யபூதனுமாய், என்னையே பார்த்திருக்கிற அழகிய தாமரை போன்ற கண்ணையுடையவன் ஓரிடத்திலும் பக்கத்தில் நோக்க அறிகிறிலன். என் பக்கல் கண்ணையுடையவன் ஓரிடத்திலும் பக்கத்தில் நோக்க அறிகிறிலன். என் பக்கல் அபிநிவேசம் பத்நீபரிஜநாதிகள் பக்கலிலும் காண்கிறிலன் என்று கருத்து. ஸ்வரூபாதிகளில் அவனுக்குண்டான ஸ்புரிதப்ரகாசமும் ஸ்வஸம்ச்லேஷமடியாக என்று நினைக்கிறார். 2

2.6.3 தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவும்
தலைமகனைத் துழாய்விரைப்
பூமருவு கண்ணியெம் பிரானைப் பொன்மலையை
நாமருவி நன்கேத்தி யுள்ளி வணங்கி நாமகிழ்ந்
தாடநாவலர்
பாமருவி நிற்கத்தந்த பான்மையே(ய்) வள்ளலே.

அவ: தன்னைக் கரணத்ரயத்தாலும் நிரந்தராநுபவம் பண்ணுவித்த மஹோதாரனானவன் என்னையொழிய அறிகிறிலன் என்கிறார்.

அமுதனுமாய், என்னையே பார்த்திருக்கிற அழகிய தாமரை போன்ற கண்ணையுடையவன் ஓரிடத்திலும் பக்கத்தில் நோக்க நினைக்கமாட்டான். என் பக்கல் உள்ள ஆசை, பிராட்டி, பணிபுரிபவர்கள் முதலானோர் பக்கலிலும் காண்கிறதில்லை என்றபடி. ஸ்வரூபத்திலும் ஒளியான ஞானத்திலும் அவனுக்கு உண்டான அதிக ஒளியும் தம்முடைய பக்கலில் கலந்ததன் காரணமாக என்று நினைக்கிறார். குறிப்பு:புறப்படா- ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். பை-அழகிய - 'வாடாத' என்று பொருளுக்கு பொருள் கொடுத்தது காண்க. 2

தாமரை போன்ற கண்களையுடையனாய், (அவ்வழகாலே) நித்யஸூரிகள் நிரந்தரமாகப் புகழும்படியான மேன்மையையுடையவனாய், விரையும் பூவும் மருவின துழாய்மாலையையுடையவனாய்க் கொண்டு எங்களுக்கு ஸ்வாமியாய், (எங்களோட்டைச் சேர்த்தியாலே) பொன்மலை போல் ஓங்கி உஜ்ஜ்வலனான தன்னை நாங்கள் (நிகர்ஷம் பார்த்து அகலாதே) மருவி (ஸூரிகளோபாதி அங்குத்தைக்குத் தகுதியாம்படி) நன்றாக ஏத்தி, அவர்கள் சிந்தையுள் வைக்குமா போலே நினைத்து, ("வணங்கி வழிபடும்" என்கிறபடியே) திருவடிகளிலே விழுந்து, (இப்படி கரணத்ரயத்தாலுமுண்டான அனுபவத்தாலே,) நாங்கள் ஆநந்திகளாய், ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணும்படியாக நாவிலே அலருகிற பாவிலே

---

2.6.3. பின்னர், தன்னை மூன்று உறுப்புக்களாலும் எப்போதும் அநுபவிக்கும்படி பண்ணிவைத்த பேருதவி செய்தவனான எம்பெருமான் என்னை ஒழிய அறிகிறிலன் என்கிறார்.

தாமரை போன்ற கண்களையுடையனாய், அவ்வழகாலே நித்யசூரிகள் எப்போதும் புகழும்படியான மேன்மையை யுடையவனாய், வாசனையும் பூவும் பொருந்தியுள்ள திருத்துழாய்மாலையையுடையவனாய்க் கொண்டு எங்களுக்குத் தலைவனாய், எங்களோடு உள்ள சேர்த்தியாலே பொன் மலை போலே ஓங்கி ஒளி நிறைந்த தன்னை, நாங்கள் எங்கள் தாழ்ச்சி பார்த்து அகலாமல் மருவி, நித்யசூரிகளைப்போல அந்த இடத்துக்குத் தகுதியாம்படி நன்றாக ஏத்தி, அவர்கள் சிந்தையுள் வைக்குமாப்போலே நினைத்து, 'வணங்கி வழிபடும்' என்கிறபடியே திருவடிகளிலே விழுந்து, இப்படி மனம், வாய், உடல் ஆகிய மூன்று உறுப்புக்களாலும் உண்டான அநுபவத்தாலே நாங்கள் மகிழ்ச்சி அடைந்தவர்களாய், பரபரப்புடன் ஆடும்படியாக நாவிலே உண்டாகிற பாவிலே

மருவி திருவாய்மொழி பாடி நிற்கும்படி, உபகரித்த ஸ்வபாவத்துக்குப் பொருந்தின ஔதார்யகுண விசிஷ்டனானவன் - "எங்கும் பக்க நோக்கறியான்" என்று அந்வயம். பான்மை - ஸ்வபாவம். 3

2.6.4 வள்ளலே! மதுசூதனா! என்மரகத மலையே! உனை
நினைந்
தெள்கல்தந்த வெந்தாயுன்னை யெங்ஙனம்
விடுகேன்
வெள்ள மேபுரை நின்புகழ் குடைந்தாடிப்
பாடிக்களித் துகந்துகந்து
உள்ளநோய்க ளெல்லாம்துரந் துய்ந்து போந்திருந்தே.

அவ: அநந்தரம், ஸர்வப்ரகாரோபகாரகனான உன்னை விடப் போமோ? என்கிறார்.

(அர்த்தித்வ நிரபேக்ஷமாக உபகரிக்கும்) மஹோ தாரனாய், உபகாரம் கொள்ளுகிற என் விரோதியை

மருவி திருவாய்மொழி பாடி நிற்கும்படி உதவி செய்த தன்மைக்குப் பொருந்தின கொடை குணத்தோடு கூடியவன் எங்கும் பக்கம் நோக்கறியான் என்று கொண்டு கூட்டுக. . பான்மை - தன்மை. குறிப்பு - பான்மை ஏய் என்று சீயர் பாடம். நாம்+மருவி - நாமருவி. 3

2.6.4. பின்னர், எல்லாவிதத்தாலும் உதவி செய்யுமவனான உன்னை (எம்பெருமானை) விடமுடியுமோ? என்கிறார்.

யாசிக்கும் தன்மையை விரும்பாமல் உதவி செய்யும் பெரிய வள்ளலாய், உதவி பெறுகிற என் விரோதியை

மதுவை அழித்தாப்போலே அழிக்குமவனாய், (நிவ்ருத்த விரோதிகனான) எனக்கு (உத்துங்கமாய், உஜ்ஜ்வலமான) மரகதமலைபோலேயிருக்கிற வடிவை அனுபவிப்பிக்கு மவனாய், "மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர் தோள் கைவிட்டு" என்கிறபடியே) உன்னை அநுஸந்தித்து (இதர விஷயங்களை) இகழும் ஸ்வபாவத்தைத் தந்த ஸ்வாமியே! பெருங்கடல்போலே அபரிச்சிந்நமான உன்னுடைய குணங்களை அவகாஹித்து அநுபவித்து (அந்த ப்ரீதியாலே) ஆடுவது பாடுவதாய், களித்து (அது ஓரளவில் நில்லாதே) மேன்மேலென உகந்து (அஹங்காரார்த்தகாமங்கள், அநுபவ விச்லேஷம், நிகர்ஷா நுஸந்தாநம் முதலாக) உள்ள நோய்களையெல்லாம் தூரப் போம்படி அகற்றி, லப்தஸத்தாகனாய் (ஸம்ஸாரஸ்திதி குலைந்து) உன்னளவும் போந்து, गायन्तास्ते (காயந்நாஸ்தே என்று) அநுபவித்துக் கொண்டிருக்கப் பெற்று

மது என்னும் அரக்கனை அழித்தாற்போலே அழிக்குமவனாய், விரோதிகள் தொலைந்த எனக்கு, உயர்ந்து பளபளப்பான மரகதமலை போலே இருக்கிற திருமேனியை நான் அநுபவிக்கும்படி செய்தவனாய், 'மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர் தோள் கைவிட்டு',(மூ.தி.14) என்கிறபடியே உன்னை நினைத்து பிற விஷயங்களை இகழும் தன்மையைத் தந்த தலைவனே! பெருங்கடல் போலே அளவிடமுடியாத உன்னுடைய குணங்களில் ஆழ்ந்து அநுபவித்து, அந்த பக்தியாலே ஆடுவதும் பாடுவதுமாய்க் களித்து, அது ஓர் அளவில் நில்லாமல் மேன்மேலும் உகந்து, அகங்காரம், செல்வம், காமம், அநுபவத்தில் பிரிவு, தாழ்ச்சி நினைவு முதலாக உள்ள நோய்களையெல்லாம் தூரப்போம்படி அகற்றி, இருப்பு நிறம் பெற்றவனாய்ப் பிறவியின் நிலைமை அழிந்து உன் அளவும் வந்து, 'ஸாமகானம் பண்ணிக்கொண்டு இருக்கிறான்' என்று அநுபவித்துக் கொண்டிருக்கப்பெற்று

வைத்து (இப்படி உபகாரகனான) உன்னை எங்ஙனேவிடுவேன்?

2.6.5 உய்ந்து போந்தென் னுலப்பிலாத
வெந்தீவினைகளை நாசஞ் செய்துன
தந்தமில் அடிமை அடைந்தேன் விடுவேனோ?
ஐந்து பைந்தலை யாடரவணை மேவிப்பாற்கடல்
யோக நித்திரை
சிந்தை செய்த வெந்தாயுன்னைச் சிந்தை செய்து
செய்தே.

அவ: அநந்தரம், த்வதநுபவஜநித கைங்கர்ய போகத்தைப் பெற்ற நான் விடும்படியென்? என்கிறார்.

திருப்பாற்கடலிலே ஐந்து வகையாய் விரிந்த பணங்களையுடையவனாய், அசைந்து வருகிற திருவர வணையின் மேலே பொருந்தக் கண்வளர்ந்து ஜகத்ரக்ஷண யோகத்தில் நிப்ருததையாலே உறங்குவாரைப்

---

வைத்து - பாக்கியம் செய்து வைத்து, இப்படி உதவுபவனான உன்னை எங்ஙனே விடுவேன்? என்கிறார். குறிப்பு - 'உள்ள நோய்' அகங்காரத்தை நோயாகக் கொள்ளலாம். அகங்காரத்தால் உண்டான செல்வம், காமம் என்றும் கொள்ளலாம். 4

2.6.5. பின்னர், உன்னை அநுபவித்ததனால் உண்டான கைங்கர்ய அநுபவத்தைப் பெற்ற நான் உன்னை விடும்படி என்? என்கிறார்.

திருப்பாற்கடலிலே ஐந்து வகையாய் விரிந்த பணங்களையுடையவனாய், அசைந்து வருகிற திருவர வணையின் மேலே பொருந்தக் கண்வளர்ந்து உலகைக் காப்பாற்றும் உபாயத்தின் ஒரே நினைவாலே உறங்குவாரைப்

போலே (ரக்ஷணப்ரகார) சிந்தை பண்ணின என் ஸ்வாமியே! (இப்படி ரக்ஷகத்வத்தை ப்ரகாசிப்பித்த) உன்னை நிரந்தரானுஸந்தாநம் பண்ணி லப்தஸ்வரூபனாய், அந்யபரரான ஸம்ஸாரிகளில் வ்யாவ்ருத்தனாய் நானே எனக்குத் தேடிக்கொண்டு அஸங்க்யாதமாய், க்ரூரமாய், அக்நிகல்பமான பாபங்களை நசிக்கும்படிபண்ணி (ப்ராப்தனான) உன்னுடைய அபரிச்சிந்நமான கைங்கர்ய போகத்தைக் கிட்டப்பெற்ற நான் விட க்ஷமரல்லன்; ஆச்ரிதவிஷயத்தில் உனக்குப் பொருத்த மில்லாமல் விடுகிறேனோ? அவர்கள் ரக்ஷணத்தில் உனக்குச் சிந்தையில்லாமல் விடுகிறேனோ? உன் அநுபவத்தில் எனக்கு சீலநமில்லாமல் விடுகிறேனோ? என் ஸ்வரூபம் ப்ரகாசியாமல் விடுகிறேனோ? விஷயாஸக்தரான ஸம்ஸாரிகளோடு பொருத்தம் உண்டாய் விடுகிறேனோ? ப்ரதிபந்தகமான பாபம்

---

போலே காப்பாற்றும் முறையைப் பற்றிய சிந்தனை பண்ணின என் தலைவனே! இப்படிக் காப்பாற்றும் தன்மையை எனக்குத் தெரிவித்த உன்னை இடைவிடாமல் நினைக்கும்படி பண்ணி இயல்பான அறிவைப் பெற்றவனாய், பிறவிகளில் அழுந்து வார்களைக் காட்டிலும் வேறுபட்டவனாய், நானே எனக்குத் தேடிக் கொண்டு, எண்ணிக்கை இல்லாததாய், கொடியதாய், தீ போல பாபங்களை அழியும்படி பண்ணி உரிய தலைவனான உன்னுடைய எல்லையற்ற கைங்கர்ய அநுபவத்தைக் கிட்டப் பெற்ற நான் உன்னை விடமுடியுமோ என்கிறார். அடியார் திறத்து உனக்குப் பொருத்தமில்லாமல் விடுகிறேனோ? (அரவணை மேவி); இல்லை. அவர்களைக் காப்பதில் உனக்குச் சிந்தையில்லாமல் விடுகிறேனோ? (சிந்தை செய்த எந்தாய்) இல்லை; உன் அநுபவத்தில் எனக்குச்சிந்தை இல்லாமல் விடுகிறேனோ? (உன்னைச் சிந்தை செய்துசெய்து) இல்லை; என் ஸ்வரூபம் வெளிப்படாமல் விடுகிறேனோ? (உய்ந்து) இல்லை; வேறு விஷயத்தில் பற்றுள்ள ஸம்ஸாரிகளோடு பொருத்தம் உண்டாய் விடுகிறேனோ? (போந்து) இல்லை விரோதியான

உண்டாய் விடுகிறேனோ? ப்ராப்யமான கைங்கர்யத்தில் சுவடறியாமல் விடுகிறேனோ? இப்படி லப்தாபீஷ்டனான நான் விடுவேனோ? என்று கருத்து.

2.6.6 உன்னைச் சிந்தை செய்துசெய் துன்நெடு
மாமொழியிசை பாடியாடிஎன்
முன்னைத் தீவினைகள் முழுவே ரரிந்தனன்யான்
உன்னைச் சிந்தையினா லிகழ்ந்த விரணிய
னகல்மார்வம் கீண்டஎன்
முன்னைக் கோளரியே! முடியாத தென்னெனக்கே.

அவ: அநந்தரம், இந்தக் கைங்கர்யலாபத்தாலே தம்முடைய ஸர்வாபீஷ்டமும் தலைக்கட்டிற்று என்கிறார்.

(வகுத்த ஸ்வாமியுமாய் உபகாரகனுமான) உன்னை நெஞ்சாலே அநாதரித்த ஹிரண்யனுடைய பேரிடமுடைத்தான மார்வை அநாயாஸேந கிழித்தவனாய், விரோதி நிவ்ருத்திக்கு

பாபம் உண்டாய் விடுகிறேனோ? (என் உலப்பிலாத வெம்தீ வினைகளை நாசம் செய்து) இல்லை; வகுத்த கைங்கர்யத்தில் பெருமை அறியாமல் விடுகிறேனோ? (உனது அந்தமில் அடிமை அடைந்தேன்) இல்லை; இப்படி விருப்பத்தைப் பெற்றவனான நான் விடுவேனோ? விடமுடியாது என்றபடி.

2.6.6. பின்னர், இந்தக் கைங்கர்ய லாபத்தாலே தம்முடைய எல்லா விருப்பங்களும் தலைக்கட்டிற்று என்கிறார்.

வகுத்த தலைவனாய் உதவுபவனான உன்னை நெஞ்சாலே அலட்சியப்படுத்திய இரணியனுடைய அகண்ட பெரிய மார்வை சிரமமின்றி கிழித்தவனாய், விரோதியை

நிதர்சநபூதனாய், (ஆச்ரிதனான ப்ரஹ்லாதன் நினைவுக்கு) முற்கோலின நரஸிம்ஹமானவனே! (இப்படி ஆபத்ஸகனாய், ப்ராப்தனாய், போக்யனான) உன்னை நிரந்தராநுஸந்தாநம் பண்ணி, (அந்த ப்ரீதியாலே) உத்துங்கமான உன்னுடைய குணவாசகமான திருவாய்மொழியை (அவ்விஷயத்துக்கு ஈடான) பெருமையுடைய இசையோடே பாடி (அப்பாட்டுக்கு ஈடான அபிநயம் தோற்றும்படி) ஆடி, (இப்படி கரண த்ரயத்தாலும் உண்டான போகத்தாலே) என்னுடைய அநாதி காலார்ஜிதபாபங்களை नोपजनं स्मरन् (நோபஜநம் ஸ்மரந்) என்னும் கணக்கிலே,} நான் ஒன்றொழியாமல் வேரோடே அரிந்தேன். (போக்த்ருத்வம் இத்தலையிலே ஆனவோபாதி விரோதி நிவர்த்தகத்வமும் இங்கேயாகக் குறையில்லையிறே -

---

அழிக்கைக்கு எடுத்துக்காட்டானவனாய், தன்னைச் சரண மடைந்தவனான பிரகலாதன் நினைவுக்கு முன்பே யோசித்த நரசிம்மமானவனே! இப்படி ஆபத்தில் தோழனாய், அடையப் படுமவனாய், அழகனான உன்னை எப்போதும் நினைத்துக் கொண்டு, அந்த ஆசையாலே உயர்ந்ததான உன்னுடைய குணங்களைச் சொல்லுமவதான திருவாய்மொழியை, அவ்விஷயத்துக்கு ஈடான பெருமையுடைய இசையோடே பாடி, அப்பாட்டுக்கு ஈடான அபிநயம் தோற்றும்படி ஆடி இப்படி மனம், வாக்கு, உடல் ஆகிய மூன்று உறுப்பாலும் உண்டான அநுபவத்தாலே என்னுடைய ஆதி தெரியாத காலம் முதற்கொண்டு உண்டான பாபங்களை 'உற்றார் பக்கலிலிருக்கிற தனது உயிர் நீத்த உடலையும் நினையாதவனாய் இருக்கிறான் முக்தன்' (சா.உ.8-12) என்னும் கணக்கிலே நான் ஒன்றொழியாமல் வேரோடே போக்கினேன். உன்னை அநுபவிக்கும் தன்மை இவ்விடத்திலே (ஆழ்வாரிடம்) உண்டானது போலே, விரோதியைப் போக்கும் தன்மையும் இவ்விடத்திலேயே ஆகக் குறையில்லை அன்றோ -

ஸ்வரூபம் தத்ப்ரகாரமான பின்பு) எனக்கு தலைக்கட்டாதது எது தான்? ஸர்வாபீஷ்டமும் ஸித்தமன்றோ? என்று கருத்து. 6

2.6.7 முடியாத தென்னெனக் கேலினி முழுவேழுலகு
முண்டான் உகந்துவந்
தடியேனுள் புகுந்தா னகல்வானு மல்லனினி
செடியார் நோய்க ளெல்லாம் துரந்தெமர் கீழ்மே
லெழுபிறப்பும்
விடியாவெந் நரகத்தென்றும் சேர்தல் மாறினரே.

அவ: அநந்தரம், என் பக்கல் பண்ணின உபகாரம் என் குலத்தில் ஸம்பந்தித்தார் எல்லாரும் உஜ்ஜீவிக்கும்படியாயிற்று என்கிறார்.

ஸமஸ்த லோகமும் (தன் செல்லாமையாலே

(ஆழ்வாரின்) ஆத்ம ஸ்வரூபம் அவனுக்குப் பிரிக்க முடியாத அடைகொளியான பின்பு எனக்குத் தலைக்கட்டாதது எதுதான்? எல்லா விருப்பங்களும் உறுதியன்றோ என்றபடி. குறிப்பு - என் முன்னை-என் பொருள் எழுதவில்லை. என் என்பதே விரோதி யாகக்கருதி பொருள் சொல்லாமல் இருக்கலாம். கொண்டு கூட்டுதல் - உன்னைச் சிந்தையினால் என்று தொடங்கி என் முன்னைக்கோளரியே உன்னைச் சிந்தை செய்து......அறிந்தனன் யான்; இனி எனக்கு முடியாததென்? என்று உரை. 6

2.6.7 பின்னர், என் (ஆழ்வார்) பக்கல் பண்ணின உதவி என் குலத்தில் தொடர்புடையார் எல்லாரும் உய்யும்படி ஆயிற்று என்கிறார்.

எல்லா உலகமும் தான் தரியாமையாலே

தனக்குள்ளேயாம்படி அவற்றை) அமுது செய்தவன் (அச்செல்லாமை தனக்கு என் பக்கலிலே உண்டாய், அதுக்கு மேலே) ஆதராதிசயத்தையுடையனாய்க்கொண்டு என்னுடைய சேஷத்வ ஸம்பந்தமே பற்றாசாக உள்ளே வந்து புகுந்தான்; இனி அந்த லோகங்கள் போலே) புறம்பு போமவனும் அல்லன்; (இதடியாக) கீழும் மேலும் எழு பிறப்பிலும் என்னோடு ஸம்பந்தமுடையார் செடிபோலே செறிந்த (அவித்யா கர்ம வாஸநாதிகளான) ஸமஸ்த வ்யாதிகளையும் கடக்க ஓட்டி ஒருகால் முடிந்து வெளிச்சிறப்பதன்றியே நிரதிசயதாபகரமான (ஸம்ஸாரமாகிற) நிரயத்திலே யாவதாத்மபாவி கிட்டுகை தவிர்ந்தார்கள். இப்படி குலஸம்பந்தி பர்யந்தமாக என்னைப் பக்ஷபதித்த பின்பு எனக்காகில் முடியாதது உண்டோ? என்னோடு அநுபந்தித்ததாகில் எல்லாக் காரியமும் தலைக்கட்டும் என்று கருத்து. 7

தனக்குள்ளேயாம்படி அவற்றை உண்டவன், அத்தரியாமை தனக்கு என் பக்கலிலே உண்டாகி, அதுக்கு மேலே அதிகமான ஆசையை உடையவனாய் என்னுடைய அடிமை உறவையையே பற்றாசாக உள்ளே வந்து புகுந்தான்; இனி அந்த உலகுகள் போலே வெளியே போமவனும் அல்லன்; இதுக்குக் காரணமாக கீழும் மேலும் ஏழு பிறப்பிலும் என்னோடு உறவுடையார் புதர் போலே செறிந்த அறிவின்மை புண்யபாவ வினைகள், பாபகார்யத்தால் ஏற்பட்ட பழக்கம், ருசி முதலான எல்லா நோய்களையும் தூர ஓட்டி, ஒருதடவை முடிந்து அறிவுச் சிறப்பு பிறப்பதன்றியே எல்லையான தாபத்தால் உண்டான பிறவியாகிற நரகத்தில் ஆத்மா உள்ள வரையில் கிட்டுகை தவிர்ந்தார்கள். இப்படி குலமக்கள்வரை என்னிடம் ஓரத்தன்மை காட்டியபின்பு எனக்காகில் முடியாதது உண்டோ? என்னோடு (ஆழ்வாரோடு) ஸம்பந்தம் பெற்றதாகில் எல்லாக் காரியமும் தலைக்கட்டும் என்றபடி. 7

2.6.8 மாறி மாறிப் பலபிறப்பும் பிறந்தடியை
யடைந் துள்ளந்தேறி
ஈறிலின்பத் திருவெள்ளம் யான் மூழ்கினன்
பாறிப்பாறி யசுரர்தம் பல்குழாங்க ணீறெழப்
பாய்பறவையொன்று
ஏறி வீற்றிருந் தாயுன்னை யென்னுள்
நீக்கேலெந்தாய்.

அவ: அநந்தரம், இப்பேறு எனக்கு விச்சேதியாதொழிய வேணும் என்கிறார்.

(தேவதிர்யங்மநுஷ்யஸ்தாவராதிகளான) நாநாஜந்மங்களிலும், (ஒரு கால் பிறந்ததிலே) மீண்டும் மீண்டும் பிறந்து போரச் செய்தே உன் திருவடிகளைக்கிட்டி (சேஷத்வ ஜ்ஞானத்தையுடையேனாய்) ("நீயே உபாயபூதன்" என்கிற) நெஞ்சில் தே(தோ)ற்றத்தையுடையேனாய், (உன்னுடைய அநுபவத்தாலே ஜநிதமான) முடிவில்லாத ஆநந்தமாகிற பெரிய வெள்ளத்திலே (அஹமர்த்தபூதனான) நான் அவகாஹித்தேன்;

---

2.6.8. பின்னர், இப்பேறு எனக்கு இடைவிடாதிருக்க வேணும் என்கிறார்.

தேவதை, பிராணி, மனிதன், தாவரம் முதலான பல பிறப்புகளிலும் ஒருதடவை பிறந்ததிலே மீண்டும் மீண்டும் பிறந்து வரச்செய்தே, உன் திருவடிகளைக் கிட்டி அடிமை செய்யும் அறிவையுடையேனாய், 'நீயே உபாயமானவன்' என்று நெஞ்சில் தெளிவையுடையேனாய், உன்னுடைய அநுபவத்தாலே உண்டான முடிவில்லாத ஆனந்தமாகிற பெரிய வெள்ளத்திலே ஆத்மா என்ற சொல்லுக்குரியனான நான் மூழ்கினேன்;

அஸுரர்களுடைய பலவகைப்பட்ட குழாங்களானவை பஹுமுகமாக சிதிலமாய்த் தூளியாய்க் கிளரும்படி (அவர்களுடைய ஸேநாமத்யத்திலே) பாயக்கடவனான அத்விதீயனாயுள்ள பெரிய திருவடியின் மேலே ஏறி உன் மேன்மை தோன்றும்படி இருந்த என் நாதனே! (ப்ராப்தனுமாய், சரண்யனுமாய், போக்யனுமாய், விரோதி நிவர்த்தகனுமான) உன்னை (உனக்கு ஸர்வப்ரகார பரதந்த்ரனான) என்னுள்ளினின்றும் அகற்றாதொழியவேணும். 8

2.6.9 எந்தாய்! தண்திருவேங்கடத்துள் நின்றாய்! இலங்கை செற்றாய்! மராமரம்
பைந்தா ளேழுருவ வொருவாளி கோத்தவில்லா!
கொந்தார் தண்ணந் துழாயினா யமுதே! உன்னை யென்னுள்ளே குழைத்தவெம்
மைந்தா! வானேறே! யினியெங்குப் போகின்றதே?

அவ: அநந்தரம், நீயே க்ருஷிபண்ணிக்கலந்து இனி எங்கேறப் போவது? என்கிறார்.

---

அசுரர்களுடைய பலவகைப்பட்ட கூட்டங்களானவை பலவாறு விண்டுவிடுதலாய், பொடியாய் மேல் எழும்படி அவர்களுடைய சேனை நடுவில் பாயும் ஒப்பற்ற பெரிய திருவடியின் மேலே ஏறி உன் மேன்மை தோன்றும்படி இருந்த என் தலைவனே! உரியனாய், காப்பவனாய், இனிமை நிரம்பியவனாய், விரோதியை அழிப்பவனான உன்னை, உனக்கு எல்லா முறையிலும் வசப்பட்டவனான என் மனதில் நின்றும் நீங்காது இருக்க வேணும் என்கிறார். குறிப்பு: இன்பம்+அத்து - இன்பத்து -அத்துச்சாரியை. இன்பமாகிற-அல்வழிச்சாரியை 8

2.6.9. பின்னர், நீயே முயன்று கலந்து எங்கேறப் போவது? என்கிறார்.

எனக்கு நிருபாதிகஸ்வாமியாய், ச்ரமஹரமான திருமலையிலே எழுந்தருளி நின்று ஸுலபனாய் (ஆச்ரிதவிரோதிகளுக்கு வாஸஸ்தாநமான) லங்கையை அழித்தவனாய், மராமரங்களினுடைய பருத்த அடி ஏழும் உருவும்படி ஒரு வாளியை (அநாயாஸேந) கோத்த வில்லை யுடையனாய், கொத்தாய்ச்செறிந்து குளிர்ந்த திருத்துழாயாலே அலங்க்ருதனாய், நித்யபோக்யனாய்க்கொண்டு ஏவம்விதனான உன்னை என்னுள்ளே ஏகத்ரவ்யமாம்படி கலசின நித்ய யௌவந ஸ்வபாவனாய் (இந்நிலையாலே) ஸூரிகளுக்கும் செருக்கனாம்படி நின்றவனே! (அஸாதாரண ஸம்பந்தத்தையும், ஸௌலப்யத்தையும், விரோதி நிவர்த்தகத்வத்தையும் காட்டி மஹாராஜரைப்போலே என்னையும் விச்வஸிப்பித்து, ஒப்பனை யழகைக்காட்டி எனக்கு நித்யபோக்யனாய், பிரிக்க

---

எனக்கு இயற்கையான தலைவனாய், துன்பத்தைப் போக்குவதான திருமலையிலே எழுந்தருளி நின்று எளியவனாய் அடியார் விரோதிகளுக்கு இருப்பிடமான இலங்கையை அழித்தவனாய், மராமரங்களினுடைய பருத்த அடி ஏழும் ஊடுருவிச் செல்லும்படி ஓரம்பை சிரமமின்றி கோத்த வில்லையுடையவனாய், கொத்தாய்ச் செறிந்து குளிர்ந்த திருத்துழாயாலே அலங்கரிக்கப்பட்டவனாய், எனக்கு இடைவிடாது அநுபவிக்கப்படுமவனாய்க் கொண்டு இப்படிப்பட்ட உன்னை என்னுள்ளே ஒரே பொருளாம்படி கலந்த மாறாயிளமையனான தன்மையனாய் இந்நிலையாலே நித்யசூரிகளுக்கும் செருக்கனாம்படி நின்றவனே! தனக்கே உரிய உறவையும், எளிமையையும், விரோதியை அழிக்கும் தன்மையையும் காட்டி சுக்ரீவனைப் போலே என்னையும் நம்பும்படி செய்து, ஒப்பனை அழகைக் காட்டி, எனக்கு இடையறாது இனியனாய், பிரிக்க

வொண்ணாதபடி கலந்து, அத்தாலே இளகிப்பதித்து, இத்தாலே நித்யவிபூதிக்கும் மேலான மேன்மையையுடைய நீ) இனி (இந்த ஸம்ச்லேஷத்தை விட்டு) எங்கே போகிறது? இனிப்போகாதே என்று கருத்து. 9

2.6.10 போகின்ற காலங்கள் போய காலங்கள் போகு
காலங்கள் தாய்தந்தையுயி
ராகின்றா யுன்னைநா னடைந்தேன் விடுவேனோ?
பாகின்ற தொல்புகழ் மூவுலகுக்கும் நாதனே! பரமா!
தண் வேங்கட
மேகின்றாய்! தண்டுழாய் விரைநாறு கண்ணியனே!

அவ: அநந்தரம், உன் உபகாரங்களைக் கண்ட நான் உன்னைப் பெற்றுவைத்து விட க்ஷமனோ? என்கிறார்.

வர்த்தமாநமாயும், பூதமாயும், ஆகாமியாயுமுள்ள காலத்திலும், தாயும், தந்தையும், தன் ஆத்மாவும் தனக்குப்

முடியாதபடி கலந்து, அத்தாலே இளகிப் பதித்து, இத்தாலே நித்யவிபூதிக்கும் (பரமபதத்துக்கும்) மேலான மேன்மையை யுடைய நீ இனி என்னோடு கலந்த இந்தக் கலவியை விட்டு எங்கே போகிறது? இனிப் போக இயலாதே என்றபடி. குறிப்பு: வான் - இடவாகு பெயர். 9

2.6.10. பின்னர், உன் உதவிகளைக் கண்ட நான் உன்னைப் பெற்று வைத்து விடவல்லனோ? என்கிறார்.

நிகழ்காலமாயும், இறந்தகாலமாயும், வருங் காலமாயுமுள்ள காலத்திலும் தாயும், தந்தையும், தன் ஆத்மாவும் தனக்குப்

பண்ணும் பரிவைப் பண்ணாநிற்பானாய், இப்படி ஸர்வதோ முகமான ரக்ஷணத்தாலே பரக்கிற அநாதிஸித்தமான குண ப்ரதையையுடையனாய்க்கொண்டு த்ரிவித சேதநா சேதநங்களுக்கும் நாதனாய், இப்பெருமைக்குத் தனக்கு மேலில்லாதவனாய், (இம்மேன்மையன்றியே) ச்ரமஹரமான திருமலையிலே மேவிநிற்கிற ஸௌலப்யத்தையுடையனாய், (இப்பரத்வ ஸௌலப்யங்களுக்கும் போக்யதைக்கும் ஸூசகமாய்,) குளிர்ந்த திருத்துழாயையுடைத்தாய், பரிமளம் ப்ரவஹிக்கிற மாலையையுடையவனே! ஏவம்விதனான உன்னை ஸம்ச்லேஷிக்கப் பெற்ற நான் விட க்ஷமனோ? 10

---

பண்ணும் பரிவைப் பண்ணுமவனாய். இப்படி எல்லாத் திசையிலும் காப்பாற்றுதலாலே பரவிக்கொண்டே இருக்கிற மிகப் பழமையான குணப்பெருமையையுடையவனாய்க் கொண்டு மூன்று விதமான அறிவுள்ள பொருள் (பத்தன், முக்தன். நித்யன்) மூன்று விதமான அறிவில் பொருள், (பிருகிருதி, பரமபதம், காலம்) ஆகியவற்றுக்கும் தலைவனாய், இப்பெருமைக்குத் தனக்கு மேல் இல்லாதவனாய், இம்மேன்மையன்றியே துன்பத்தைப் போக்குமதான திருமலையிலே பொருந்தி கண்டுபற்றுகைக்கு எளியனாய், இந்த மேன்மை, எளிமை அழகு ஆகியவற்றைக் குறிப்பதாய், குளிர்ந்த திருத்துழாய்மாலையையுடைத்தாய், வாசனை வீசுகின்ற தலை மாலையையுடையவனே? இப்படிப் பட்டவனான உன்னைக் கலந்த நான் விடவல்லேனோ? விடமுடியாது என்றபடி குறிப்பு - போகின்ற - நிகழ்காலமாயும், போய - இறந்தகாலமாயும், போகு - எதிர்காலமாயும் உள்ள காலங்கள்.. 'மூவுலகுக்கும் நாதனே' என்று மேன்மையும், 'தண்வேங்கடம் மேவுகின்றாய்' என்று எளிமையும், 'தண்துழாய் விரைநாறு கண்ணியனே' என்று அழகும் சொல்லப்பட்டது **காண்க.** 10

2.6.11 கண்ணித் தண்ணந் துழாய்முடிக் கமலத்
தடம்பெருங் கண்ணனைப் புகழ்
நண்ணித் தென்குருகூர்ச் சடகோபன் மாறன்
சொன்ன
எண்ணில் சோர்வி லந்தாதி யாயிரத்
துள்ளிவையுமோர் பத்திசையொடும்
பண்ணில் பாட வல்லாரவர் கேசவன்தமரே.

அவ: அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக பகவத் சேஷத்வ ஸித்தியை அருளிச்செய்கிறார்.

மாலாகாரமாய், குளிர்ந்த திருத்துழாயாலே அலங்க்ருதமான திருமுடியையும், கமலம் போலே தர்சநீயமாய், விசாலமாய், நீண்ட திருக்கண்களையுடையவனை (அவனுடைய ஆச்ரிதஸம்ச்லேஷகாரிதமான) குணப்ரதையைக் கிட்டி அழகிய திருநகரிக்கு நிர்வாஹகராய், "மாறன்" என்கிற குடிப் பேரையுடைய ஆழ்வார் அருளிச்செய்த பகவதபிப்ராயத்தைத் தப்பாத

2.6.11. பின்னர், இத்திருவாய்மொழிக்குப் பயனாக எம்பெருமானுக்கு அடிமைப்படக்கடவர்கள் என்று அருளிச்செய்கிறார்.

மாலையாக அமைந்த குளிர்ந்த திருத் துழாயாலே அலங்கரிக்கப்பட்டதான திருமுடியையும் தாமரை போலே அழகியதாய், அகண்டதாய் நீண்ட திருக்கண்களை உடையவனை, அவனுடைய அடியாரோடு கலத்தலாலுண்டான குணப்பெருமையைக்கிட்டி, அழகிய ஆழ்வார் திருநகரிக்குத் தலைவராய் 'மாறன்' என்கிற குடிப்பெயரையுடைய நம்மாழ்வார் அருளிச்செய்த, எம்பெருமான் எண்ணத்தைத் தப்பாத

அந்தாதியாய், (அடைவு குலைக்கவொண்ணாத) ஆயிரத்துள் அத்விதீயமான இவை பத்தையும் இசையோடேகூட பண்ணிலே பாடவல்லாரான அவர்கள் ஸர்வாதிகனான ஸர்வேச்வரனோடு அவ்யவஹித ஸம்பந்தயுக்தராவர்கள். எண்ணென்று - ஜ்ஞாநமாய். 'தத்வஜ்ஞாநத்தைத் தப்பாத ஆயிரம்' என்றுமாம். பண்ணென்று - ஸ்வரம். இசையென்று - கீதிப்ரகாரம். 11

இது முதலடியும் மூன்றாமடியும் அறுசீராய், அயலடியும், ஈற்றடியும் நாற்சீரான ஆசிரியத்துறை.

வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர் திருவடிகளே சரணம்

---

அந்தாதியாய், முறைமாற்ற முடியாத ஆயிரம் பாட்டினுள் ஒப்பற்றதான இவை பத்தையும் இசையோடு பண்ணிலே பாட வல்லரானவர்கள் எல்லாருக்கும் தலைவனான எம்பெருமானோடு இடைவிடாத உறவோடு (ஆண்டான்-அடியவன்) கூடியவராவார்கள். எண்ணென்று - ஜ்ஞாநமாய். அறிவிள்ள பொருள், அறிவில் பொருள், ஈச்வரன் என்ற 'தத்வஜ்ஞாநத்தைத் தப்பாத ஆயிரம்' என்றுமாம். பண்ணென்று - ஸ்வரம். ஒருவகை இசை. இசையென்று - கீதிப்ரகாரம். அதுக்கு மொழிவடிவு தருவது. குறிப்பு: மாறன்-குடிப்பெயர். எண்ணில்- முதல்நிலைத் தொழிற்பெயர். 11

இது முதலடியும் மூன்றாமடியும் அறுசீராய், இரண்டாமடியும், ஈற்றடியும் நாற்சீரான ஆசிரியத்துறை.

வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர் திருவடிகளே சரணம்.



## 2.7 கேசவன்தமர் ப்ரேவசம்

ஏழாம் திருவாய்மொழியில் - ஸ்வஸம்பந்தி பரம்பரா பர்யந்தமாக ஈச்வரன் பண்ணின பக்ஷபாதத்தாலே தம்மளவில் அவனுடைய அபிநிவேசாதிசயத்தைக் கண்டு உகந்து; ஸ்வஸாந்தாநிக விஷயத்தில் அவனுடைய ப்ரஸாத விசேஷத்தையும், அதுக்கடியான தம்மளவில் பக்ஷ பாதத்தையும், தத்கார்யமான உபகாரத்தையும் அவ்வுபகாரம் தம் குலத்திலுள்ளார்க்கும் ப்ராப்திபர்யந்தமான படியையும், இது அடியாக ஈச்வரனுக்குப் பிறந்த ஔஜ்ஜ்வல்யத்தையும், இதுக்கடைய ஹேதுவான க்ருபாபாரவச்யத்தையும், அநுபவிக்கைக்கு உறுப்பாக ஸத்வோத்தரமான சித்த ப்ரதாநத்தையும், பொல்லாநெஞ்சைப் போக்கினபடியையும், ப்ரேமயுக்தமான நல்ல நெஞ்சிலே புகுந்தபடியையும், அந்த

---

## 2.7 கேசவன்தமர் அவதாரிகை

ஏழாந்திருவாய்மொழியில் - தம்மோடு தொடர்புடையார் பரம்பரை வரை எம்பெருமான் பண்ணின ஒருதலைச்சார்பாலே தம்மளவில் அவனுடைய அதிகமான ஆசையைக் கண்டு உகந்து; தம்முடைய குலத்திலுள்ளார் திறத்து அவனுடைய அருளின் விசேஷத்தையும், அதுக்குக்காரணமான தம்மளவில் ஓரத்தன்மையையும், அதன் செயலான உதவியையும், அவ்வுதவி தம் குலத்திலுள்ளார்க்கும் அவனை அடையும் வரையிலான படியையும், இதன் காரணமாக எம்பெருமானுக்குப் பிறந்த ஒளியையும், இதுக்கெல்லாம் காரணமான கருணைக்கு வசப்பட்டு இருக்கும் தன்மையையும், அநுபவிக்கைக்கு உறுப்பாக ஸத்வகுண வளர்ச்சிக்கான மனதைக் கொடுத்தலையும், பொல்லா நெஞ்சைப் போக்கினபடியையும், அன்போடு கூடின நல்ல நெஞ்சிலே புகுந்தபடியையும், அந்த

நெஞ்சு அவனை விடாதொழிய வேணுமென்கிற அபேக்ஷையையும், இன்னின்னபடியாக அவன் தன்னை முழுக்கக் கொடுத்த ஔதார்யத்தையும், இவ்வௌதார்யாதிசயம் அதிசயித ஜ்ஞாநர்க்கும் அபரிச்சேத்யம் என்னுமிடத்தையும் அருளிச்செய்து: ஸ்வவிஷயத்தில் ஆதரம் ஈச்வரனுக்கு ஸம்பந்தித்ரயஸந்தாந ஸம்ரக்ஷணபர்யந்தமானபடியை அவனுடைய ஆச்ரிதரக்ஷணார்த்த குணசேஷ்டித ப்ரகாசகங்களான திருத்வாதசநாமங்களோடே கூட அருளிச் செய்கிறார்.

2.7.1 கேசவன் தமர் கீழ்மே லெமரே ழெழுபிறப்பும்
மாசதி ரிதுபெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா
ஈசனென் கருமாணிக்கமென் செங்கோலக்
கண்ணன் விண்ணோர்
நாயகன் எம்பிரா னெம்மான் நாரா யணனாலே.

---

நெஞ்சு அவனை விடாதொழிய வேணும் என்கிற விருப்பத்தையும், இந்த இந்த விதமாக அவன் தன்னை முழுக்கக் கொடுத்த வண்மையையும், இந்த வள்ளல் மிகுதி அறிவிற் சிறந்தார்க்கும் அளவிடமுடியாது என்னும் விஷயத்தையும் அருளிச்செய்து; தம் (ஆழ்வார்) திறத்து ஆதரம் எம்பெருமானுக்குத் தம்மோடு கீழ் ஏழ் பிறப்பும் மேல் ஏழ் பிறப்பும் தொடர்புடைய மூன்று குலத்தைக் காக்கும் வரையிலான தன்மையை, அவனுடைய அடியாரைக்காக்கும் பொருட்டு உண்டான குணம், திருவிளையாடல்கள் ஆகியவற்றை வெளிப்படுத்துவதான பன்னிரண்டு திருநாமங்களோடே கூட அருளிச் செய்கிறார்.

அவ முதற்பாட்டில் - தம்முடைய குலத்திலுள்ளார் பகவதபிமாநாந்தர்கதரான படியை அருளிச்செய்கிறார்.

ஸர்வஸாதாரணமான ஸ்வாமித்வத்தையுடையவனாய், (அப்படியே பொதுவன்றியே) நீலரத்நம் போன்ற வடிவை எனக்குக் காட்டி (அவ்வடிவுக்குப் பரபாகமாம்படி) சிவந்தழகிய திருக்கண்களாலே என்னை அநந்யார்ஹனாக்கி, பரமபத வாஸிகளோபாதி அங்கீகரித்து என்னை அநுபவிப்பித்து எனக்கு நாதபூதனான உறவடியாக (நிரதிசயவாத்ஸல்ய யுக்தனான) நாராயணனாலே கீழ்மேல் ஏழெழுபிறப்பும் (ஸர்வாதிகனான) கேசவன் தமரான எமரானவர்கள் (நிர்ஹேதுக பகவதங்கீகாரமாகிற) இந்த பெரிய சதிரைப் பெற்று (அத்தாலே) நம்முடைய ஸ்ரீவைஷ்ணவத்வ ஸ்ரீயானது வளருகிறபடியே! 1

---

2.7.1 முதற்பாட்டில்,தம்முடைய குலத்திலுள்ளார் எம்பெருமானது அன்பில் உள்ளடங்கியபடியை அருளிச் செய்கிறார்.

எல்லாருக்கும் பொதுவான தலைவனாயிருக்கும் தன்மையையுடையவனாய், அப்படியே பொதுவன்றியே நீல மணிபோன்ற வடிவை எனக்குக் காட்டி, அவ்வடிவுக்கு மேன்மையாம்படி சிவந்து அழகிய திருக்கண்களாலே என்னைத் தனக்கேயாக்கி, பரமபதத்தில் உள்ளவர்களைப் போல இசைந்து, என்னை அநுபவிப்பித்து எனக்கு தலைவனான உறவு காரணமாக எல்லையற்ற தாயன்போடு கூடியவனான நாராயணனாலே கீழ்மேல் ஏழு ஏழு பிறப்பும் எல்லாரைக் காட்டிலும் உயர்ந்தவனான கேசவன் அடியாரான எமரானவர்கள் இயற்கையான எம்பெருமான் இசைவாகிற பெருமையைப் பெற்று, அதனால் நம்முடைய ஸ்ரீ வைஷ்ணவத் தன்மையான ஸ்ரீயானது வளருகிறபடியே! குறிப்பு-வாய்க் கின்றவாறே - வியப்பில் கூறியது. முதல் திருநாமம் -கேசவன்.1

2.7.2 நாரணன் முழுவே ழுலகுக்கும் நாதன் வேதமயன்
காரணம் கிரிசை கருமமிவை முதல்வனெந்தை
சீரணங் கமரர் பிறர்பலரும் தொழுதேத்த நின்று
வாரணத்தை மருப்பொசித்த பிரான் என் மாதவனே.

அவ: அநந்தரம், கீழுக்தமான நாராயணசப்தார்த்தத்தை உபபாதியாநின்று கொண்டு ஸ்வவிஷயபக்ஷபாதத்தை அருளிச்செய்கிறார்.

நாராயணசப்தவாச்யனாய், (அதினுடைய அர்த்தமான) ஸமஸ்த லோகத்துக்கும் ஸ்வாமியாய், (அந்த சப்தத்தையே ப்ரதாநமாக ப்ரதிபாதிக்கிற) வேதப்ரதிபாத்யனாய், க்ரியா ஹேது, க்ரியை, க்ரியாபலமான கார்யம், இவற்றுக்குக் காரணபூதனாய், குணோத்தரராய் திவ்யரான தேவர்களும் ருஷிகளும் மநுஷ்யாதிகளுமான எல்லாரும் வணங்கி ஸ்தோத்ரம் பண்ணும்படியாக நின்று குவலயாபீடத்தைக் கொம்பை முறித்த

---

2.7.2 பின்னர், கீழ்ப்பாட்டில் சொன்ன 'நாராயண' என்ற சொல்லின் பொருளை நிரூபித்து தம் திறத்து உள்ள ஒருதலைச்சார்பை அருளிச் செய்கிறார்.

'நாராயண' என்ற சொல்லுக்குப் பொருளானவனாய், அதனுடைய பொருளான எல்லா உலகுக்கும் தலைவனாய், அந்தச் சொல்லையே முக்கியமாக அறிவிக்கிற வேதங்களால் விவரிக்கத்தக்கவனாய், செய்கைக்குக் காரணம், செய்கை, செய்வதின் பயனாக வரும் கார்யம் - இவற்றுக்குக் காரண மானவனாய், குணத்தால் உயர்ந்தவராய், திவ்யரான தேவர்களும், முனிவர்களும், மனிதர் முதலானவர்களுமான எல்லோரும் வணங்கி, துதி செய்யும்படியாக நின்று குவலயாபீடம் என்னும் யானையின் கொம்பை முறித்த

மஹோபகராகனாய், (இப்படி நாரசப்தார்த்தங்கள் தமக்கு விபூதியானபடியை) எனக்கு ப்ரகாசிப்பித்த ச்ரிய:பதியான க்ருஷ்ணன் என்னை அநந்யார்ஹனாக்கின சேஷி. சீரணங்கு என்று லக்ஷ்மியாகவுமாம். 2

2.7.3 மாதவ னென்றதே கொண்டென்னை யினியிப்பாற்
பட்டது
யாத வங்களும் சேர்கொடே னென்றென்னுள்
புகுந்திருந்து
தீதவம் கெடுக்கு மமுதம் செந்தாம ரைக்கட்குன்றம்
கோதவ மிலென்கன்னற் கட்டியெம் மானென்
கோவிந்தனே.

அவ: அநந்தரம், இப்பக்ஷபாதமடியாக ஸ்வவிஷயத்தில் உக்தி மாத்ரத்தையே பற்றாசாகக்கொண்டு பண்ணின உபகாரத்தை அருளிச்செய்கிறார்.

எனக்காக க்ருஷ்ணனாய் வந்து அவதரித்த என்னுடைய

---

பேருதவி செய்தவனாய், இப்படி 'நார' என்ற சொல்லின் பொருள்கள் தமக்கு (எம்பெருமானுக்கு) வசப்பட்டபடியை எனக்குத் தெரிவித்த திருவின் மணாளனான கண்ணன் என்னை மற்றவர்கட்கு ஆட்படுத்தாது தனக்காக்கின தலைவன் என்கிறார். சீரணங்கு என்று லக்ஷ்மியாகவுமாம். குறிப்பு - இவை முதல்வன்-தொகைச்சொல் -நான்காம் வேற்றுமைத்தொகை எந்தை - எம்+ஐ , தகரம் இடைநிலை. அணங்கு-தெய்வம். இரண்டாம் திருநாமம் - நாராயணன் 2

2.7.3. பின்னர், இப்படி ஓரத்தன்மை காரணமாகத் தன் (ஆழ்வார்) விஷயத்தில் சொல் ஒன்றையே பற்றாசாகக்கொண்டு பண்ணின உதவியை அருளிச்செய்கிறார்.

ஸ்வாமியானவன் ஸ்ரீமான் என்று நான் சொன்ன இந்த அஹ்ருத யோக்தியையே பற்றாசாகக் கொண்டு (உக்தியில் வாசியறியாத) என்னை உக்த்யநந்தரமாக மேலுள்ள காலமெல்லாம் அவித்யாதிகளான குறைகள் ஏதேனுமொன்றையும் சேர்கொடேன் என்று ஸங்கல்பித்து (அதுக்கீடாக) என் நெஞ்சுக்குள்ளே புகுந்து அநந்ய பரனாயிருந்து (புத்தி பூர்வகமான) தீமையையும், (ப்ராமாதிகமான) அவத்தையும் கெடுக்கும்படியான நித்யபோக்ய பூதனாய், (இஸ்ஸம்ச்லேஷத்தாலே) சிவந்த தாமரைபோலே யிருக்கிற திருக்கண்களையும் ஸுஸ்திரமாய் வளர்ந்த வடிவையும் அநுபவிப்பித்து கோதும் அவமும் இல்லாத கன்னற்கட்டி போலே எனக்கு இனியனானான். கன்னற்கட்டி - கருப்புக்கட்டி; அதுக்குக் கோதும், அவமும் - நீரஸமான வஸ்த்வந்தர ஸம்ஸர்க்கமும் பாகதோஷமும்;

---

எனக்காகக் கண்ணனாய் வந்து அவதரித்த என்னுடைய தலைவனானவன் 'ஸ்ரீமான்' என்று நான் சொன்ன இந்த மனம் ஒன்றாத பேச்சையே பற்றாசாகக் கொண்டு பேச்சில் வாசி யறியாத என்னைப் பேசியபின்பு மேலுள்ள காலமெல்லாம் அறிவின்மை முதலான குறைகள் ஏதேனும் ஒன்றையும் சேர விடமாட்டேன் என்று நினைத்து, அந்நினைவுக்கு ஈடாக என் நெஞ்சுக்குள்ளே புகுந்து வேறொன்றில் ஈடுபாடு அற்றவ னாயிருந்து, நல்லறிவை முன்னிட்டுக்கொண்டு தீமையையும், ஊக்கமின்மையால் தெரியாமல் வந்த தீமையையும் கெடுக்கும்படியான எப்போதும் இனியனாய், இக் கலவியாலே சிவந்த தாமரைபோலே இருக்கிற திருக்கண்களையும், நிலையானதாய் வளர்ந்த வடிவையும் அநுபவிப்பித்து, குற்றமும் குறையுமில்லாத கன்னல்கட்டி (வெல்லக்கட்டி) போலே எனக்கு இனியனானான். கன்னற்கட்டி - கருப்புக்கட்டி, கரும்பு. அதுக்கு கோதும் அவமுமாவது - சுவையில்லாத மற்றொரு பொருளின் சேர்த்தியும், காய்ச்சல் குற்றமும்.

ஈச்வரனுக்குக் கோதும், அவமுமாவது - உபகாரத்தினுடைய ஹேதுஸாபேக்ஷத்வமும், ஸ்வப்ரயோஜநார்த்தத்வமும். 3

2.7.4 கோவிந் தன்குடக் கூத்தன் கோவலனென்
றென்றேகுனித்து
தேவும் தன்னையும் பாடியாடத் திருத்திஎன்
னைக்கொண்டென்
பாவந் தன்னையும் பாறக்கைத் தெமரே
ழெழுபிறப்பும்
மேவும் தன்மைய மாக்கினான் வல்லனெம் பிரான்
விட்டுவே.

அவ: அநந்தரம், இவ்வுபகாரம் ஸ்வஸம்பந்தி குலபர்யந்தமாம்படி பண்ணின ஸாமர்த்யத்தை அருளிச்செய்கிறார்.

(நினைத்தது செய்யவல்ல) சக்திமானாய், ஸமஸ்த பதார்த்தங்களையும் வ்யாபித்து (ஊரை வளைத்து ஒருவனைப் பிடிக்குமா போலே) என்னை அங்கீகரித்த ஸ்வாமியானவன் (ஜாத்யுசிதமான) கோஸம்ருத்தியையுடையவன்.

---

ஈச்வரனுக்குக் கோதும், அவமுமாவது - உதவிசெய்ததின் காரணமாக வைத்துக் கொண்டு செய்தலும் தன்னுடைய பயனாகச்செய்கையும். மூன்றாம் திருநாமம் - மாதவன் 3

2.7.4. பின்னர், இந்த உதவி என்னைச் சேர்ந்தார் குலம் வரையாம்படி பண்ணின திறலை அருளிச்செய்கிறார்.

நினைத்து செய்யவல்ல ஆற்றலுடையவனாய், எல்லாப் பொருள்களிலும் பரந்து, ஊரை வளைத்து ஒருவனைப் பிடிக்குமாப்போலே என்னை ஏற்றுக் கொண்ட தலைவனானவன்; இனத்துக்குத்தகுந்ததான நிறைந்த பசுக்களை யுடையவன்,

(அந்த ஸம்ருத்த்யுசிதமான ஹர்ஷவ்யாபாரமாயுள்ள) குடக்கூத்தையுடையவன் (இந்த ஐச்வர்ய சேஷ்டிதங்களுக்கு அநுரூபமான) கோபால ஜந்மத்தையுடையவன் என்றென்று இவற்றைத் தனித்தனியே சொல்லி, ப்ரீதியாலே கூத்தாடி, (இந்த ஸௌலப்யத்துக்கு அடியான) பரத்வத்தையும், தனக்கு அஸாதாரண ஸ்வபாவமான நீர்மையையும் (ப்ரீதிக்குப் போக்கு வீடாகப்) பாடி ஸஞ்சரிக்கும்படி, (இரும்பைப் பொன்னாக் குவாரைப்போலே நித்யஸூரி ஸமாநனாம்படி) திருத்தி, என்னைத் (தன்னுடையவனாகக்) கைக்கொண்டு, (ஸ்வாங்கீகார விரோதியான), என்னுடைய பாபங்களையும் ஓடிப்போம்படி துரத்தி என்னோடு அந்யவமுடையார் ஏழேழு ஜந்மமும் தன்னை ப்ராபிக்கும் தன்மையையுடையோமாம்படி பண்ணினான். இதொரு சக்தியோகமிருந்தபடி யென்! என்று கருத்து. பாற -ஓட. 4

அந்த நிறைவுக்குத் தக்கதான மகிழ்ச்சியை உண்டு பண்ணுவதாயுள்ள குடக்கூத்தையுடையவன்; இந்த செல்வம், திருவிளையாடல் ஆகியவற்றுக்குத் தக்கதான இடையர் பிறவியை உடையவன்; என்று என்று இவற்றைத் தனித்தனியே சொல்லி, அன்பினாலே கூத்தாடி, இந்த எளிவந்த தன்மைக்குக் காரணமான மேன்மையையும், தனக்கே உரிய இயல்பான நீர்மையையும், அன்புக்குப் போக்கு வீடாகப்பாடித் திரியும்படி - இரும்பைப் பொன்னாகச் செய்வாரைப்போலே நித்ய சூரிகளோடு ஒப்பாம்படி திருத்தி, என்னைத் தன்னுடைய வனாகக் கைக்கொண்டு தன்னை (ஆழ்வாரை) ஏற்றுக் கொள்ளத் தடையான என்னுடைய பாவங்களையும் ஓடிப் போம்படி துரத்தி, என்னோடு தொடர்புடையார் ஏழேழ் பிறவியும் தன்னை அடைவிக்கும் தன்மையையுடையோமாம் படி பண்ணினான் என்கிறார். இது ஒரு சக்தியோகம் இருந்த படி என்! என்றபடி. பாற -ஓட. 4ம் திருநாமம் -கோவிந்தன் 4

2.7.5 விட்டிலங்கு செஞ்சோதித் தாமரை பாதம் கைகள் கண்கள்
விட்டிலங்கு கருஞ் சுடர் மலையே திருவுடம்பு
விட்டிலங்கு மதியம் சீர்சங்கு சக்கரம் பரிதி
விட்டிலங்கு முடி யம்மான் மதுசூதனன் தனக்கே.

அவ: அநந்தரம், ஸபரிகரமாகத் தம்மை அங்கீகரித்தபடியாலே அவனுக்குப் பிறந்த ஔஜ்ஜ்வல்யத்தை அருளிச்செய்கிறார். இப்பாட்டில் முதலடியில், விட்டு என்று திருநாமமாகப் பிரித்து 'விட்டிலங்கு முடியம்மான்' என்று நாலாமடியோடே அந்வயித்துக் கிடக்கிறது; அல்லாதபோது, திருநாமம் முதலாயெழுகிற பாட்டுக்களின் மர்யாதை குலையும். 'விட்டு' என்னும் இவ்விடத்தில் உகரம் குற்றியலாகக்கொள்க.

விஷ்ணுவாய்ப் பரந்து விளங்குகிற அபிஷேகத்தை யுடையனாய், ஸ்வாமியான மதுசூதநன் தனக்கு இலங்கிச் சிவந்த ஒளியையுடைய தாமரை போன்றன திருவடிகளும்,

2.7.5. பின்னர், தம்மோடு தொடர்புடையாரையும் தம்மையும் ஏற்றுக் கொண்ட படியாலே அவனுக்குப் பிறந்த ஒளியை அருளிச் செய்கிறார். இப்பாட்டில் முதலடியில், விட்டு என்று திருநாமமாகப் பிரித்து 'விட்டிலங்கு முடியம்மான்' என்று நாலாமடியோடே கொண்டுகூட்டிக் கிடக்கிறது; அல்லாதபோது, திருநாமம் முதலாயெழுகிற பாட்டுக்களின் மரியாதை குலையும். 'விட்டு' என்னும் இவ்விடத்தில் உகரம் குற்றியலிகரமாகக் கொள்க.

விஷ்ணுவாய்ப் பரந்து விளங்குகிற கிரீடத்தை உடையவனாய், தலைவனான மதுசூதனனுக்குப் பிரகாசித்துச் சிவந்த ஒளியையுடைய தாமரை போன்றன திருவடிகளும்,

திருக்கைகளும்,திருக்கண்களும்; விகஸிதமாய் விளங்கா நிற்கிற நீலமான ப்ரபையையுடைத்தான மலை போன்றது அழகிய வடிவு; அழகிய சங்கு பரம்பி விளங்குகிற சந்த்ரனைப் போன்றது; சக்ரம் அப்படிப்பட்ட ஆதித்யனைப் போன்றது. ஸாமாநாதிகரண்ய.ம் உபமாந உபமேயபாவத்தாலே. 5

2.7.6 மதுசூதனையன்றி மற்றிலேனென் றெத்தாலும்
கருமமின்றி
துதிசூழ்ந்த பாடல்கள் பாடியாட நின்றூழி
யூழிதொறும்
எதிர்சூழல் புக்கெனைத் தோர்பிறப்பு மெனக்கே
யருள்கள்செய்ய
விதிசூழ்ந்த தாலெனக் கேலம்மான் திரிவிக்
கிரமனையே.

அவ: அநந்தரம், கீழ்ச்சொன்ன உபகாரத்துக்கும் தத்க்ருத ஔஜ்ஜ்வல்யத்துக்கும் ஹேதுவான க்ருபாபாரவச்யத்தை அருளிச் செய்கிறார்.

---

திருக்கைகளும், திருக்கண்களும்; மலர்ந்ததாய் விளங்கும் நீலமான சுடரையுடைத்தான மலை போன்றது அழகிய வடிவு; அழகிய சங்கு பரம்பி விளங்குகிற சந்திரனைப் போன்றது; சக்கரம் அப்படிப்பட்ட சூரியனைப் போன்றது. ஒரே வேற்றுமையில் படித்தல் உபமான உபமேயத் தன்மையாலே. ஐந்தாம் திருநாமம் - விஷ்ணு . 5

2.7.6. பின்னர், கீழ்ச் சொன்ன உதவிக்கும், அத்தால் வந்த ஒளியுடைமைக்கும் காரணமான கருணைக்கு எம்பெருமான் வசப்பட்டிருப்பதை அருளிச்செய்கிறார்.

(என் விரோதியைப்போக்கின) மதுசூதனையன்றி மற்று ப்ராப்யம் உடையேனல்லேன் என்று ஏதேனும் ஒரு பதார்த்தத்தாலும் ஒரு கார்யம் அற்று ஸ்தோத்ரரூபத்தாலே (அவன் குணகணாதிகளைச்) சூழ்ந்த பாடல்களை (ப்ரயோஜ நார்த்தமன்றியே ஸ்வயம்ப்ரயோஜநமாக) நின்று, பாடி, ஆடும் படி கல்பந்தோறும் கல்பந்தோறும் அநேகங்களாய், அத்விதீ யங்களான பிறப்புக்கள் தோறும் எனக்கு அபிமுகனாகைக்கு ஈடான சூழ்ச்சியோடே அவதரித்து, எனக்கே அஸாதாரணமாக (ப்ரதம கடாக்ஷம் தொடங்கி பரபக்தி பர்யந்தமான) உபகாரங்களை பண்ணுகைக்கு எனக்கு உறுப்பான ஏன்று கோளையுடையவனாய், ஸ்வாமியான த்ரி விக்ரமனை (தப்பவொண்ணாத) விதியென்னலாம்படியான க்ருபையானது சூழ்ந்துகொண்டது. ஏலுதல்-கொள்கையாதல்; தகுதியாகவுமாம்.6

---

'என் விரோதியைப் போக்கின மதுசூதனையன்றி வேறு அடையத்தகுந்த வஸ்து உடையேனல்லேன்' என்று ஏதேனும் ஒரு பொருளாலும் ஒரு கார்யம் (பயன்) இன்றி துதித்தலாலே அவனது எண்ணற்ற குணங்களைச் சூழ்ந்த பாடல்களைப் பயன் கருதியன்றியே தன் பயனாக நின்று, பாடி ஆடும்படி ஊழிதோறும் ஊழிதோறும் பலவகையாய் ஒப்பற்றதான பிறவிகள்தோறும் எனக்கு எதிராகைக்குக் காரணமான எண்ணத்தோடே அவதரித்து, எனக்கே உரிய முதல் பார்வை தொடங்கி பரபக்தி வரையிலான உதவிகளைப் பண்ணுகைக்கு எனக்கு உறுப்பான ஏற்றுக் கொள்ளுதலை உடையவனாய், தலைவனான திரிவிக்கிரமனைத் தப்பமுடியாத விதி என்னலாம் படியான கருணையானது சூழ்ந்து கொண்டது என்கிறார். ஏலுதல்- கொள்கையாதல்; தகுதியாகவுமாம். குறிப்பு -சூழல் - அவதாரம். காரணவாகுபெயர். எனைத்து - அநேகங்களாய், ஓர் - ஒப்பற்றதான, பிறப்பும் - பிறப்புகள்தோறும் (சொல்லாட்சி). ஆறாம் திருநாமம்- மதுசூதனன் 6

2.7.7 திரிவிக் கிரமன் செந்தாமரைக் கண் எம்மானென்
செங்கனிவாய்
உருவில் பொலிந்த வெள்ளைப் பளிங்கு
நிறத்தனன் என்றென்றுள்ளிப்
பரவிப் பணிந்து பல்லூழி யூழி
நின்பாதபங்கயமே
மருவித் தொழும் மனமே தந்தாய் வல்லை
காணென் வாமனனே!

அவ: அநந்தரம், ஸ்வாநுபவத்துக்கு உறுப்பாக ஸத்வோத்தரமான மநஸ்ஸைத் தந்தான் என்கிறார்.

த்ரைவிக்ரமாபதாநத்தாலே லோகத்தை அநந்யார்ஹமாக்கினவனாய், (அதுபோலே) சிவந்த தாமரைபோன்ற கண்ணாலே {जितं (ஜிதம்) என்னும்படி} என்னை அடிமை கொண்ட ஸ்வாமியானவன், சிவந்த கனி போலே இருக்கிற திருப்பவளத்தின் வடிவிலே பரந்து வளர்ந்து வருகிற, வெளுத்த, பளிங்கு போலேயிருக்கிற திருமுத்தின் நிறத்தை எனக்கு அநுபவிப்பித்தவன் என்றென்று தனித்தனியே

2.7.7. பின்னர், எம்பெருமானை அநுபவிப்பதற்கு உறுப்பாக ஸத்வகுணம் நிறைந்ததான மனத்தைத் தந்தான் என்கிறார்.

திரிவிக்கிரம அவதார வியப்பான செயலாலே உலகை மற்றவர்க்கு ஆட்படுத்தாது தனக்காக்கினவனாய், அதுபோல, சிவந்த தாமரை போன்ற கண்ணாலே 'உனக்கு வெற்றி' (ஜிதம்) என்னும்படி என்னை அடிமைகொண்ட தலைவனானவன் சிவந்த கனி போலே இருக்கிற திருப்பவளத்தின் வடிவிலே பரம்பி வளர்ந்து வருகிற, வெளுத்த, பளிங்கு போலே இருக்கிற திருமுத்தின் நிறத்தை எனக்கு அநுபவிப்பித்தவன், என்று என்று தனித்தனியே

(சேஷ்டிதத்தையும், கண்ணழகையும், முறுவலழகையும்) நெஞ்சாலே அநுபவித்து (அது உள்ளடங்காமையாலே) அக்ரமமாகப்பரவி, (அந்த ப்ரீதி ப்ரேரிதனாய்க்கொண்டு திருவடிகளிலே) விழுந்து பலவகைப்பட்ட கல்ப விபாகத்தை யுடைத்தான காலதத்வமுள்ளதனையும் (ப்ராப்தனான) உன்னுடைய போக்யமான திருவடிகளிலே (அநந்ய ப்ரயோஜந னாய்க்கொண்டு) பொருந்தி அடிமைசெய்யும் மநஸ்ஸையே தந்தாய் என் வாமநனே! வல்லைகாண். மஹாபலி யினுடைய நெஞ்சை வஞ்சித்து அநுகூலமாக்கின நீ, என் நெஞ்சையும் அநுகூலிப்பிக்க சக்தன் என்று கருத்து. 7

2.7.8 வாமனனென் மரகதவண்ணன் தாமரைக்கண்ணினன்
காமனைப் பயந்தாய்! என்றென்றுன் கழல்பாடியே பணிந்து
தூமனத்தனனாய்ப் பிறவித்துழதி நீங்களென்னைத்
தீமனம் கெடுத்தாய் உனக்கென் செய்கேனென் சிரீதரனே!

---

திருவிளையாடலையும், கண்ணழகையும், முறுவல் அழகையும் நெஞ்சாலே அநுபவித்து, அது உள்ளடங் காமையாலே முறைகெடப் பரவி, அந்த அன்பின் தூண்டுதலாலே, திருவடிகளிலே விழுந்து பலவகைப்பட்ட ஊழிப்பிரிவை உடைய காலம் என்ற பொருள் உள்ளவரையும், உரியனான உன்னுடைய அழகிய திருவடிகளிலே வேறு பயனைக் கருதாது உன்னையே பயனாகக் கொண்டு பொருந்தி அடிமை செய்யும் மனத்தையே தந்தாய் என் வாமனனே! ஆற்றல் படைத்தவன் காண். மகாபலியினுடைய நெஞ்சை வஞ்சித்து உனக்கு (எம்பெருமானுக்கு) தானம் பண்ணும்படி நன்மை செய்த நீ, என் நெஞ்சையும் அநுகூலிப்பிக்க ஆற்றல் உடையவன் என்றபடி.. ஏழாந்திருநாமம்- திரிவிக்ரமன். 7

அவ: அநந்தரம், அநுபவத்துக்குறுப்பல்லாத பொல்லாத நெஞ்சைப் போக்கின உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமுண்டோ? என்கிறார்.

(ஸர்வஸுலபனான) வாமனனே! எனக்கு அநுபாவ்யமான மரகதம் போன்ற வடிவழகையுடையவனே! (போக்தாக்களைக் கண்டு உகந்து பூர்ணமாக நோக்கும்) தாமரை போலும் கண்ணையுடையவனே! (எல்லாரும் ஆசைப்படும் அழகையுடைய) காமனுக்கும் உத்பாதகனா னவனே! என்றென்று சொல்லி உன் திருவடிகளைப்பாடியே பணிந்து (ப்ரயோஜநாந்தரங்களில் போகாத) சுத்த மநஸ்ஸை யுடையேனாய், ஜந்மப்ரயுக்தமான அலமாப்பு தீரும்படியாக (விஷயாந்தரங்களிலே அந்யபரமான) தீய மனம் கெட்டுப் போம்படி பண்ணினாய், இப்படி எனக்கு உபகாரகனான

2.7.8. பின்னர், உன்னை (எம்பெருமானை) அநுபவிப்பதற்கு உறுப்பல்லாத பொல்லாத நெஞ்சைப்போக்கின உதவிக்குக் கைம்மாறு உண்டோ? என்கிறார்.

எல்லாருக்கும் எளியனான வாமனனே! எனக்கு அநுபவிக்கத் தக்கதான மரகதம் போன்ற வடிவழகையுடையவனே! அநுபவிப்பவர்களைக் கண்டு உகந்து முழுமையாக நோக்கும் தாமரை போலும் கண்ணையுடையவனே! எல்லாரும் ஆசைப்படும் அழகையுடைய காமனையும் படைத்தவனே! என்றென்று சொல்லித் திருவடிகளைப் பாடியே பணிந்து, வேறு பயனைக் கருதிப் போகாத தூய மனத்தை உடையவனாய்ப் பிறவியால் உண்டான தளர்ச்சி தீரும்படியாக வேறு விஷயங்களில் வேறு ஒன்றைப் பின்பற்றுமதான தீயமனம் கெட்டுப்போம்படி பண்ணினாய்; இப்படி எனக்கு உதவியவனான

ஸ்ரீமானே! (பரிபூர்ணனான) உனக்கு எத்தைச் செய்கேன்? ஸ்ரீய:பதியாகையாலே பூர்ணனான உனக்குச் செய்யலாவது ஒரு ப்ரத்யுபகாரமில்லை என்று கருத்து. 8

2.7.9 சிரீஇதரன் செய்ய தாமரைக் கண்ணன் என்றென்
றிராப்பகல்வாய்
வெரீஇ அலமந்து கண்கள்நீர் மல்கிவெவ்
வுயிர்த்துயிர்த்து
மரீஇய தீவினை மாள வின்பம்வளர வைகல்வைகல்
இரீஇ உன்னையென் னுள்வைத்தனையென்
இருடீகேசனே!

அவ: அநந்தரம், விச்லேஷ து:க்கம் தீரும்படி என் நெஞ்சுக் குள்ளே புகுந்து, நான் ஹ்ருஷ்டனாம்படி அநுபவிப்பித்தான் என்கிறார். தூமனத்திலே தோற்றுவித்த பக்திக்கு விஷயமாய்க் கொண்டு நான் உகக்கும்படி புகுந்தான் என்கிறார் என்றுமாம்.

ஸ்ரீமானே! எல்லாவற்றாலும் நிறைவு பெற்ற உனக்கு எத்தைச் செய்கேன். திருமகள் நாயகனாகையாலே நிறைவுடைய உனக்குச் செய்யலாவது ஒரு கைம்மாறு இல்லை என்றபடி. எட்டாம் திருநாமம் - வாமனன் 8

2.7.9. பின்னர், பிரிவுத்துன்பம் தீரும்படி என் நெஞ்சுக்குள்ளே புகுந்து, நான் மகிழ்ச்சி அடையும்படி அநுபவிப்பித்தான் என்கிறார். தூயமனத்தில் தோற்றுவித்த பக்திக்கு விஷயமாய்க் கொண்டு நான் உகக்கும்படி புகுந்தான் என்கிறார் என்றுமாம்.

ச்ரிய:பதியானவன் (அவளோட்டை ஸம்ச்லேஷ ப்ரீதியாலே) செவ்வி பெற்ற தாமரைபோலும் கண்ணையுடையவன் என்றென்று ("இவளிராப்பகல் வாய்வெரீஇ" என்கிறபடியே) இரவும் பகலும் வாய்வெருவி, ("எங்கும் நாடி நாடி" என்கிற படியே) அலமந்து, (குவளையொண் கண்ணநீர் கொண்டாள்", "கேழிலொண் கண்ணநீர் கொண்டாள்" என்கிறபடியே) கண்ணநீர் மல்கி, ("உள்ளம் மலங்க வெவ்வுயிர்க்கும்" "நெஞ்சம் வேவ நெடிதுயிர்க்கும்" என்கிறடியே) பலகாலும் வெவ்விதாக நெடுமூச்செறிந்து (இப்படி ஆடியாடியில்) மருவின தீவினை போம்படியாக (அந்தாமத்தன்பு தொடங்கி) இன்பம் வளரும்படி ஸர்வகாலமும் என் இந்த்ரியங்களுக்கு நியாமகனாகையாலே (உனக்கு விதேயமான) என் நெஞ்சிலே (நியந்தாவாய், போக்யனான) உன்னை ("பக்கநோக்கறியான்" என்கிறபடியே) இருத்தி வைத்தாய். பக்திபாரவச்யத்தாலே வந்த விகாரத்தை

---

'திருமகள் நாயகனான எம்பெருமான் திருமகளோடு கலந்த ஆசையாலே அழகு பெற்ற தாமரை போலும் கண்ணையுடையவன்' என்று என்று 'இவள் இராப்பகல் வாய்வெரீஇ' (2.4.5.) என்கிறபடியே இரவும் பகலும் வாய் பிதற்றி 'எங்கும் நாடி நாடி' (2.4.1.) என்கிறபடியே தடுமாறி 'குவளை ஒண் கண்ணநீர் கொண்டாள்' (2.4.5.) என்கிறபடியே கண்ணநீர் மல்கி 'உள்ளம் மலங்க வெவ்வுயிர்க்கும்' (2.4.4.) 'நெஞ்சம் வேவ நெடிதுயிர்க்கும்' (2.4.8.) என்கிறபடியே பலகாலும் சூடாக நெடுமூச்செறிந்து 'இப்படி ஆடியாடியில்' (2.4.) தோன்றின தீவினை போகும்படியாக 'அந்தாமத்தன்பு' (2.5.) தொடங்கி இன்பம் வளரும்படி எல்லாக் காலமும் என் இந்திரியங்களுக்குக் கட்டளையிடுபவனாகையாலே, உனக்கு அடங்கின என் நெஞ்சிலே ஏவுமவனாய், அழகனான உன்னை 'பக்கநோக்கறியேன்' (2.6.2.) என்கிறபடியே இருத்தி வைத்தாய். பக்திக்கு வசப்பட்டதாலே வந்த விகாரத்தை –

-வெவ்வுயிர்த்துயிர்த்து அறுதியாகச்சொல்லி, ப்ராப்தி ப்ரதிபந்தக நிவ்ருத்தி பிறந்து அநுபவாநந்தம் வளரும்படி ஸம்ச்லேஷித்த ப்ரகாரத்தைச் சொல்லிற்றாகவுமாம். 9

2.7.10 இருடீகேசன் எம்பிரான் இலங்கை அரக்கர்குலம்
முருடு தீர்த்த பிரான் எம்மான் அமரர்
பெம்மானென்றுன்று
தெருடி யாகில் நெஞ்சே! வணங்குதிண்ண
மறியறிந்து
மருடி யேலும் விடேல்கண்டாய் நம்பிபற்ப
நாபனையே.

அவ: அநந்தரம், இப்படி ஸர்வப்ரகாரோபகாரகனை விடாமையில் உண்டான அபேக்ஷையை அருளிச்செய்கிறார்.

(தசேந்த்ரியாநநமான என்னுடைய) மாநஸேந்த்ரியத்தை நியமித்து எனக்கு உபகாரகனாய், (அதுக்கு உதாஹரணம் என்னனலாம்படி) லங்கையில் ராக்ஷஸ

வெவ்வுயிர்த்துயிர்த்து நிச்சயமாகச் சொல்லி, அடைவதற்குத் தடங்கலைப் போக்குதல் பிறந்து அநுபவ ஆனந்தம் வளரும்படி கலந்த விதத்தைச் சொல்லிற்றாகவுமாம். ஒன்பதாம் திருநாமம் - ஸ்ரீதரன். 9

2.7.10. பின்னர், இப்படி எல்லா விதத்தாலும் உதவி செய்தவனை விடாமையில் உண்டான விருப்பத்தை அருளிச் செய்கிறார்.

'பத்து இந்திரியங்களுக்கு முகமான என்னுடைய மனசு என்னும் இந்திரியத்தை நியமித்து எனக்கு உதவினவனாய், அதுக்கு எடுத்துக்காட்டு என்னலாம்படி இலங்கையில் அரக்கர்

குலத்துக்கு முருடான ராவணனை அழித்த (நாட்டுக்கு) உபகரித்தவன், நித்ய சூரிகளோபாதி என்னை அநுபவிப்பித்த ஸ்வாமியானவன் என்று பலபடியும் அநுஸந்தித்து நெஞ்சே! அறிவுடையையாகில் (அவனை) வணங்கும்படி பார்; (இத்தை) சிக்கென புத்திபண்ணு. இவ்வறிவுக்கு மேல் (அயோக்யதை யடியான) கலக்கம் வந்ததேயாகிலும் குணபரிபூர்ணனாய், (காரணபூதனான) திருநாபி கமலத்தையுடைய இம் மஹோபகாரகனை விடாதே கிடாய் என்று நெஞ்சை அபேக்ஷிக்கிறார் 10

2.7.11 பற்பநாபன் உயர்வற உயரும் பெருந்திறலோன்
எற்பரன் என்னை யாக்கிக் கொண்டெனக்கே
தன்னைத்தந்த
கற்பகம் என்னமுதம் கார்முகில் போலும்
வேங்கடநல்
வெற்பன் விசும்போர் பிரான் எந்தை தாமோதரனே.

---

குலத்துக்குக் கொடியவனான இராவணனை அழித்து நாட்டுக்கு உதவினவன் நித்யசூரிகளைப் போல என்னை அநுபவிக்கும்படி செய்த தலைவனானவன்' என்று பலபடியாலும் நினைத்து, நெஞ்சே! அறிவுடையையாகில் அவனை வணங்கும்படி பார்; வணங்குவதை விரைவாகச்செய். இவ்வறிவுக்கு மேல் தகுதியின்மைக்குக் காரணமான கலக்கம் வந்ததேயாகிலும் குணத்தால் நிறைவு உடையவனாய், காரணனான திருநாபிக்கமலத்தையுடைய இவ்வுதவி செய்தவனை விடாதே காண் என்று நெஞ்சை வேண்டுகிறார். பத்தாம் திருநாமம் - இருடீகேசன் 10

அவ: அநந்தரம், இப்படி அறிவு பிறந்த நெஞ்சையுடைய எனக்கு, அவன் ஸர்வப்ரகாரோபகாரனானான் என்கிறார்.

(ஜகதுத்பத்தி ஹேதுவான) திருநாபீகமலத்தை யுடையனாய், (உத்பந்நஜகத்ரக்ஷணார்த்தமாக) மிகவும் உயராநின்ற அபரிச்சிந்நையான சக்தியை உடையனாய், (இம் மேன்மையோடே) என் பக்கலிலே தத்பரனாய், (அதடியாக) என்னை உண்டாக்கி அங்கீகரித்து, எனக்கே அஸாதாரணமாம்படி தன்னைத் தந்த கல்பகமாய், எனக்கு போக்யமாய், (தரம்பாராமல் உபகரிக்கும்) காளமேக ஸத்ருசனாய், (அதுக்கு யோக்யஸ்தலமான) திருவேங்கடம் என்று பேராய், விலக்ஷணமான திருமலையில் நிலையை உடையனாய், (இந்நிலையிலே) நித்யசூரிகளை அநுபவிப்பிக்கிற ஆச்ரிதபவ்யதையை உடையனான தாமோதரன் என்னை

---

2.7.11. பின்னர், இப்படி அறிவு பிறந்து நெஞ்சையுடைய எனக்கு, அவன் எல்லா விதத்தாலும் உதவி செய்தவனானான் என்கிறார்.

உலகப் படைப்புக்குக் காரணமான திருநாபிக்கமலத்தை உடையவனாய்ப் படைத்த உலகைக்காக்கும் பொருட்டு மிகவும் உயர்ந்த அளவிடமுடியாத சக்தியை உடையவனாய், இம் மேன்மையோடே என் பக்கலிலே ஊற்றமுடையவனாய், அதன் காரணமாக என்னை உண்டாக்கி, ஏற்றுக் கொண்டு, எனக்கே உரியனாம்படி தன்னைத் (எம்பெருமான்) தந்த கற்பகமாய், எனக்கு அமுதமாய்த் தரம் பாராமல் உதவிசெய்யும் காளமேகத்துக்கு ஒப்பானவனாய், அதுக்குத் தகுதியான இருப்பிடமான திருவேங்கடம் என்று பேராய்ப் பிரிதொன்றுக் கில்லாச்சிறப்பையுடையதான திருமலையில் நிலையையுடைய வனாய், இந்நிலையில் நித்யசூரிகளை அநுபவிப்பிக்கிறவனாய், அடியாரிடம் பணிவையுடையனான தாமோதரன் என்னை

அடிமை கொண்டான். கல்பகத்திற்காட்டில் இவனுக்கு வாசி - அர்த்தியை உண்டாக்குகையும், அவனைத் தானே ஸ்வீகரிக்கையும், அவன் அபேக்ஷித்ததைக் கொடுக்கை யன்றியே தன்னைக் கொடுக்கையும் தானே போக்யமாகையும்.11

2.7.12 தாமோ தரனைத் தனிமுதல்வனை ஞால
முன்டவனை
ஆமோ தரமறிய வொருவர்க் கென்றே
தொழுமவர்கள்
தாமோ தரனுரு வாகிய சிவற்(ர்க்)கும்
திசைமுகற்(ர்க்)கும்
ஆமோ தரமறிய எம்மானை யென்னாழி
வண்ணனையே?

அவ: அநந்தரம், தம்மளவில் அவன் பண்ணின உபகாரம் அதிசயித ஜ்ஞாநர்க்கும் அளவிடவொண்ணாது என்கிறார்.

ஆச்ரித பாரதந்த்ர்யத்தையும், ஸமஸ்தஜகதேக

அடிமை கொண்டான் என்கிறார். கல்பகத்தில் காட்டிலும் இவனுக்கு வாசி யாசித்தலை உண்டாக்குகையும், அவனைத் தானே கொள்ளுகையும், அவன் வேண்டியதைக் கொடுக்கை யன்றியே தன்னையே கொடுக்கையும், தானே அநுபவிக்கத் தக்கவனாகையும். பதினோறாம் திருநாமம் - பற்பநாபன் 11

2.7.12. பின்னர், தம்மளவில் அவன் பண்ணின உதவி மிக்க அறிவுடையராலும் அளவிடமுடியாது என்கிறார்.

"அடியார்க்கு வசப்பட்டிருப்பதையும், எல்லா உலகுக்கும் முக்கிய

காரணத்வத்தையும், ப்ரளயாபத்ஸகத்வத்தையும் உடையவனை பரிச்சேதித்து அறிய ஒருவர்க்கும் போமோ என்று தொழுமவர்களாய், அந்த தாமோதரனுக்கு ப்ரகாரதயா சேஷ பூதரான ருத்ரனுக்கும் ப்ரஹ்மாவுக்கும் (கடுகிலே கடலை மடுத்தாற்போலே) என் பக்கலிலே தன் குணார்ணவத்தை வைத்து என்னை அடிமை கொண்ட ஸ்வாமியை அளவிட்டு அறியப்போமோ? ஸாமாந்யமான உபகாரங்களை அறிந்தாலும், என் பக்கல் பண்ணின விசேஷோபகாரம் அறிய அரிது என்று கருத்து 12

2.7.13 வண்ண மாமணிச்சோதியை யமரர் தலைமகனை
கண்ணனை நெடுமாலைத் தென்குரு கூர்ச்
சடகோபன்
பண்ணிய தமிழ்மாலை ஆயிரத்துள் இவை
பன்னிரண்டும்
பண்ணில் பன்னிரு நாமப்பாட்டு அண்ணல்தாள்
அணைவிக்குமே.

---

காரணமாம் தன்மையையும், பிரளய ஆபத்தில் உலகை உண்டு காப்பாற்றும் தன்மையையும் உடையவனை அளவிட்டு அறிய ஒருவர்க்கும் போமோ' என்று தொழுமவர்களாய், அந்த தாமோதரனுக்கு விட்டுப் பிரியாத உடலாக உடைய ருத்ரனுக்கும் பிரமனுக்கும், கடுகிலே கடலை மடுத்தாற்போலே என் பக்கலிலே தன் குணக்கடலை வைத்து என்னை அடிமை கொண்ட தலைவனை அளவிட்டு அறியப் போமோ? பொதுவான உதவிகளை அறிந்தாலும், என் பக்கல் பண்ணின விசேஷமான உதவியை அறிய அரிது என்றபடி. பன்னிரண்டாம் திருநாமம் - தாமோதரன் 12

அவ: அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக பகவத் ப்ராப்தியை அருளிச்செய்கிறார்.

நிறத்தையுடைத்தாய், பெருவிலையனான நீலமணி யினுடைய ஒளி போலேயிருக்கிற தேஜஸ்ஸையுடையனாய், (இவ்வழகு) நித்யசூரிகளுக்கும் பரிச்சேதிக்கவொண்ணாத பெரியவனாய், ஆச்ரிதரைத் தானே அநுபவிக்குமவனாய், (அதுக்கு அடியான) நிரதிசய வ்யாமோஹத்தை உடையனான வனைப்பற்ற, அழகிய திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார் செய்தவையாய், ஸர்வாதிகாரமான த்ராவிடஸந்தர்ப்பரூபமான ஆயிரம் திருவாய்மொழிக்குள்ளும் பண்ணிலே வர்த்திப்பதாய், திருத்வாதசநாமத்தைப் பற்றி வருகிற பாட்டான இவை பன்னிரண்டும் ஸர்வேச்வரன் திருவடிகளை ப்ராபிப்பிக்கும்.13

இது கலித்துறை

வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர் திருவடிகளே சரணம்

---

2.7.13 பின்னர், இத்திருவாய்மொழிக்குப் பயனாக எம்பெருமான் திருவடியை அடைவிக்குமதை அருளிச் செய்கிறார்

நிறத்தையுடைத்தாய் பெருமதிப்புடைய நீலமணியின் ஒளிபோலே இருக்கிற சோதியையுடையனாய், இவ்வழகு நித்யசூரிகளாலும் அளவிடமுடியாத பெரியவனாய், அடியார் களைத்தானே அநுபவிக்குமவனாய், அதுக்குக் காரணமான எல்லையற்ற மையலையுடைய எம்பெருமானைக் குறித்து, அழகிய ஆழ்வார் திருநகரிக்குத் தலைவரான நம்மாழ்வார் செய்தவையாய், எல்லோரும் பயன்படுத்தக் கூடியதான திராவிடப்பிரகரணமான ஆயிரம் திருவாய்மொழிக்குள்ளும்

பண்ணிலே இருப்பதாய் பன்னிரண்டு திருநாமத்தைப் பற்றி வருகிற பாட்டான இவை பன்னிரண்டும் எம்பெருமான் திருவடிகளை அடைவிக்கும். குறிப்பு - பெருவிலையன் - அஃறிணை வழக்குச்சொல். கொண்டு கூட்டுதல் - பற்பநாபன் என்று தொடங்கி, விசும்போர் பிரான் - தாமோதரன் - எந்தை என்று உரை. 13

இது கலித்துறை

வாதிகேசரி அழகியமணவாளச்சீயர் திருவடிகளே சரணம்.

************************************

## 2.8 அணைவதரவணை ப்ரவேசம்

எட்டாந் திருவாய்மொழியில் - "மேவும் தன்மைய மாக்கினான்" என்று ஸ்வஸம்பந்தி ஜநங்களுக்கும் ப்ராப்தி பர்யந்தபலரூபமோக்ஷப்ரதனாய்க்கொண்டு ஈச்வரன் நிற்கிற நிலையையும், அதுக்கு அடியான பரத்வத்தையும் அநுஸந்தித்து, "இத்தை ஸம்ஸாரிகள் இழக்கவொண்ணாது" என்று உபதேசிப்பாராகக்கோலி; அவனுடைய ஸர்வ நிர்வாஹகத்வத்தையும், ஸம்ஸார நிவ்ருத்தி பூர்வகமான மோக்ஷப்ரதத்வத்தையும், அதுக்குறுப்பான சேஷ்டித வைலக்ஷண்யத்தையும், இந்த வ்யாபார ப்ரகாசிதமான ஸௌலப்யாதி குணங்கள் நித்யாநுபாவ்யம் என்னுமிடத்தையும், அந்த குணப்ரகாசகமான அவதார பாஹுள்யத்தையும்,

---

## 2.8 அணைவதரவணை அவதாரிகை

எட்டாம் திருவாய்மொழியில் - 'மேவும் தன்மையமாக்கினான்' (2.7.4.) என்று தன்னைச் சேர்ந்த மக்களுக்கும் அவனை அடைதல் வரையிலான பயனான வீடு பேற்றை அளிப்பவனாய்க் கொண்டு எம்பெருமான் நிற்கிற நிலையையும், அதுக்குக் காரணமான மேன்மையையும் நினைத்து , இத்தை இல்லறத்தார் இழக்கக்கூடாது' என்று உபதேசிப்பாராக நினைத்து; அவனுடைய எல்லாவற்றையும் நடத்தும் தன்மையையும், பிறவி மீளுகையை முன்னிட்டு வீடுபேற்றை அளிக்கும் தன்மையையும், அதுக்கு உறுப்பான திருவிளையாடல்களின் பிரிதொன்றுக்கில்லாச் சிறப்பினையும், இந்தச் செயலால் வெளிப்பட்ட எளிவந்த தன்மை முதலான குணங்கள் நித்யமாக அநுபவிக்கத்தக்கவை என்னும் விஷயத்தையும், அந்த குணத்தால் வெளிப்பட்ட அவதாரத்தின் மிகுதியையும்,

அவதாரதசையிலும் பரத்வம் அதிப்ரஸித்தம் என்னும் இடத்தையும், அவதீர்ணனானவன் ரக்ஷணவ்யாமோஹத்தால் பண்ணும் வ்யாபாரம் அநேகம் என்னுமிடத்தையும், அவதீர்ணனுடைய பரத்வோபயுக்தமான அதிசயிதாகாரங்கள் அறியவல்லாரில்லை என்னுமிடத்தையும், அவனுடைய ஆச்ரித ஸௌலப்யம் அபரிச்சிந்நம் என்னும் இடத்தையும், ஏவம் விதனைத்தாம் அநுபவிக்கப் பெற்றமையையும் அருளிச்செய்து, உபதேசாந்நிவ்ருத்தராய், ஸ்வலாபத்தோடே தலைக்கட்டுகிறார். இதில் சொல்லுகிற பரத்வம், முதல் திருவாய்மொழிபோலே ஸ்வரூபகதமாயுமன்றியே திண்ணன் வீட்டிற்போலே - மநுஷ்யத்வே பரத்வமுமன்றியே மோக்ஷப்ரதத்வ உபயுக்தமாயிருக்கிறது.

---

அவதார நிலைமையிலும் மேன்மை மிகவும் பிரசித்தம் என்னும் விஷயத்தையும், அவதரித்தவன் காப்பதன் பொருட்டு உள்ள மையலால் பண்ணும் செயல் பலபல என்னும் விஷயத்தையும், அவதரித்தவனுடைய மேன்மைக்கு வேண்டியதான வியக்கத்தக்க வடிவங்கள் அறியவல்லாரில்லை என்னும் விஷயத்தையும், அவனுடைய அடியார்கள் கிட்ட எளியனாகை அளவிடற்கரியது என்னும் விஷயத்தையும், இப்படிப்பட்ட எம்பெருமானைத் தாம் அநுபவிக்கப் பெற்றமையையும் அருளிச்செய்து, உபதேசத்தாலே மீண்டவராய் தாம் பெற்ற பயனோடே தலைக்கட்டுகிறார். இதில் சொல்லுகிற மேன்மை முதல் திருவாய்மொழி போலே (உயர்வற 1.1) தன்மைக்காக ஏற்பட்டதுமாயுமன்றியே, திண்ணன் வீட்டில் (2.2) போலே - மனிதனாயிருக்கும் தன்மையிலேயே மேன்மையுமன்றியே வீடு பேறு அளிக்க வேண்டியதாயிருக்கிறது.

2.8.1 அணைவ தரவணைமேல் பூம்பாவை யாகம்
புணர்வ திருவ ரவர்முதலும் தானே
இணைவனா மெப்பொருட்கும் வீடு முதலாம்
புணைவன் பிறவிக் கடல் நீந்து வார்க்கே.

அவ: முதற்பாட்டில் - இத்திருவாய்மொழியில் அர்த்தத்துக்கு ஸங்க்ரஹரூபமான ஸர்வநிர்வாஹகத்வத்தை அருளிச் செய்கிறார்.

திருவனந்தாழ்வானாகிற அணைமேலே அபிமதமாகச் சேர்வது; பூவிலே பரிமளம் வடிவுகொண்டாற்போலே போக்ய பூதையான பிராட்டியின் திருமேனியை போக்யமாக ஸம்ச்லேஷிப்பது; (இது நித்யவிபூதி நிர்வாஹகத்வம்). (லீலாவிபூதி நிர்வஹணத்தில்) (காரணேச்வரராக) ப்ரஸித்தரான ப்ரஹ்மருத்ரர்கள் இருவருடைய உத்பத்திஸ்தித்யாதிகளுக்கும் தானே ஹேதுவாயிருக்கும்; (ரக்ஷ்யமான ஜகத்தில்) ஸமஸ்த

---

2.8.1. முதற்பாட்டில் - இத்திருவாய்மொழியில் அர்த்தத்துக்குச் சுருக்கமான எல்லாவற்றையும் நடத்தும் தன்மையை அருளிச் செய்கிறார்..

திருவனந்தாழ்வானாகிற படுக்கை மேலே விருப்பமாகச் சேர்வது; பூவிலே பரிமளம் வடிவு கொண்டாற்போலே அழகான பிராட்டியின் திருமேனியை இனிமையாகக்கலப்பது.; (இது விண்ணாட்டை நடத்தும் தன்மை). மண்ணுலகை நடத்தும் விதத்தில் - உலகுக்குக் காரணமான ஈச்வரர் என்று பிரசித்தரான பிரமன், சிவன் ஆகிய இருவருடைய பிறப்பு இருப்பு முதலானவற்றுக்கும் தானே காரணமாயிருக்கும்; காப்பாற்றத் தகுந்ததான உலகில் எல்லாப்

பதார்த்தங்களுக்கும் (அவதாரமுகத்தாலே) ஸஜாதீயனாய் இருக்கும். (ரக்ஷணத்துக்கு மேல் எல்லையான) மோக்ஷத்துக்கு ஹேதுவாயிருக்கும்; (இத்தால் ஸர்வமுக்தி ப்ரஸங்கியாமைக்காக) ஸம்ஸாரமாகிற கடலை நீந்திக் கரை ஏற வேண்டுவார்க்குத் தெப்பமாமவனாயிருக்கும். புணைவன் - தெப்பமாமவன். 1

2.8.2 நீந்தும் துயர்ப்பிறவி உட்படமற்றெவ்வெவையும்
நீந்தும் துயரில்லா வீடு முதலாம்
பூந்தண் புனல்பொய்கை யானை இடர்கடிந்த
பூந்தண் துழாயென் தனிநாயகன் புணர்ப்பே.

அவ: அநந்தரம், ஸம்ஸார நிஸ்தரணபூர்வகமான மோக்ஷத்துக்கு ஹேது அவனுடைய ஸம்பந்தம் என்கிறார்.

(இஸ்ஸம்ஸார நிவ்ருத்திக்கு நிதர்சனம் என்னலாம்படி)

---

பொருள்கட்கும் அவதாரத்தின் வாயிலாக ஒப்பானதாயிருக்கும்; காப்பதற்கு மேல் எல்லையான மோக்ஷத்துக்குக் காரணமாய் இருக்கும்; இத்தால் எல்லாரும் மோக்ஷம் பெற நேருதல் வராமைக்காக பிறவியாகிற கடலை நீந்திக் கரை ஏற வேண்டுவார்க்கு தெப்பமானவனாய் இருக்கும். புணைவன் - தெப்பமாமவன். கொண்டு கூட்டுதல் - அரவணைமேல் - அணைவது, பூம்பாவையாகம் புணர்வது, இருவரவர் முதலும் தானே, வீடுமுதலாகைக்காக எப்பொருட்கும் இணைவனாம், பிறவிக்கடல் நீந்துவார்க்குப் புணைவன் என்று உரை. 1

2.8.2. பின்னர், பிறவிக் கடலைத் தாண்டுவதன் வாயிலாக மோக்ஷத்துக்குக் காரணம் அவனுடைய ஸம்பந்தம் என்கிறார்.

இப்பிறவியைப் போக்குவதற்கு எடுத்துக்காட்டு என்னலாம்படி

பூவையுடைத்தாய், குளிர்ந்த புனலையுடைய பொய்கையிலே யானைக்கு (முதலையால் வந்த) இடரைப் போக்கின செவ்வியையுடைத்தாய், குளிர்ந்த திருத்துழாயையுடையனாய், (அத்தாலே) எனக்கு அத்விதீயநாயகனானவனுடைய ஸம்பந்தமானது (இச்சேதநனுக்கு) நீந்தாநிற்கும்படி துஸ்தரமாய், து:க்கோத்தரமான பிறவி உட்பட மற்றும் நீந்தும்படியான (ஜராமரணாதிகளான) எவ்வகைப்பட்ட து:க்கமும் ஸ்பர்சியாத மோக்ஷாநந்தத்துக்கு ஹேதுவாம். முதற்பாட்டில் 'வீடு முதலாம்' என்றத்தை விவரிக்கிறது. 2

2.8.3 புணர்க்கும் அயனாம் அழிக்கும் அரனாம்
புணர்த்ததன் உந்தியோடு ஆகத்து மன்னி
புணர்த்த திருவாகித் தன்மார்வில் தான்சேர்
புணர்ப்பன் பெரும்புணர்ப்பு எங்கும் புலனே.

அவ: அநந்தரம், அவனுடைய திவ்யமான சேஷ்டிதங்கள் ஸர்வத்ர ப்ரஸித்தம் என்கிறார்.

---

பூவையுடைத்தாய், குளிர்ந்த புனலையுடைய குளத்திலே யானைக்கு முதலையால் வந்த துன்பத்தைப் போக்கின, புதியதாய், குளிர்ந்த திருத்துழாய் மாலையையுடையனாய், அத்தாலே எனக்கு ஒப்பற்ற தலைவனானவனுடைய ஸம்பந்தமானது இச்சேதநனுக்கு நீந்தும்படி தாண்ட முடியாததாய், துன்பம் நிறைந்ததான பிறவி உட்பட மற்றும் நீந்தும்படியான பிறப்பு இறப்பு முதலான எவ்வகைப்பட்ட துக்கமும் தொடாத வீட்டின்பத்துக்குக் காரணமாம். முதற்பாட்டில் 'வீடு முதலாம்" என்று சொன்னதை விவரிக்கிறது. குறிப்பு - துயர் பிறவி - சீயர் பாடம். 2

2.8.3 பின்னர், அவனுடைய திவ்வியமான திருவிளையாடல்கள் எல்லாவிடத்திலும் சிறப்பாகக் காணலாம் என்கிறார்.

தன்னை உத்பாதித்த திருநாபியோடே கூட திருமேனியில் ஒரு பார்ச்வத்திலும் நித்யவாஸம் பண்ணி லோகஸ்ருஷ்டி பண்ணுகிற அஜனுமாய், ஸம்ஹரிக்கிற ஹரனுமாய், (இப்படி தத்ததந்தராத்மதையாலே ததாத்மகனாய்) தன் மார்விலே (நிரூபகமாம்படி) சேர்த்துக் கொள்ளப்பட்ட திருவுடையனாய், தானே தனக்குத்தகுதியான ஸ்வாதீந சேஷ்டிதனானவனுடைய அபரிச்சிந்நமான திவ்ய வ்யாபாரங்களானவை எங்கும் கண்டு அநுபவிக்கலாம்படி ப்ரஸித்தம். "இருவரவர் முதலுந்தானே" (1) என்றத்தை விவரிக்கிறது. 3

தன்னை (ஆழ்வாரை) உண்டு பண்ணின திருநாபியோடே கூட திருமேனியில் ஒரு பக்கத்திலும் எப்போதும் இருந்து உலகைப் படைக்கிற பிரமனுமாய், அழிக்கிற சிவனும்ாய், இப்படி அந்தந்த ஆத்மாவில் ஊடுறுவி அவர்களைத் தனக்குச் சரீரமாகவுடையவனாய், தன் (எம்பெருமான்) மார்பிலே அடையாளமாம்படி சேர்த்துக் கொள்ளப்பட்ட பெரிய பிராட்டியாரையுடையவனாய், தானே தனக்குத் தகுதியான- தன் இட்ட வழக்கான திருவிளையாடல்களைச் செய்பவனுடைய அளவிட முடியாததான தெய்வீகச் செயல்களானவை எங்கும் கண்டு அநுபவிக்கலாம்படி சிறப்பாக இருக்கும். "இருவரவர் முதலுந்தானே" (1) என்ற முதல் பாட்டின் தொடரை விவரிக்கிறது. குறிப்பு - திருவாகி - திருவுடையனாய் என்று லக்ஷ்மி ஸம்பந்தம் சொன்னது காண்க. (அழகான சொல் ஆட்சி). கொண்டு கூட்டுதல் - புணர்த்த தன்னுந்தியோடு ஆகத்து மன்னி - புணர்க்கும் அயனாம், அழிக்கும் அரனாம், தன்மார்வில் - புணர்த்த திருவாகி - தான் சேர் புணர்ப்பன் பெரும் புணர்ப்பு எங்கும் புலன் என்று உரை. 3

2.8.4 புலனைந்து மேயும் பொறியைந்து நீங்கி
நலமந்த மில்லதோர் நாடு புகுவீர்!
அலமந்து வீய வசுரரைச் செற்றான்
பலமுந்து சீரில் படிமினோ வாதே.

அவ: அநந்தரம், ஸம்ஸார நிவ்ருத்தி பூர்வகமான பரமபதப்ராப்திக்கு ஏவம்விதனுடைய குணங்களிலே நித்யாவகாஹநம் பண்ணுங்கோள் என்கிறார்.

புலப்படும் விஷயங்கள் ஐந்திலும் பொருந்தி பொறிபோலே இவனை அகப்படுத்திக்கொள்ளும் ஐந்து இந்த்ரியங்களின் வசத்தினின்றும் அகன்று ஆநந்தம் அளவிறந்திருப்பதாய், அத்விதீயமான தேசத்திலே போய்ப்புக வேண்டியிருப்பீர்! அலமந்து நசிக்கும்படி அசுரரைக் கொன்றவனுடைய ஆரம்பமே தொடங்கி (இனிமையாலே) 'பலம்' என்னலாம்படியான குணங்களிலே என்றும் ஒக்க

---

2.8.4. பின்னர், பிறவியிலிருந்து மீளுகை வாயிலாக பரமபதத்தை அடைவதற்கு முன் சொன்னவனுடைய (எம்பெருமானுடைய) குணங்களிலே எப்போதும் ஊன்றியிருங்கோள் என்கிறார்.

கண்ணுக்குத் தென்படும் விஷயங்கள் ஐந்திலும் பொருந்தி இயந்திரம் போலே இவனை அகப்படுத்திக் கொள்ளும் ஐந்து இந்திரியங்களின் வசத்திலிருந்து அகன்று ஆனந்தம் அளவிருந்திருப்பதாய், ஒப்பற்றதான தேசத்திலே போய்ப்புக வேண்டியிருப்பீர்! தடுமாறி அழியும்படி அசுரரைக் கொன்றவனுடைய ஆரம்பமே தொடங்கி இனிமையாலே 'பயன்' என்னலாம் படியான குணங்களிலே என்றும் ஒக்க

அவகாஹியுங்கோள். ரஸாயனமான பய:பாநநைரந்தர்யத்தாலே பித்தசாந்தியும் இனிமையும் பிறக்குமாபோலே, போக்ய குணங்களிலே நிரந்தராநுபவம் பண்ணவே, அநிஷ்ட நிவ்ருத்தியும், இஷ்ட ப்ராப்தியும் தன்னடையே வரும் என்று கருத்து. புலனும் பொறியும் என்கிற இவை இரண்டும் - விஷயங்களுக்கும், இந்த்ரியங்களுக்கும் கலந்து பேராய் வரும்.

2.8.5 ஓவாத் துயர்ப்பிறவி உட்படமற் றெவ்வெவையும்
மூவாத் தனிமுதலாய் மூவுலகும் காவலோன்
மாவாகி யாமையாய் மீனாகி மானிடமாம்
தேவாதி தேவ பெருமானென் தீர்த்தனே.

அவ: அநந்தரம், ஸமஸ்தகாரணபூதனானவன் கார்யபூதஜகத் ரக்ஷணார்த்தமாகப் பண்ணின அவதாரங்களில் வைலக்ஷண்யத்தை அருளிச்செய்கிறார்.

---

ஊன்றியிருங்கோள்.. சிறந்த மருந்தான பால் பருகுதலின் இடைவிடாமையினாலே பித்தசாந்தியும் இனிமையும் பிறக்குமா போலே, இனிமை தரக்கூடிய குணங்களிலே எப்போதும் அநுபவம் பண்ணவே, விரோதி போகையும் விருப்பத்தைப் பெறுதலும் தன்னடையே வரும் என்றபடி. புலனும் பொறியும் என்கிற இவை இரண்டும் - விஷயங்களுக்கும், இந்த்ரியங்களுக்கும் கலந்து பேராய் வரும். குறிப்பு -ஐந்தும் நீங்கி -முற்றும்மை, ஐந்தும் -சீயர் பாடம். கொண்டு கூட்டுதல் -புலனைந்தும் மேயும் என்று தொடங்கி, அசுரரைச் செற்றான் -முந்துபலம்-சீரிலோவாதே படிமின் என்று உரை. 4

2.8.5. பின்னர், எல்லாவற்றுக்கும் காரணமானவன் செயலாய்ப் படைத்த உலகைக் காப்பதற்காகப் பண்ணின அவதாரங்களில் பிரிதொன்றுக்கில்லாச் சிறப்பை அருளிச் செய்கிறார்.

அவிச்சிந்நமான து:க்கத்தைத் தருவதான ஜந்ம ஸம்பந்தரூபமான ஸ்ருஷ்டி அகப்பட்ட மற்ற ஸ்திதி ஸம்ஹாராதிகளான எல்லா வ்யாபாரங்களுக்கும் மூத்துச் சோம்பி விடாத ஸஹாயாந்தர நிரபேக்ஷ காரணபூதனாய்க் கொண்டு (ஸ்ருஜ்யமான) லோகத்தினுடைய ரக்ஷணத்தையுடையனாய், ப்ரஹ்மாதிதேவர்களுக்கும் (அவ்வருகாம்படி) ஆதி தேவர்களான அயர்வறும் அமரர்களுக்கு அதிபதியாய், எனக்கு அவகாஹிக்கும் துறையாம்படி ஸுலபனானவன், (அந்த ஜகத் ரக்ஷணார்த்தமாக) (வேதப்ரவர்த்தகனான) ஹயக்ரீவனாய், (புராணப்ரவர்த்தக) கூர்மமத்ஸ்யரூபியாய் (கீதோபநிஷத் ஆசார்யனுமான) மநுஷ்யனுமாம். "இணைவனாம் எப்பொருட்கும்" (1) என்கிற பதத்தை விவரிக்கிறது. 5

இடைவிடாது துக்கத்தைத் தருவதான பிறவி ஸம்பந்தமான படைப்பில் அகப்பட்ட மற்ற இருப்பு, அழித்தல் முதலானவைகளான எல்லாத் தொழில்கட்கும் கிழவனாகிச் சோம்பிவிடாமல் வேறு உதவியில் விருப்பமின்றித் தானே காரணமாய், படைத்த உலகைக் காப்பவனாய், பிரமன் முதலான தேவர்கட்கும் அப்பாற்பட்ட ஆதிதேவர்களான நித்ய சூரிகளுக்குத் தலைவனாய், எனக்கு (ஆழ்வாருக்கு) அனுபவிக்கும் (மூழ்கும்) துறையாம்படி இனியனானவன், அந்த உலகைக் காப்பதன் பொருட்டு வேதத்தை வளரச் செய்பவனான ஹயக்ரீவனாய், புராணத்தை வளரச்செய்யும் கூர்மம், மீன் முதலான அவதாரமாய், கீதை என்னும் உபநிடதத்துக்கு ஆசார்யனுமான மனிதனாம். "இணைவனாம் எப்பொருட்கும்" (1) என்கிற பதத்தை விவரிக்கிறது. குறிப்பு: ஓவாத்துயர்-ஈறுகெட்ட எதிர்மறைப் பெய.ரெச்சம். துயர் பிறவி - சீயர் பாடம். கொண்டு கூட்டுதல் - ஓவாத்துயர் பிறவி என்று தொடங்கி, மூவுலகும் காவலோன்; தேவாதி தேவபெருமான் என் தீர்த்தன் மாவாகி ஆமையாய் மீனாகி மானிடமாம் என்று உரை. 5

2.8.6 தீர்த்தன் உலகளந்த சேவடிமேல் பூந்தாமம்
சேர்த்தி அவையே சிவன்முடிமேல் தான்கண்டு
பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை
பேர்த்து மொருவரால் பேசக் கிடந்ததே.

அவ: அநந்தரம், இவ்வவதார தசையிலுண்டான பரத்வம் அதிப்ரஸித்தம் என்கிறார்.

பாவநபூதனான க்ருஷ்ணனுடைய பூர்வாவதாரத்திலே லோக த்ரயத்தையும் அளந்துகொண்ட செவ்வையையுடைய திருவடி களிலே அழகிய மாலைகளை ஸமர்ப்பித்து, அவற்றையே சிவனுடைய ஜடாமகுடத்திலே தானே கண்டு அர்ஜுனன் அறுதியிட்ட (அந்த) பசுத்த திருத்துழாயை யுடையவனுடைய பரத்வமானது இப்பார்த்தனையொழிய வேறொருவராலும் உபபாதித்துச் சொல்லவேண்டும்படி தெளியாது கிடந்த அம்சமுண்டோ? ஸுப்ரஸித்தமன்றோ என்று கருத்து. 6

---

2.8.6. பின்னர், இவ்வவதார நிலைமையில் உண்டான மேன்மை அனைவரும் அறிந்தது என்கிறார்.

தூயனான கண்ணனுடைய முன் அவதாரத்திலே மூவுலகையும் அளந்துகொண்ட நேர்மையையுடைய திருவடிகளிலே அழகிய மாலைகளை ஸமர்ப்பித்து, அவற்றையே சிவனுடைய சடை முடியிலே தானே கண்டு அர்ச்சுனன் நிச்சயித்த அந்த பசுத்த- புதுமையான திருத்துழாய்மாலையையுடையவனுடைய மேன்மையானது இந்த அர்ச்சுனனை ஒழிய வேறொருவராலும் நிரூபித்துச் சொல்ல வேண்டும்படி தெரியாது கிடந்த பகுதி உண்டோ? மிக்க வெளிப்படையானது என்றபடி. குறிப்பு - ஒழிதல்- துணைவினை. கிடந்ததே - ஏகாரம் மிகவும் ப்ரஸித்தம்.

2.8.7 கிடந்திருந்து நின்றளந்து கேழலாய்க் கீழ்புக்
கிடந்திடும் தன்னுள் கரக்கும் உமிழும்
தடம் பெருந்தோள் ஆரத்தழுவும் பாரென்னும்
மடந்தையைமால் செய்கின்ற மாலார் காண்பாரே.

அவ: அநந்தரம், ரக்ஷ்யமான ஜகத்தைப் பற்றத் தன் வாத்ஸல்யத்தாலே அநேகவ்யாபாரங்களைப் பண்ணும் என்கிறார்.

{ரக்ஷணார்த்தமாக प्रतिशिश्ये महोदधिम् (ப்ரதிசிச்யே மஹோததிம்) என்று கடற்கரையில் வழி வேண்டிக்} கிடந்தும் {उटजे राममासीनम् (உடஜே ராமமாஸீநம்) என்று திருச்சித்ர கூடத்திலே} இருந்தும், {अवष्टभ्य च तिष्टन्तम् (அவஷ்டப்ய ச திஷ்டந்தம்) என்றும், ராவணவதாநந்தரம் தேவதா ஸந்நிதியில் வில்லை நடுக்கொத்துப் பிடித்து} நின்றும், (அன்றியே 'புளிங் குடிக்கிடந்து வரகுணமங்கையிருந்து வைகுந்தத்துள் நின்று'

---

2.8.7. பின்னர், காப்பாற்றத் தகுந்ததான உலகைக்குறித்து தன் தாயன்பாலே அநேக செயல்களைப் பண்ணும் என்கிறார்.

'காப்பதன் பொருட்டு பெரிய கடலுக்கு எதிராக (இராமன்) படுத்துக் கொண்டான்' (இ.யு.கா. 21.1) என்று கடற் கரையிலே வழி வேண்டிக்கிடந்தும், 'பர்ணசாலையில் உட்கார்ந்து கொண்டிருக்கிற இராமனை' (இ.அ.கா. 96.25) என்று திருச்சித்திரகூடத்திலே இருந்தும், 'நடுவில் வில்லைப் பிடித்துக் கொண்டு நின்று கொண்டிருக்கிறவனை' (இ.கி.கா..19.25) இராவணவதமான பிறகு தேவதை முன்னிலையில் வில்லை நடுக்கொத்துப் பிடித்து நின்றும், அன்றியே 'புளிங்குடிக் கிடந்து வரகுணமங்கை இருந்து வைகுந்தத்துள் நின்று' (9.2.4)

என்கிறபடியே அர்ச்சாவதார ஸ்தலத்திலே கிடந்தும் இருந்தும் நின்றும்) (த்ரிவிக்ரமனாய் அநந்யார்ஹமாம்படி) அளந்தும், வராஹரூபியாய் (ப்ரளய ஜலத்துக்குக்) கீழே புக்கு (அண்ட கடாஹத்தினின்றும்) ஒட்டு விடுவித்து எடுத்தும், (மஹாப்ரளயத்திலே வடதளசாயியாய்) வயிற்றுக்குள்ளே (தெரியாதபடி) கரந்தும், வெளிநாடு காணும்படி உமிழ்ந்தும், இடமுடைத்தான பெரிய திருத்தோள்கள் நிரம்பும்படி (அஸாதாரண விக்ரஹத்தோடே) தழுவியும்,(இப்படி) பூமியென்று சொல்லப்படுகிற மடந்தையை ஸர்வாதிகனான ஈச்வரன் பண்ணுகிற வ்யாமோஹத்தை அறியவல்லார் ஆர்? அதிசயிதஜ்ஞாநர்க்கும் அறியவொண்ணாது என்று கருத்து. 7

2.8.8 காண்பாரார் எம்மீசன் கண்ணனையென் காணுமாறு
ஊண்பேசில் எல்லாவுலகும் ஓர் துற்றாற்றா
சேண்பால வீடோ வுயிரோமற்றெப் பொருட்கும்
ஏண்பாலும் சோரான் பரந்துளனா மெங்குமே.

என்கிறபடியே அர்ச்சாவதார இடத்தில் கிடந்தும் இருந்தும் நின்றும் த்ரிவிக்ரமனாய் மற்றவர்கட்கு ஆட்படாதபடி அளந்தும், வராக வடிவாய் பிரளய ஆபத்தில் நீருக்குக் கீழே புகுந்து அண்ட கோளத்தின் மேல் ஒட்டிலிருந்தும் பூமியை ஒட்டு விடுவித்து எடுத்தும், மகாபிரளயத்தில் ஆலிலையில் பள்ளி கொண்டவனாய் வயிற்றுக்குள்ளே தெரியாதபடி மறைத்தும், வெளிநாடு காணும்படி உமிழ்ந்தும் விசாலமான பெரிய திருத்தோள்கள் நிரம்பும்படி தனக்கே உரிய திருமேனி யோடேகூட தழுவியும், இப்படி பூமியென்று சொல்லப்படுகிற பெண்ணை யாவர்க்கும் உயர்ந்தவனான எம்பெருமான் பண்ணுகிற மையலை அறியவல்லார் ஆர்? அறிவிற் சிறந்தார்க்கும் அறியமுடியாது என்றபடி. கொண்டு கூட்டுதல் - கிடந்திருந்து என்று தொடங்கி, மால் செய்கின்ற மால் - காண்பாரார் எனறு உரை. 7

அவ: அநந்தரம், அவன் எனக்கு ப்ரகாசிப்பித்த அதிசயித ஆகாரங்கள் துரவபோதம் என்கிறார்.

எனக்கு ஸ்வாமியாய், ஸுலபனான க்ருஷ்ணனை அறியவல்லார் ஆர்? (அவன்படி இதுவானால்) அறியும்படி எங்ஙனே? (அவனுக்கு) ஊண் சொல்லப்பார்க்கில் "अत्ता चराचर ग्रहणात्" அத்தாசராசரக்ரஹணாத் என்கிறபடியே) சராசராத்மகமான) ஸகலலோகமும் ஒரு பிடிக்கும் போராது; (அவனுக்கு இருப்பிடமான) வீடானது ("विश्वतः पृष्ठेषु सर्वतः पृष्ठेषु" (விச்வத: ப்ருஷ்டேஷு ஸர்வத: ப்ருஷ்டேஷு) என்கிறபடியே ஸர்வ லோகத்துக்கும் அவ்வருகான பரமபத ப்ரதேசத்திலது அவனோ தன்னை ஒழிந்த ஸகல பதார்த்தங்களுக்கும் அந்தராத்மா ஒரு

2.8.8. பின்னர், எம்பெருமான் எனக்குக் காட்டிய சிறந்த நிலைகள் அறிவுக்கு எட்டாது என்கிறார்.

எனக்குத் தலைவனாய், எளியனான கண்ணனை அறியவல்லார் ஆர்? அவன் தன்மை இதுவானால் அறியும்படி எங்ஙனே? அவனுக்கு உணவு சொல்லப் பார்க்கில் 'அசைவதும் அசையாததும் அவனுக்கு உணவாக (வேதத்திலிருந்து தெரியப் படுவதால்) அவன் அத்தா - அழிப்பவன்' (பி.சூ. 1.2.9.) என்கிற படியே அசையும் பொருள், அசையாப்பொருள் உள்ளிட்டதான எல்லா உலகமும் ஒரு பிடிக்கும் போராது; அவனுக்கு இருப்பிடமான வீடானது, 'பஞ்சபூதங்களைக் கொண்டு படைத்த் பொருள்களைக் காட்டிலும் ஒன்றோடொன்று கலவாத பஞ்ச பூதங்களின் படைத்த பொருள்களுக்கு மேலும் பரமபதம் உள்ளது' (சா.உ. 3.13) என்கிறபடியே எல்லா உலகுக்கும் அவ் வருகான பரமபதத்தில் உள்ளது; அவனோ தன்னை ஒழிந்த எல்லாப் பொருள்களுக்கும் அந்தராத்மா ஒரு

ரேகாமாத்ரமும் சோரவிடாதவனாய்க் கொண்டு எல்லா ப்ரதேசத்திலும் பரந்து நில்லா நிற்கும். ஸர்வஜகத்க்ராஸ சீலனாய், பரமபதநிலயனாய், ஸர்வபதார்த்தங்களிலும் அந்தர் பஹிச்ச வ்யாப்தனானவனை எங்ஙனே பரிச்சேதித்து அறிவது? என்று கருத்து. ஏண் என்று - வரையாய், ரேகையைக் காட்டுகிறது. ஓ என்கிற அசைகள் - வினாவைக் காட்டுகிறது.8

2.8.9 எங்குமுளன் கண்ணன் என்ற மகனைக் காய்ந்து
இங்கில்லை யாலென்று இரணியன் தூண்புடைப்ப
அங்கப் பொழுதே அவன் வீயத் தோன்றியஎன்
சிங்கப் பிரான் பெருமை ஆராயும் சீர்மைத்தே?.

அவ: அநந்தரம், அவனுடைய ஆச்ரித ஸௌசீல்யாதிசயம் அபரிசச்சேத்யம் என்கிறார்.

---

கோடு (ரேகா) மாத்ரமும் நழுவவிடாதவனாய்க்கொண்டு எல்லா இடத்திலும் பரந்து நிற்கும்; எல்லா உலகையும் அமுது செய்யும் தன்மையனாய், எல்லாப் பொருள்களிலும் உள்ளும் புறமும் பரவி இருப்பவனானவனை எப்படி அளவிட்டு அறிவது? என்றபடி. ஏண் என்று- வரையாய் (கோடு), ரேகையைக் காட்டுகிறது. வீடோ, உயிரோ, அவனோ - ஓ என்கிற அசைகள் - வினாவைக் காட்டுகிறது. குறிப்பு - எண் என்பது ஏண் என்று எதுகை நோக்கி குறில் நெடிலாயிற்று. கொண்டு கூட்டுதல்-எம் ஈசன் கண்ணனை-காண்பாரார்? காணுமாறு - என்? ஊண் பேசில் எல்லாவுலகும் ஓர் துற்றாற்றா என்று தொடங்கி, எங்கும் பரந்துளனாம் என்று உரை. 8

2.8.9. பின்னர், அவனுடைய மிகுந்த நல்லொழுக்கம் (அடியார் திறத்துப் புரையறக் கலக்கும் சிறந்த தன்மை) அளவிடமுடியாது என்கிறார்.

{सर्वं व्याप्य स्थित: (ஸர்வம் வ்யாப்ய ஸ்தித:) என்கிறபடியே} ஸர்வநிர்வாஹகனான ஸர்வேச்வரன் ஸர்வத்ர ஸந்நிஹிதன் என்ற புத்ரனைக் கோபித்து, இவ்விடத்தில் இல்லை என்று தான் அறுதியிட்ட) தூணை ஹிரணியன் தட்ட, அத்தூணிலே அக்காலந்தன்னிலே ஹிரணியன் நசிக்கும்படி தோற்றின என்னுடைய நரஸிம்ஹரூபியான மஹோபகாரகனுடைய (ஆச்ரிதபக்ஷபாத) மாஹாத்ம்யம் (நெஞ்சால் பரிச்சேதித்து) ஆராயும் தன்மைத்தோ? 9

2.8.10 சீர்மைகொள் வீடு சுவர்க்க நரகீறா
ஈர்மைகொள் தேவர் நடுவாமற் றெப்பொருட்கும்
வேர்முதலாய் வித்தாய்ப் பரந்து தனிநின்ற
கார்முகில்போல் வண்ணனென் கண்ணனைநான்
கண்டேனே.

அவ: அநந்தரம், இப்படி ஸர்வப்ரகாரோபகாரகனாய், மோக்ஷ

---

'எல்லாவற்றிலும் உள்ளும் புறமும் பரந்து இருக்கிறான்' (தை.உ.நா.11) என்கிறபடியே எல்லாவற்றுக்கும் கண் போன்றவனான எம்பெருமான் எல்லா இடத்திலும் கிட்டியிருப்பவன் என்று சொன்ன மகனான பிரகலாதனைக் கோபித்து 'இவ்விடத்தில் இல்லை' என்று தான் நிச்சயித்த தூணை இரணியன் தட்ட அத்தூணிலிருந்து அக்காலத்திலே - அச்சமயத்திலே இரணியன் அழியும்படி தோன்றிய என்னுடைய நரசிம்மவடிவான பேருதவி செய்தவனுடைய (அடியார் திறத்து) ஓரத்தன்மையின் பெருமை நெஞ்சால் அளவிட்டு அறியவும் ஆராயவும் தன்மையுடையதோ? முடியாது என்றபடி. குறிப்பு - இல்லையால் - ஆல் அசை. கொண்டு கூட்டுதல் - எங்குமுளன் என்று தொடங்கி, தூண் - இரணியன் - புடைப்ப, அங்கப்பொழுதே அவன் வீயத் தோன்றிய என்று தொடங்கி உரை. 9

ப்ரதனானவனை நான் அநுபவிக்கப் பெற்றேன் என்று ஹ்ருஷ்டராகிறார்.

(புண்யபாபகாரிதமாகையன்றிக்கே பகவத்க்ருபைக ஸாத்யமான) சீர்மையையுடைய மோக்ஷமும் (புண்யபாபபல ரூபமான) ஸ்வர்க்க நரகங்களும் மேலெல்லையாக (பல ப்ரதத்வநிபந்தநமான) ஈரப்பாட்டையுடைய தேவர்கள் (ஸாதந பலங்களுக்கு) நடுவாகவும், ப்ரதமபாவியான ஸாதநாதி ஸமஸ்த பதார்த்தங்களுக்கும் ஸஹகாரியுமாய், நிமித்தமுமாய், உபாதாநமுமாய்க்கொண்டு ஸர்வத்ர வ்யாப்தனாய் வைத்து (வ்யாப்ய பதார்த்தங்களில்) வ்யாவ்ரத்தனாய் நிற்பானாய், கார்காலத்திலே மேகம் போன்ற வடிவையுடையனாய்க்கொண்டு எனக்கு ஸுலபனான க்ருஷ்ணனை

---

2.8.10. பின்னர், இப்படி எல்லா விதத்தாலும் உதவுபவனாய், வீடுபேற்றை அளிப்பவனை நான் அநுபவிக்கப் பெற்றேன் என்று மகிழ்ச்சி அடைகிறார்.

புண்ணிய பாபங்களால் செய்விக்கப்பட்டதன்றிக்கே எம்பெருமானுடைய கருணை ஒன்றினாலேயே பெறப்படுவதான சீர்மையையுடைய மோக்ஷமும் புண்ணிய பாபங்களின் பயனான சுவர்க்க நரகங்களும் மேல் எல்லையாகப் பயனை அளிப்பதற்குக் காரணமான மன இரக்கத்தையுடைய தேவர்கள் பக்தி, யாகம் முதலானவற்றால் சாதித்துப் பெறும் பயனுக்கு நடுவாகவும், முதலிலுண்டான உபாயம் முதலான எல்லாப் பொருள்களுக்கும் துணையாய், வினையாய், முதலாய், மும்முதற் காரணமுமாய்க்கொண்டு எல்லா இடத்திலும் பரவியிருப்பவனாய்க் கொண்டு பரந்துள்ள பொருள்களில் பரந்திருப்பதால் அவற்றின் தோஷம் தட்டாமல் நிற்பவனாய், மழைக்கால மேகம் போலே வடிவை உடையவனாய்க் கொண்டு எனக்கு எளியனான கண்ணனை

நான் அநுபவிக்கப் பெற்றேன் என்று கொண்டு ஸ்வலாபத்துக்கு ஹ்ருஷ்டராகிறார். "ஈர்மைகொள் தேவர்" என்று - உபயபாவநா நிஷ்டர் என்றுமாம். 10

2.8.11 கண்டலங்கள் செய்ய கருமேனி யம்மானை
வண்டலம்பும் சோலை வழுதி வளநாடன்
பண்டலையிற் சொன்ன தமிழாயிரத்திப் பத்தும் வல்லார்
விண்டலையில் வீற்றிருந்து ஆள்வர்எம் மாவீடே..

அவ: அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக ஸ்வாராஜ்ய நிர்வாஹகத்வத்தை அருளிச்செய்கிறார்.

கண்ணில் பரப்பெங்கும் சிவந்து, (அதுக்குப் பரபாகமாய்) ச்யாமளமான திருமேனியையுடைய ஸர்வஸ்வாமியை வண்டுகள் மது வெள்ளத்திலே அலைகிற சோலைகளையுடைய திருவழுதி

---

நான் அநுபவிக்கப் பெற்றேன் என்று அநுபவம் பெற்றதற்கு மகிழ்ச்சியடைகிறார். 'ஈர்மைகொள்தேவர்' என்று எம்பெருமானையே தியானம் செய்வதில் ஊற்றமுள்ள வர்களையும் கருமம் செய்வதிலே ஊற்றமுடையவர்களையும் சொலலிற்றாகவுமாம். 10

2.8.11. பின்னர், இத்திருவாய்மொழிக்குப் பயனாகக் கருமத்துக்கு வசப்படாமல் இருக்கும் வீடு பேற்றுக்குத் தலைவனாயிருக்கும் தன்மையை அருளிச் செய்கிறார்.

கண்ணில் பரப்பு எங்கும் சிவந்து அதுக்குப் பகைத் தொடையாய்-மேன்மையாய் கருமையான திருமேனியையுடைய எல்லார்க்கும் தலைவனை வண்டுகள் தேன் வெள்ளத்திலே அலைகிற சோலைகளையுடைய திருவழுதி

வளநாட்டையுடைய ஆழ்வார் பண்தான் தளமாம்படி அதின்மேலே அருளிச்செய்த ஆயிரம் திருவாய்மொழியில் இப்பத்தும் வல்லார் பரமாகாசத்தின்மேல் {"स स्वराड भवति" (ஸ ஸ்வராட் பவதி) என்கிறபடியே} வ்யாவ்ருத்தமாக இருந்து ஸர்வப்ரகாரவிசிஷ்டமாய், நிரதிசய போக்யமான மோக்ஷாநந்தத்தை ஸ்வாதீநமாக அநுபவிப்பார்கள். என்னோடு என் அநுபந்திகளோடு வாசியற எங்களுக்குத் தருவதாக இருக்கிற பெரிய வீடு என்றுமாம். 11

இது கலிவிருத்தம்

வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர் திருவடிகளே சரணம்

---

வளநாட்டையுடைய நம்மாழ்வார் பண்தான் உயர்ந்ததாம்படி அதின்மேலே அருளிச்செய்த ஆயிரம் திருவாய்மொழியில் இப்பத்தும் வல்லார் பரமபதத்தில் 'கர்மவசமில்லாமல் சிறந்திருந்து' (சா.உ.3.25) என்கிறபடியே வீறுபாடு தோற்ற இருந்து எல்லா விதத்திலும் சிறந்தவராய் எல்லையற்ற அழகான வீட்டின்பத்தை தனதாக்கி அநுபவிப்பர்கள் என்கிறார். என்னோடு என்னைச் சேர்ந்தவர்களோடு வாசியற எங்களுக்குத் தருவதாக இருக்கிற பெரியவீடு என்னுமாம். கொண்டு கூட்டுதல் - கண்தலங்கள் என்று தொடங்கி, வீற்றிருந்து-எம்மாவீடு-ஆள்வர் என்று உரை. 11

இது கலிவிருத்தம்

வாதிகேசரி அழகியமணவாளச்சீயர் திருவடிகளே சரணம்.

@@@@@@@

# 2.9. எம்மா வீடு ப்ரவேசம்

ஒன்பதாம் திருவாய்மொழியில் - ஈச்வரனுடைய மோக்ஷ ப்ரதத்வத்தை அநுபவித்தவர், அந்த மோக்ஷப்ரகாரங்கள் எல்லாவற்றுக்கும் தாத்பர்யபூமியாவது - பகவத் பாரதந்த்ர்யமே என்று நிஷ்கர்ஷித்து; அவன் திருவடிகளோட்டை ஸம்பந்தமே உத்தேச்யமென்னுமிடத்தையும், தத்விஷயஜ்ஞாநத்தில் அபேக்ஷையையும், ஜ்ஞாநாநுரூபமான ஸ்துத்யநுபவத்தில் ச்ரத்தையையும், அநுபாவ்யம் ததேகபாரதந்த்ர்யம் என்னுமிடத்தையும், அதினுடைய அவிஸ்மரணம் ஆநந்தஜநக மென்னுமிடத்தையும், அந்த ஸ்ம்ருதிகாரிதமான பாஹ்ய அநுபாவாபேக்ஷையையும், நிரந்தரமான ஆந்தராநுபவம் அத்ருப்திகரம் என்னுமிடத்தையும்,

# 2.9. எம்மா வீடு அவதாரிகை

ஒன்பதாம் திருவாய்மொழியில் எம்பெருமானுடைய மோக்ஷம் தரும் தன்மையை அநுபவித்த ஆழ்வார், அந்த மோக்ஷ வகைகள் எல்லாவற்றுக்கும் கருமத்துக்கு இடமாவது இறைவனுக்கே வயப்பட்டு இருத்தலே என்று தீர்மானித்து அவன் திருவடிகளோடு ஒத்த ஸம்பந்தமே உரியது என்னும் விஷயத்தையும் அந்த எம்பெருமான் திருவடி விஷயத்தில் விருப்பத்தையும், ஞானத்துக்குத் தக்கதான துதித்தலின் அநுபவத்தில் ஊற்றத்தையும், அநுபவிக்கத்தக்கது அவன் ஒருவனுக்கே இட்டவழக்காயிருத்தல் என்னும் விஷயத்தையும், அதினுடைய மறப்பின்மை மகிழ்ச்சியை உண்டுபண்ணும் என்னும் விஷயத்தையும் அந்த நினைவினால் உண்டான வெளி அநுபவத்தில் விருப்பத்தையும், எப்போதும் மனதில் அநுபவிக்கும் அநுபவம் மனநிறைவின்மையை உண்டு பண்ணும் என்னும் விஷயத்தையும்

அல்பகாலாநுபவத்திலும் அதிசயிதாபிநிவேசத்தையும், அநுபாவ்யவிஷயத்தோடு உண்டான அப்ருதக்ஸித்தி ஸம்பந்தத்தையும், அந்த ஸம்பந்தத்தைக் குலையாமையில் உண்டான அபேக்ஷையையும் அருளிச்செய்து, மோக்ஷ ப்ரதனான ஈச்வரன் ஸன்னிதியிலே மோக்ஷதாத்பர்யத்தை நிஷ்கர்ஷித்து அபேக்ஷித்தருளுகிறார்.

2.9.1 எம்மா வீட்டுத் திறமும் செப்பம்நின்
செம்மா பாதபற்புத் தலைசேர்த் தொல்லை
கைம்மா துன்பம் கடிந்த பிரானே!
அம்மா அடியேன் வேண்டுவ தீதே.

அவ: முதற்பாட்டில் - 'ஸர்வப்ரகாரவிசிஷ்டமான மோக்ஷத்திலும், திருவடிகளோட்டை ஸம்பந்தமே உத்தேச்யம்' என்று அபேக்ஷிக்கிறார்.

---

சிறிது கால அநுபவத்திலும் அடக்கமுடியாத பேரார்வத்தையும் அநுபவிக்கத் தக்க விஷயமான எம்பெருமானோடு உண்டான விட்டுப் பிரியாத ஸம்பந்தத்தையும், அந்த ஸம்பந்தத்தைக் குலையாமையில் உண்டான விருப்பத்தையும் அருளிச் செய்து, வீடு பேற்றைத் தருபவனான எம்பெருமான் ஸந்நிதியில் வீடு பேற்றிலும் அவனுக்கே வயப்பட்டு இருத்தலை நிச்சயித்து வேண்டுகிறார்.

2.9.1. முதற்பாட்டில் - 'எல்லா வகையிலும் சேர்ந்ததான வீடு பேற்றிலும் திருவடிகளோடு ஒத்த ஸம்பந்தமே உரியது' என்று வேண்டுகிறார்.

எவ்வகைப்பட்ட உத்க்ருஷ்டமான மோக்ஷப்ரகாரமும் சொல்லோம்; உன்னுடைய சிவந்த உத்தேச்யமான திருவடித் தாமரைகளைத் தலையிலே கடுகச் சேர்க்க வேணும்; துதிக்கை முழுத்தும்படி அழுந்தின ஆனையினுடைய து:க்கத்தைப் போக்கினமஹோபகாரகனாய், (இவ்வபதாநத்தைக்காட்டி)என்னை அடிமை கொண்ட ஸ்வாமியே! (உனக்கு) அடியேனான நான் (என் ஸ்வரூபத்துக்குத் தகுதியான பலமாக) வேண்டியிருப்பது இதுவே. புருஷன் அர்த்தித்ததன்றோ புருஷார்த்தம் என்று கருத்து. ஒல்லை - சடக்கென, கைம்மா - ஆனை. "ஒல்லை கைம்மா" என்று கூட்டவுமாம்.

---

எவ்வகைப்பட்ட உயர்ந்ததான மோக்ஷவகையும் சொல்லோம்; உனக்கே உரியதான சிவந்த திருவடித் தாமரைகளைத் தலையிலே வேகமாகச் சேர்க்கவேணும்; துதிக்கை முழுவதும் அழுந்தின யானையினுடைய துக்கத்தைப் போக்கின பெருதவி செய்தவனாய், இந்த வியத்தகு செயலைக் காட்டி என்னை அடிமை கொண்ட தலைவனே! உனக்கு அடியனான நான், என் ஸ்வரூபத்துக்குத் தகுதியான பயனாக வேண்டி இருப்பது இதுவே. புருஷனாலே வேண்டப்படுவது அன்றோ புருஷார்த்தம் (உறுதிப்பொருள்) என்று கருத்து. குறிப்பு - மோக்ஷவகைகள் நான்கு; ஸாலோக்கியம் - எம்பெருமானோடு ஒரு உலகில் இருப்பது; ஸாரூப்யம் - அவனது வடிவு போன்ற வடிவை உடைமை; ஸாமீப்யம் - அவன் அண்மையில் இருத்தல்; ஸாயுஜ்யம் - ஒப்பான சுகாநுபவம் உள்ளவனாயிருத்தல். இந்த நான்கு வகைகளை நினைவில் கொண்டுதான் சீயர் மோக்ஷப்ரகாரம் என்ற சொல்லை ஆண்டுள்ளதாகத் தெரிகிறது. ஒல்லை- சடக்கென, கைம்மா-ஆனை. "ஒல்லை கைம்மா" என்று கூட்டவுமாம். 'ஒல்லை தலை சேர்த்து' என்று முதலில் பொருள் கூறி 'ஒல்லை' என்பதை ஆனைக்குச் சேர்த்துச் சொல்லலாம் என்கிறார் சீயர்.

செப்பம்-செப்போம். அன்றியே, 'செப்பம்' என்று -செவ்விதாம் என்றாய், மோக்ஷப்ரகாரம் எல்லாம் செவ்விதாகையாவது - திருவடிகளிலே சேர்த்தி என்றாகவுமாம். 1

2.9.2 ஈதே யானுன்னைக் கொள்வதெஞ்ஞான்றும் என்
மைதோய் சோதி மணிவண்ண வெந்தாய்!
எய்தா நின்கழல் யானெய்த ஞானக்
கைதா காலக் கழிவு செய்யேலே.

அவ: அநந்தரம், இந்த ஸம்பந்த விஷயமான ஜ்ஞாநத்தைத் தந்தருளவேணும் என்கிறார்.

எனக்கு இந்த ருசிஜநகமான கருமை செறிந்த ஒளியை உடைத்தான மாணிக்கம் போன்ற வடிவழகையுடைய என் ஸ்வாமியே! உன்னை நான் எக்காலத்திலும் கொள்ளும் ப்ரயோஜநம் இதுவே; (ஏதென்னில்) பெறுதற்கரிய உன்

---

செப்பம்- செப்போம். அன்றியே, 'செப்பம்' என்று - செவ்விதாம் - என்றாய், வீடுபேற்றின் வகை எல்லாம் செவ்விதாகையாவது திருவடிகளிலே சேர்த்தி என்றாகவுமாம். கொண்டு கூட்டுதல் - எம்மாவீடு என்று தொடங்கி, தலை-ஒல்லை - சேர்த்து; கைம்மா துன்பம் கடிந்த பிரானே! அம்மா அடியேன் வேண்டுவதீதே என்று உரை. 1

2.9.2. பின்னர், திருவடி ஸம்பந்த விஷயமான ஞானத்தைத் தந்தருள வேணும் என்கிறார்

எனக்கு இந்த ஆசையால் உண்டான கருமை செறிந்த ஒளியை உடைத்தான மாணிக்கம் போன்ற வடிவழகையுடைய என் தலைவனே! உன்னை நான் எக்காலத்திலும் கொள்ளும் பயன் இதுவே; ஏனெனில் பெறுதற்கரிய உன்

திருவடிகளை நான் பெறுதற்கு ஈடான தெளிவாகிற ஜ்ஞாநக் கையைத் தரவேணும்; காலவிளம்பம் பண்ணாதே கொள். ஞானத்தைக் கை என்றது, தமக்கு ஆலம்பநமாகையாலே. 2

2.9.3 செய்யேல் தீவினை யென்றருள் செய்யுமென்
கையார் சக்கரக் கண்ண பிரானே!
ஐயார் கண்ட மடைக்கிலும் நின்கழல்
எய்யா தேத்த அருள்செய் யெனக்கே.

அவ: அநந்தரம், அவ்வறிவுக்கு ஈடாக ஆபத்தசையிலும் உன்னை ஸ்தோத்ரம் பண்ணும்படி பண்ணியருளவேணும் என்கிறார்.

(அக்ருத்ய கரணாதிகளான) தீவினைகளைச் செய்யாதே கொள் என்று என் பக்கலிலே க்ருபாகார்யமான நியமநத்தைப் பண்ணுகைக்குறுப்பாய், திருக்கையோடு பொருந்தின திருவாழியையுடையனாய், க்ருஷ்ணனான ஸௌலப்யத்தாலே

திருவடிகளை நான் பெறுதற்கு ஈடான தெளிவாகிற ஞானக்கையைத் தரவேணும்; காலதாமதம் பண்ணாதே கொள். ஞானத்தை - கையென்றது - தனக்கு பற்றாயிருக்கையாலே. 2

2.9.3. பின்னர், அவ்வறிவுக்கு ஈடாக ஆபத்து வேளையிலும் உன்னைத் துதி செய்யும்படி பண்ணியருளவேணும் என்கிறார்.

'செய்யத்தகாத பகவத அபசாரம், பாகவத அபசாரம் முதலான தீவினைகளைச் செய்யாதே கொள்' என்று என் பக்கலிலே கருணையின் கார்யமான நியமனத்தைப் பண்ணுகைக்கு உறுப்பாய் திருக்கையோடு பொருந்தின திருவாழியையுடையவனாய், கண்ணனான எளிமையாலே

உபகரித்தவனே! ஐயாலே நிறைந்த கண்டமானது உக்தி ஸாமர்த்யமில்லாதபடி நிர்விவரமாகிலும் (விரோதி நிவர்த்தகனாய், ஸுலபனாய், ப்ராப்தனான) உன் திருவடிகளை இளைப்பற்று ஏத்தும்படி எனக்கே அஸாதாரணமாக க்ருபை பண்ணியருளவேணும். ஐ - ச்லேஷ்மா. 3

2.9.4 எனக்கேயாட் செய்யெக் காலத்து மென்றுஎன்
மனக்கே வந்திடை வீடின்றி மன்னி
தனக்கே யாக வெனைக்கொள்ளு மீதே
எனக்கே கண்ணனை யான்கொள் சிறப்பே.

அவ: அநந்தரம், காயிகமாயும், மாநஸமாயும், வாசிகமாயுமுள்ள பகவத்சேஷத்வத்தை-கீழ் மூன்று பாட்டிலும் அநுஸந்தித்து, இதில் ப்ரதாநமான ததேகபாரதந்த்ர்யத்தை ப்ரயோஜநதயா நிஷ்கர்ஷிக்கிறார்.

உதவி செய்தவனே! கோழையால் நிறைந்த கழுத்தானது பேசும் ஆற்றல் இல்லாதபடி இடைவெளி இல்லாதிருந்தாலும், விரோதியை அழிப்பவனாய், எளியனாய், அடையத் தக்கவனான உன் திருவடிகளை இளைப்பில்லாமல் ஏத்தும்படி எனக்கே உரியதாகக் கருணை பண்ணியருள வேணும். கொண்டு கூட்டுதல் - தீவினை- செய்யேல் - என்று அருள் செய்யும் என் கையார் சக்கரக் கண்ணபிரானே! என்று தொடங்கி எய்யாதேத்த-எனக்கு அருள் செய் என்று உரை. ஐ-கோழை. 3

2.9.4. பின்னர், மனம், மொழி, மெய் ஆகியவையாயுள்ள எம்பெருமானுக்கு அடிமையாம் தன்மையைக் கீழ் மூன்று பாட்டிலும் சொல்லி இதில் முக்கியமான அவன் ஒருவனுக்கே வயப்பட்டிருத்தலையே பயனாகத் தீர்மானிக்கிறார்.

எல்லாக் காலத்திலும் எனக்கே அடிமை செய் என்று அருளிச்செய்து, (அவ்வளவில் நில்லாதே) என் மனஸ்ஸுக்கே வந்து விச்சேதம் இல்லாதபடி நிரந்தரவாஸம் பண்ணி, (பிறர்க்குமன்றியே, எனக்குமன்றியே; எனக்கும் தனக்கும் கூடவுமன்றியே) தனக்கே பரதந்த்ரனாம்படி என்னை அங்கீகரிக்கும் இதுவே எனக்கு அநுரூபமாக க்ருஷ்ணனை நான் அபேக்ஷிக்கும் ப்ரயோஜநம். சிறப்பு - ப்ரயோஜநம். 4

2.9.5 சிறப்பில் வீடு சுவர்க்க நரகம்
இறப்பில் எய்துக எய்தற்க யானும்
பிறப்பில் பல்பிறவிப் பெருமானை
மறப்பொன் றின்றிஎன் றும்மகிழ் வேனே.

அவ: அநந்தரம், இப்பாரதந்த்ர்ய ப்ரகாசகனான ஈச்வரனை மறவாதொழிகையாகிற உகப்பைப் பெறவேணும் என்கிறார்.

எல்லாக் காலத்திலும் எனக்கே அடிமை செய் என்று அருளிச்செய்து, அவ்வளவில் நில்லாதே என் மனத்தே வந்து இடைவீடு இல்லாதபடி எப்போதும் வாசம் பண்ணி, பிறர்க்குமன்றியே, எனக்குமன்றியே, எனக்கும் தனக்கும் கூடவுமன்றியே, எம்பெருமானுக்கே இட்ட வழக்காம்படி என்னை ஏற்றுக் கொள்ளும் இதுவே எனக்குத் தக்க கண்ணனை நான் வேண்டும் பயன். குறிப்பு - மனக்கே - அத்துச் சாரியை மறைந்தது. சிறப்பு - பயன். 4

2.9.5. பின்னர், இப்படி அவன் வயப்பட்டு இருப்பதை பளிச்சென்று வெளிப்படுத்துபவனான எம்பெருமானை மறவாது ஒழிகையாகிற உகப்பைப் பெறவேணும் என்கிறார்.

இச்சரீரத்தை விட்டவளவிலே (ஆநந்தமாகிற) நன்மையிலேயான மோக்ஷம் (ஸுகாபாஸமான) ஸ்வர்க்கம், து:க்கைகதாநமான) நரகமாகிற இவற்றை தேஹாத் பரனாய்க் கொண்டு போய்க்கிட்டவுமாம். (தேஹம் தான் என்றாய் இவற்றைக்) கிட்டாதே முடிந்து விடவுமாம்; (தனக்குப்) பிறவிக்கு ஹேது இன்றியேயிருக்கச்செய்தே பஹுதாவாக பிறக்கக்கடவனான ஸர்வேச்வரனை (இவ்வவதாரத்தாலே ஆச்ரிதரை நித்யபரதந்த்ரராக்கின குணசேஷ்டிதங்கள்) ஒன்றையும் மறவாதே என்றும் (அவிஸ்மரணத்தால் வந்த) ஆநந்தத்தையுடையேனாக வேணும். கீழ்ப்பாட்டும் இப்பாட்டும் -முன்னிலையன்றியே ஸ்வகதாநுஸந்தானமாயிருக்கிறது. 5

2.9.6 மகிழ்கொள் தெய்வம் உலோகம் அலோகம்
மகிழ்கொள் சோதி மலர்ந்த அம்மானே!
மகிழ்கொள் சிந்தை சொல்செய்கை கொண்டு என்றும்
மகிழ்வுற்று உன்னை வணங்க வாராயே.

---

இவ்வுடலை விட்ட அளவிலே ஆனந்தமாகிற நன்மையிலேயான வீடுபேறு, சுகம்போல் இருப்பதான சுவர்க்கம், துக்கத்துக்கே இருப்பிடமான நரகமாகிற இவற்றை நான் உடம்பைக் காட்டிலும் வேறானவனாய்க் கொண்டுபோய்க் கிட்டவுமாம்; உடல்தான் என்றால் இவற்றைக் கிட்டாதே முடிந்து விடவுமாம்; தனக்குப் (தன்) பிறவிக்குக் காரணமின்றியே இருக்கச்செய்தே,பலவிதமாகபிறக்கக்கடவனானஎம்பெருமானை, இவ்வவதாரத்தாலே அடியார்களை நித்யமாய்த் தனக்கு இட்ட வழக்காக்கின குணங்கள், திருவிளையாடல்கள் ஒன்றையும் மறவாதே என்றும் அம்மறப்பின்மையால் வந்த ஆனந்தத்தை யுடையேனாக வேணும். கீழ்ப்பாட்டும் இப்பாட்டும் -முன்னிலை யன்றியே தனக்குள்ளே செய்கிற நினைவாக இருக்கிறது. குறிப்பு-யானும் -பொருள் கூறவில்லை. தோன்றா எழுவாய். 5

அவ: அநந்தரம், இந்த ஆந்தராநுபவமடியாக பாஹ்ய அநுபவத்தை அபேக்ஷிக்கிறார்.

ஸுகப்ரசுரமான தேவதாவர்க்கம், ஜ்ஞாநப்ரகாச யுக்தமான மநுஷ்ய வர்க்கம், ப்ரகாசரஹிதமான திர்யக் ஸ்தாவரங்கள், (தேஜஸ்விதையால் வந்த) உகப்பை உடைத்தான ஜ்யோதி:பதார்த்தங்களாய்க் கொண்டு {बहु स्याम् (பஹு ஸ்யாம்) என்கிற கணக்கிலே} விஸ்த்ருதனான ஸ்வாமியானவனே! (உன் பக்கல் ஆபிமுக்யத்தாலே) ப்ரீதியுக்தமான நினைவையும், உக்தியையும், க்ரியையும் கொண்டு ஸர்வகாலமும் ஆநந்த நிர்ப்பரனாய்க்கொண்டு(இக்கரணத்ரய வ்யாபாரத்தையுண்டாக்கித் தந்த) உன்னை அநுபவிக்கும்படி எழுந்தருளி வர வேணும். உலோகம் அலோகம் என்று - சேதநா சேதநங்களாகவுமாம். 6

---

2.9.6. பின்னர், இந்த உள் அநுபவம் காரணமாக வெளி அநுபவத்தை - கண்ணால் பார்ப்பது முதலான அநுபவத்தை விரும்புகிறார்.

சுகம் நிறைந்ததான தேவர் கூட்டம், அறிவுத் தெளிவோடு கூடியதான மனிதர் கூட்டம், தெளிவு இல்லாத விலங்கு, தாவரங்கள், ஒளி உடைமையால் வந்த உகப்பை உடைய ஒளிவிடும் பொருள்களாய்க் கொண்டு 'நானே பல வகையாகப் பிறக்கக்கடவேன்' (தை.உ.ஆ) என்கிறபடியே மலர்ந்தவனான தலைவனே! உன் பக்கல் அநுகூலமாய் இருக்கையாலே ஆசையோடு கூடியதான நினைவையும் பேச்சையும் செய்கையையும் கொண்டு எல்லாக் காலமும் மகிழ்ச்சியில் மூழ்கியவனாய்க் கொண்டு நான் இம்மூன்று உறுப்புக்களின் (மனம், உடல், மொழி) தொழிலை உண்டாக்கித் தந்த உன்னை (எம்பெருமானை) நேரில் கண்டு அநுபவிக்கும் படி எழுந்தருளி வரவேணும். 'உலோகம் அலோகம்' என்று அறிவுள்ள பொருள் அறிவில் பொருள் ஆகவுமாம். 6

2.9.7 வாராய் உன்திருப் பாத மலர்க்கீழ்
பேரா தேயான் வந்தடை யும்படி
தாராதாய்! உன்னை யென்னுள் வைப்பிலென்றும்
ஆரா தாய்எனக் கென்றுமெக் காலே.

அவ: அநந்தரம், ஆந்தரானுபவம் ஆராமையாலே ஸவிஷாதமாக பாஹ்யாநுபவாபேக்ஷை பண்ணுகிறார்.

(நித்யாநுபாவ்யனான) உன்னை என் நெஞ்சுக்குள்ளே நிரந்தரமாக வைக்குமிடத்தில் ("அமையும்" என்னாதபடி) எனக்கு அத்ருப்திகரனாய், எல்லா நாளிலும், எல்லாப்போதிலும், (ப்ராப்தனான) உன்னுடைய ச்லாக்யமாய், போக்யமான திருவடிகளிலே பரதந்த்ரனாய்க்கொண்டு விச்லேஷ ரஹிதனாம்படி நான் வந்து கிட்டுகைக்கு அவகாசந்தாராதவனே! நான் அப்படி கிட்டும்படி வந்தருள வேணும். 7

---

2.9.7. பின்னர், மனத்தால் அநுபவிக்கும் அநுபவத்தில் நிறைவு பெறாமையாலே துக்கத்தோடு கூடியதாக வெளி அநுபவத்தில் விருப்பத்தைப் பண்ணுகிறார்.

எப்போதும் அநுபவிக்கத்தக்கவனான உன்னை என் நெஞ்சுக்குள்ளே என்றும் வைக்குமிடத்தில் 'அமையும் (போதும்)', என்னாதபடி எனக்கு நிறைவை உண்டு பண்ணாதவனாய், எல்லா நாளிலும் எல்லாப் போதிலும் உரியனான உன்னுடைய உயர்ந்ததாய் மலர் போன்ற அழகான திருவடிகளிலே வசப்பட்டவனாய்க் கொண்டு பிரிவில்லாதபடி நான் வந்து கிட்டுகைக்கு இடம் தராதவனே! நான் அப்படி கிட்டும்படி வந்தருளவேணும். குறிப்பு: இப்பாட்டுககு சீயர் உரை தனிவழி. 7

2.9.8 எக்காலத் துளந்தையாய் என்னுள் மன்னில்மற்று
எக்கா லத்திலும் யாதொன்றும் வேண்டேன்
மிக்கார் வேத விமலர் விழுங்கும்என்
அக்காரக் கனியே! உன்னை யானே.

அவ: அநந்தரம், 'அத்யல்பகாலாநுபவம் பெறிலும் அதொழிய வேறொன்றும் வேண்டா' என்கிற அத்யபிநிவேசத்தை அருளிச்செய்கிறார்.

அதிசயிதஸ்வபாவராய், வைதிகாக்ரேஸரரான நிர்மலரானவர்கள் (தங்கள் ஆதராதிசயத்தாலே) கபளீகரித்து அநுபவிக்கும் கணக்கிலே எனக்கு அக்காரந்தோய்ந்த கனி போலே போக்யபூதனானவனே! ஏதேனும் அல்ப காலத்திலே யாகிலும் எனக்கு ஸ்வாமியான ஆகாரம் தோன்றும்படி என் நெஞ்சிலே ப்ரகாசிப்பித்து நிற்கப்பெறில் இதொழிய எல்லாக் காலத்திலும்ஏதேனும் ஒன்றையும் உன்னை நான் அபேக்ஷியேன். 8

---

2.9.8. பின்னர், 'மிகவும் சிறிய கால அநுபவம் பெற்றாலும் அவ்வநுபவம் ஒழிய வேறொன்றும் வேண்டா' என்கிற அடக்க முடியாத பேரார்வத்தை அருளிச்செய்கிறார்.

உயர்ந்த தன்மையுடையவர்களாய், வேதத்தைப் பயின்று அதன்படி நடப்பவர்களின் முன்நிற்பவரான குற்றமற்றவர்கள், தங்கள் அதிக ஆசையாலே மொத்தமாக விழுங்கி அநுபவிக்கும்படி எனக்கு சர்க்கரைப்பாகில் தோய்ந்த கனி போலே இனிமையானவனே! ஏதேனும் சிறிது காலத்திலே யாகிலும் எனக்குத் தலைவனான வடிவு தோன்றும்படி, என் நெஞ்சிலே பிரகாசிப்பித்து நிற்கப் பெற்றால் இதொழிய எல்லாக் காலத்திலும் ஏதேனும் ஒன்றையும் உன்னை நான் வேண்டேன்.
குறிப்பு: இப்பாட்டு எம்பெருமானார் பொருளாட்சிக்குச்சேர அமைந்தது.. எக்காலத்தும் சீயர் பாடம். 8

2.9.9 யானே என்னை அறியகி லாதே
யானே என்றனதே என்றிருந்தேன்
யானே நீஎன்னுடைமையும் நீயே
வானே ஏத்தும் எம்வானவரேறே.

அவ: அநந்தரம், ஸம்பந்தம் அப்ருதக்ஸித்தமாயிருக்க, அநாத்யஜ்ஞாநத்தாலே அஹங்கார மமகார தூஷிதனாய் இழந்தேன் என்கிறார்.

நான்தானே என் விஷயத்திலே யாதாத்ம்யஜ்ஞாநம் இல்லாமையாலே நான் ஸ்வதந்த்ரனேயாகவும், என்னை ஒழிந்தவை என் உடைமையாகவும், அஹங்காரமமகாரங்களைப் பண்ணி (முடிந்து போகாதே ஆத்மநித்யத்வமும் அநர்த்தா வஹமாம்படி) இருந்தேன்; (இவ்வறிவுகேடின்றியிலே யாதாத்ம்ய ஜ்ஞாநம் நடையாடும் பரமபதமாக (உன்னுடைய ஸம்பந்தத்தை) ஏத்தும்படி அங்குள்ளார்க்கு

---

2.9.9. பின்னர், ஸம்பந்தம் விட்டுப் பிரியாதிருக்க, வெகு நாளைய அறிவின்மையாலே, நான், எனது என்றதால் கெடுக்கப்பட்டவனாய் இழந்தேன் என்கிறார்.

நான் தானே என் விஷயத்தில் உண்மையான அறிவு இல்லாமையாலே நான் தனித்து இயங்குவபனாகவும், என்னை ஒழிந்தவை என் உடைமையாகவும், அகங்கார மமகாரங்களைப் பண்ணி முடிந்து போகாதே (இறவாமல்) ஆத்மா நித்யமாய் இருக்கும் தன்மையும் அழிவை உண்டுபண்ணும்படி இருந்தேன்; இந்த அறிவு கேடில்லாமல் உண்மையறிவு நடையாடும் பரமபதமாக உன்னுடைய (எம்பெருமானுடைய) ஸம்பந்தத்தை ஏத்தும்படி அங்கு உள்ள நித்யசூரிகளுக்குத்

சேஷியான செருக்குத்தோன்ற இருக்குமவனே! (அர்த்த ஸ்திதி யுணர்ந்தால்) நான் நீயே என்னலாம்படி அப்ருதக்ஸித்த ப்ரகார பூதனாயிருப்பன் என்னுடைமையானவையும் (உனக்கு அப்படி ப்ரகாரமாய்க்கொண்டு) நீயே என்னலாம்படியாயிருக்கும். 9

2.9.10 ஏறேலேழும் என்று ஏர்கொள் இலங்கையை
நீறே செய்த நெடுஞ்சுடர்ச் சோதி!
தேறேல் என்னை உன்பொன்னடிச் சேர்த்து ஒல்லை
வேறே போக எஞ்ஞான்றும் விடலே.

அவ: அநந்தரம், அந்த ஸம்பந்தம் குலையாதபடி என்னைக் கைவிடாதொழிய வேணும் என்கிறார்.

ஏன்று கொண்ட ஏறு ஏழையும் வென்று அழகை உடைத்தான லங்கையை பஸ்மஸாத்கரித்தத்தாலே மிக்க தேஜஸ்ஸையுடைனான உஜ்ஜ்வலவிக்ரஹனே! என்னை (எனக்கு

---

தலைவனான செருக்குத் தோன்ற இருப்பவனே! பொருளின் உண்மை நிலை உணர்ந்தால் நான் நீயே என்னலாம்படி பிரிக்கமுடியாத அடைமொழியாக இருப்பன்; என் உடைமை யானவையும் உனக்கு அப்படி அடை மொழியாய்க் கொண்டு நீயே (எம்பெருமானே) என்னலாம் படியாயிருக்கும். குறிப்பு - அவ்வானவர்- சீயர் பாடம். 9

2.9.10. பின்னர், அந்த ஸம்பந்தம் குலையாதபடி என்னைக் கைவிடாது ஒழியவேணும் என்கிறார்.

முயலுகின்ற எருதுகள் ஏழையும் வென்று, அழகான இலங்கையைச் சாம்பலாக்கியதாலே மிக்க ஒளியை யுடையவனாய்ப் பளபளப்பான திருமேனியை உடையவனே!

நன்மையறிவன் என்று) விச்வஸியாதே உன்னுடைய உஜ்ஜ்வலமான திருவடிகளிலே சடக்கென சேர்த்து (விஷயாந்தரங்களை நினைத்து) வேறு போகும்படி எல்லாக் காலத்திலும் விடாதொழியவேணும். விதிநிர்மிதமான இந்த அந்வயத்தைப் பாலநம் பண்ணி விடாதொழிய வேணும் என்று கருத்து. 10

2.9.11 விடலில் சக்கரத்து அண்ணலை மேவல்
விடலில் வண்குரு கூர்ச்சட கோபன்சொல்
கெடலில் ஆயிரத்துள் இவை பத்தும்
கெடலில் வீடுசெய் யும்கிளர் வார்க்கே.

அவ: அநந்தரம், இத்திருவாய்மொழி மோக்ஷாநந்தப்ரதம் என்று பலத்தை அருளிச்செய்கிறார்.

விடுதலில்லாத திருவாழியையுடைய ஸ்வாமியை

---

என்னை, எனக்கு நன்மையறிவன் என்று, நம்பாமல் உன்னுடைய பளபளப்பான திருவடிகளிலே விரைவாகச் சேர்த்து வேறு விஷயங்களை நினைத்து வேறு உபாயங்களில் போகும்படி எல்லாக் காலத்திலும் விடாதொழிய வேணும் என்கிறார். இயற்கையான உறவான இந்தச் சேர்க்கையைக் காத்து விடாதொழிய வேணும் என்று கருத்து. குறிப்பு - ஏல் ஏறேழும் என்று பிரித்து சீயர் உரை. விஸ்வஸியாதே - வினையெச்சம். 10

2.9.11. பின்னர், இத்திருவாய்மொழி 'பேரின்பமாகிற வீடு பேற்றைக் கொடுக்கும்' என்று பயனை அருளிச்செய்கிறார்

விடுதல் இல்லாத திருவாழியையுடைய தலைவனை

(அப்படியே) மேவி விட க்ஷமரல்லாத மஹோதாரரான ஆழ்வார் அருளிச்செய்ததாய். (இதில் அந்வயித்தார்க்கு) அநர்த்தம் வாராதபடியான ஆயிரத்துள் இவை பத்தும் ஸாதரமாகச் சொல்லவல்லவர்களுக்கு (இதுதானே) அவித்யாத்யநர்த்தகந்தரஹிதமான மோக்ஷாநந்தத்தைப்பண்ணிக் கொடுக்கும். கிளர்தல் - சொல்லுதல்; கிளர்த்தியாய் உத்யோகமாகவுமாம். 11

இது கலிவிருத்தம்

வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர் திருவடிகளே சரணம்

---

அப்படியே - சக்கரத்தை விடாதபடியே - மேவிவிட ஆற்றலற்ற பெரும் வள்ளலாரான நம்மாழ்வார் அருளிச் செய்ததாய், இதில் ஈடுபட்டார்க்குக் கெடுதல் வாராதபடியான ஆயிரம் பாட்டினுள், இவை பத்தும் விருப்பத்தோடே சொல்ல வல்லவர்களுக்கு இந்தப் பத்துப்பட்டு தானே அறிவின்மை, கர்மம் முதலான வாசனைகள் இல்லாததான பேரின்பமாகிய வீடுபேற்றைப் பண்ணிக்கொடுக்கும். குறிப்பு - கிளர்தல் - சொல்லுதல் - மனவீழ்ச்சியடைதல். கிளர்த்தியாய் - தொழிலாகவுமாம். அண்ணல் ஆகுபெயராய் தலைமைத் தன்மையைச் சொல்லிற்று. 11

இது கலிவிருத்தம்

வாதிகேசரி அழகியமணவாளச்சீயர் திருவடிகளே சரணம்.

@@@@@@@@@@@

# 2.10 கிளரொளி ப்ரவேசம்

பத்தாம் திருவாய்மொழியில் - கீழ் புருஷார்த்ததயா நிர்ணீதமான அத்யந்த பாரதந்த்ர்யயுக்தமாயிருந்துள்ள கைங்கர்யத்தை இவர் அபேக்ஷித்தபடியே காலவிளம்பம் பிறவாதபடி இங்கே கொடுத்தருளுகைக்காகத் தெற்குத் திருமலையிலே எழுந்தருளிநிற்கிறபடியை ப்ரகாசிப்பிக்கக் கண்டு அத்யந்த ஹ்ருஷ்டராய்; அழகருடைய ஔஜ்ஜ்வல்யத்தையும், ஆபிரூப்யத்தையும், ஔதார்யத்தையும், ரக்ஷகத்வத்தையும், ரக்ஷணோபகரணவத்தையையும், ஆச்ரித வ்யாமோஹத்தையும், ஆபத்ஸகத்வத்தையும், ஆச்ரித ஆநுகூலதையையும், விரோதிநிரஸநசீலதையையும், ஜ்ஞாந ப்ரதத்வத்தையும் அநுஸந்தித்து, 'ஏவம்விதனான

---

# 2.10 கிளரொளி அவதாரிகை

பத்தாம் திருவாய்மொழியில் - கீழ் உறுதிப் பொருளால் நிச்சயிக்கப்பட்டதான எம்பெருமான் திறத்து இட்டவழக்கோடு கூடியதாயுள்ள கைங்கர்யத்தை ஆழ்வார் விரும்பியபடியே, காலதாமதம் பிறவாதபடி இங்கே கொடுத்தருளுகைக்காக தெற்குத்திருமலையில் (திருமாலிருஞ்சோலையில்) எழுந்தருளி நிற்கிறபடியைத் தெரிவிக்கக்கண்டு மிகவும் மகிழ்ச்சி யடைந்தவராய்; அழகருடைய ஒளியையும், அழகையும், வள்ளன்மையையும் காப்பாற்றும் தன்மையையும், காப்பாற்றுவதற்கு உறுப்பான ஆயுதத்தையும், அடியார் திறத்து மையலையும், ஆபத்திலே தோழனாக உதவும் தன்மையையும், அடியார்கட்கு நன்மை பயக்கும் தன்மையையும், பகைவர்களை அழிக்கும் குணத்தையும், அறிவைக் கொடுக்கும் தன்மையையும் நினைத்து, இப்படிப்பட்டவனான

ப்ராப்யபூதன் தானும் விரும்பும்படியான திருமலையே பரம ப்ராப்யம்" என்று நிஷ்கர்ஷித்து, முதலிட்டு ஐந்து பாட்டாலே திருவுள்ளத்தையும், மேலிட்டு ஐந்து பாட்டாலே லௌகிகரையும் குறித்து அவன் போக்யதையை உபதேசித்து முடித்தருளுகிறார்.

2.10.1 கிளரொளி இளமை கெடுவதன் முன்னம்
வளரொளி மாயோன் மருவிய கோயில்
வளரிளம் பொழில்சூழ் மாலிருஞ் சோலை
தளர்வில ராகி(ச்) சார்வது சதிரே.

அவ: முதற்பாட்டில் - நிரதிசய ஔஜ்ஜ்வல்யவிசிஷ்டனான ஸர்வேச்வரன் விரும்பின திருமலையே ப்ராப்யம் என்கிறார்.

கிளர்ந்து வருகிற ஜ்ஞாநௌஜ்ஜ்வல்யத்துக்கு யோக்யதையுண்டான (யௌவநாரம்பரூபமான) இளமை

---

அடையப்படுமவனானவன் தானும் விரும்பும் திருமலையே (திருமாலிருஞ்சோலையே) உயர்வான அடையுமிடம் என்று நிச்சயித்து, முதலிட்டு ஐந்து பாட்டாலே தன் நெஞ்சையும், மேல் ஐந்து பாட்டாலே உலகத்தாரையும் குறித்து அவன் அழகை உபதேசித்து முடித்தருளுகிறார்.

2.10.1. முதற்பாட்டில் - எல்லையற்ற ஒளியுடன் கூடியவனான ஸர்வேச்வரன் விரும்பின திருமலையே - திருமாலிருஞ்சோலையே அடையவேண்டிய இடம் என்கிறார்.

கிளர்ந்து வருகிற ஞான ஒளிக்குத் தகுதியான யௌவனம் தொடக்கமான இளமை,

(விஷயாந்தரகதமாய்க்) கெடுவதற்கு முன்னே (ஆச்ரிதார்த்தமாக இங்கே எழுந்தருளின பின்பு) வளர்ந்து வருகிற (சீல ஸௌலப்யாதி) குணௌஜ்ஜ்வல்யத்தையுடைய ஆச்சர்ய ரூபனான ஸர்வேச்வரன் பொருந்தி வர்த்திக்கிற திவ்ய ஸ்தாநமாய் வளராநிற்கச்செய்தே இளமையையுடைத்தான பொழில்களாலே சூழப்பட்டு, அத்தாலே 'மாலிருஞ்சோலை' என்று திருநாமமான திருமலையை (ப்ரயோஜநாந்தர ஸம்பந்தமாகிற) தளர்த்தி அற்று ப்ராபிக்குமதுவே சதிர். 'இதொழிய ப்ரயோஜநாந்தரமுண்டு' என்றிருக்கை இளமை என்று கருத்து. 'சேதநர் பால்யத்திலே விவேகாத்மாக்களாய்க் கொண்டு அநந்யப்ரயோஜநராய்ப்பற்றும் இது சதிரிறே' என்று தம் திருவுள்ளத்தைக் குறித்து உரைத்தாராயிருக்கிறது. 1

2.10.2 சதிரிள மடவார் தாழ்ச்சியை மதியாது
அதிர்குரல் சங்கத்து அழகர்தம் கோயில்
மதிதவழ் குடுமி மாலிருஞ் சோலை
பதியது ஏத்தி எழுவது பயனே.

---

வேறு விஷயத்தில் சேர்ந்ததாய்க் கெடுவதற்கு முன்னே, அடியார்களுக்காக இங்கே எழுந்தருளின பின்பு, வளர்ந்து வருகிற சீலம், எளிவந்த தன்மை முதலான குணங்களின் ஒளியை யுடைய வியப்பான ஸர்வேச்வரன் பொருந்தி இருக்கிற திவ்விய இடமாய், வளர்ந்து கொண்டே இருக்கிற இளமையை யுடைய பொழில்களாலே சூழப்பட்டு அத்தாலே 'மாலிருஞ்சோலை' என்று திருநாமமான திருமலையை வேறு பயனோடு கூடிய தளர்த்தியற்று அடைவதுவே சதிர். இந்த மலை ஒழிய வேறு பயன் உண்டு என்று இருக்கை இளிம்பு என்று கருத்து. சேதனர் இளமையில் பகுத்தறிவுடையவராய்க் கொண்டு வேறு பயனில் பற்றற்றவராய் பற்றும் இது சதிரன்றோ' என்று தம் திருவுள்ளத்தைக் குறித்து உரைத்தாராயிருக்கிறது.

அவ: அநந்தரம், அழகருடைய திருமலையோடு சேர்ந்த திருப்பதியை ஏத்துமதே ப்ரயோஜநம் என்கிறார்.

(அர்த்தாநுரூபமாகவும், ஸ்வதோஷத்துக்கு ஈடாகவும் ஒதுக்கி உடம்புகொடுக்கும்) சதிரையுடையராய், இளமையாலே மதி மயக்கிச் செல்லாமை தோன்ற இருக்கும் ஸ்திரீகளுடைய தாழ்ச்சி தோற்ற இருக்கும் உக்திசேஷ்டிதாதிகளை ப்ரீதி பண்ணாதே (ஸம்ச்லேஷஜநிதப்ரீதியாலே) முழங்குகிற ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையுடையராகையாலே நிரதிசய ஸௌந்தர்யத்தை யுடைய அழகருக்கு அஸாதாரண ஸ்தாநமாய், சந்த்ரனானவன் தவழும்படி ஓங்கின சிகாசிகைகளையுடைத்தான திருமலையில் திருப்பதியாகிற ப்ரஸித்தஸ்தலத்தை ஸ்தோத்ரம் பண்ணி உச்ரிதராகையே ப்ரயோஜநம். இதுவும் நெஞ்சு நோக்கி உரைத்தல். 2

---

குறிப்பு - இளமை - இளிம்பு (புதுச்சொல்). சதிர் - பெருமை. தளர்விலராகி - சீயர் பாடம். 1

2.10.2. பின்னர், அழகருடைய திருமலையோடு சேர்ந்த திருப்பதியைப் பல்லாண்டு பாடுவதே பயன் என்கிறார்.

பொருளுக்காகவும், தன் குற்றத்துக்கு ஈடாகவும் ஒதுங்கி உடம்பு கொடுக்கும் ஆற்றலையுடையராய், இளமையாலே மதி மயங்கி உயிர் தரிக்காமை தோன்ற இருக்கும் பெண்களுடைய தாழ்ச்சி தோற்ற இருக்கும் வார்த்தையையும் நடவடிக்கை களையும் நம்பாமல் எம்பெருமானோடு கலத்தலால் உண்டான ப்ரீதியாலே முழங்குகிற ஸ்ரீபாஞ்சசன்னியத்தை உடைய வராகையாலே எல்லையற்ற அழகையுடைய அழகருக்கே உரிய இடமாய், சந்திரன் தழுவும்படி ஓங்கின கொடுமுடி உச்சிகளையுடைத்தான திருமலையில் திருப்பதியாகிற சிறந்த

2.10.3 பயனல்ல செய்து பயனில்லை நெஞ்சே!
புயல்மழை வண்ணர் புரிந்துறை கோயில்
மயல்மிகு பொழில்சூழ் மாலிருஞ் சோலை
அயன்மலை அடைவ ததுகருமமே.

அவ: அநந்தரம், பரமோதாரன் வர்த்திக்கிற திருமலையோடு சேர்ந்த அயல்மலையை ப்ராபிக்கையே கார்யம் என்கிறார்.

நெஞ்சே! ப்ரயோஜநசூந்யமானவற்றைச் செய்து ப்ரயோஜநம் இல்லை; தூறலும் துளியுமான காளமேகம் போலே ஜலஸ்தலவிபாகமற வர்ஷிக்கும் ஸ்வபாவத்தையுடையவர் அபிமுகராய்க்கொண்டு நித்யவாஸம் பண்ணுகிற வாஸ ஸ்தாநமாய், கண்டார் நெஞ்சு கலங்கும்படி தர்சநீயமான பொழில் சூழ்ந்த திருமலையினுடைய அருகின மலையை

---

கோயிலை ஸ்தோத்ரம் பண்ணி உயர்வராகையே பயன். இதுவும் நெஞ்சுநோக்கி உரைத்தல். குறிப்பு - 'அது' அதை- இரண்டாம் வேற்றுமை தொக்கி வந்தது 2

2.10.3. பின்னர், பெருங்கொடையாளி எழுந்தருளியிருக்கிற திருமலையோடு சேர்ந்த அருகில் உள்ள மலையை அடைகையே கார்யம் என்கிறார்.

நெஞ்சே! பயனில்லாதவற்றைச் செய்து பயனில்லை; தூறலும் துளியுமான காளமேகம் போலே நீர் நிலம் என்ற பாகுபாடில்லாது பெய்யும் தன்மைய்யுடையவர் நேர் முகமாய்க் கொண்டு நித்யவாசம் பண்ணுகிற இருப்பிட மானதாய், கண்டார் நெஞ்சு கலங்கும்படி அழகிய பொழில் சூழ்ந்த திருமலையோடு சேர்ந்த மலையை

அடைகையாகிற அதுவே கர்த்தவ்யம் - ஸ்வரூப ப்ராப்தம். 3

2.10.4 கருமவன் பாசம் கழித்துழன்று உய்யவே
பெருமலை எடுத்தான் பீடுறை கோயில்
வருமழை தவழும் மாலிருஞ் சோலை
திருமலை யதுவே அடைவது திறமே.

அவ: அநந்தரம், ரக்ஷகனானவன் வர்த்திக்கிற பெரிய பொழில் சூழ்ந்த திருமலையை ஆச்ரயிக்குமதுவே செய்யக்கடவபடி என்கிறார்.

(பந்தகமான) கர்மங்களாகிற கழற்ற அரிய பாசங்களை கழற்றி (அடிமை செய்து) வ்யாபரித்து, (சேதநர்) உஜ்ஜீவிக்கைக் காகவே (ஆர்த்தமான கோப கோபீஜநங்களுடைய ஆர்த்தி தீரும்படி) பெரிய மலையை எடுத்து ரக்ஷித்தவன் (தன்னுடைய)

---

அடைகையாகிற அதுவே நம் இயல்புக்குறிய செயலாகும். குறிப்பு - பயனல்ல - னகர இறுதி கெட்டுவந்தது. வண்ணர் - தன்மைப்பொருள். தூறலும் துளியும் - சீயர் வார்த்தைப்பாடு. 3

2.10.4. பின்னர், காப்பாளனானவன் எழுந்தருளியிருக்கிற பெரிய பொழில் சூழ்ந்த திருமலையைச் சேர்வதுவே செய்யவேண்டிய செயல் என்கிறார்.

பிறவியை உண்டு பண்ணுவதால் தடங்கலான கருமங்களாகிற நீக்கமுடியாத கயிறுகளை நீக்கி அடிமை செய்து திரிந்து ஆத்மா உய்யும் பொருட்டே துன்பமடைந்த இடையர் இடைப்பெண்களின் வருத்தம் தீரும்படி பெரிய மலையை எடுத்து காப்பாற்றியவன் தன்னுடைய

ரக்ஷணைச்வர்யம் விளங்கும்படி நித்யவாஸம் பண்ணுகிற ஸ்தாநமாய், (வர்ஷோந்முகமாய்) வருகிற மேகங்கள் தவழும்படி மிகவும் உயர்ந்து பரந்த சோலையையுடைத்தான திருமலை தன்னையே அடைவதே செய்யும்படி. மால் - உயர்த்தி. இருமை - பரப்பு. மாலிருஞ்சோலைத் திருமலை என்கையாலே - திருமலையில் சோலையினுடைய ப்ராப்யதை தோற்றுகிறது. 4

2.10.5 திறமுடை வலத்தால் தீவினை பெருக்காது
அறமுய லாழிப் படையவன் கோயில்
மறுவில்வண் சுனைசூழ் மாலிருஞ் சோலை
புறமலை சாரப் போவது கிறியே.

அவ: அநந்தரம், ரக்ஷணோத்யுக்தமான திருவாழியை யுடையவன் வர்த்திக்கிற திருமலையின் புறமலையைக் கிட்டப் போவது நல்விரகு என்கிறார்.

---

காக்கும் செல்வம் விளங்கும்படி எப்போதும் எழுந்தருளி யிருக்கிற இடமாய், மழைபெய்ய வருகிற மேகங்கள் தவழும்படி மிகவும் உயர்ந்து பரந்த சோலையையுடைய திருமாலிருஞ் சோலையை அடைவதே செய்யும்படி. மால் - உயர்த்தி. இருமை -பரப்பு. மாலிருஞ்சோலைத் திருமலை என்கையாலே - திருமலையில் சோலையை அடைவது தோற்றுகிறது. குறிப்பு - மால், இரும்- சோலைக்கு அடைமொழியாக்கி சோலை தான் அடையத்தக்கது என்பது இப்பாட்டு. 4

2.105. பின்னர், காப்பாற்றுவதில் முயலுதலையுடையதான திருவாழியையுடையவன் இருக்கிற திருமலையின் புற மலையைக் கிட்டப்போவது நல்ல உபாயம் என்கிறார்.

நாநாவிதமான பலங்களாலே (அக்ருத்யகரணாதிகளான) கொடிய பாபங்களை வர்த்திப்பியாதே (ஆச்ரிதரக்ஷணமாகிற) தர்மத்திலே உத்யோகத்தையுடைய திருவாழியை ஆயுதமாக வுடையவனுடைய வாஸஸ்தாநமாய், (சைவலகர்த்தமாதிகளாகிற) களங்கமற்று கிட்டினார்க்கு ஸர்வப்ரகாரோபஜீவ்யமான சுனைகளாலே சூழப்பட்ட திருமலையின் புறமலையைக் கிட்டப் போகிறவது நல்விரகு. 5

2.10.6 கிறியென நினைமின் கீழ்மைசெய் யாதே
உறியமர் வெண்ணெய் உண்டவன் கோயில்
மறியொடு பிணைசேர் மாலிருஞ் சோலை
நெறிபட வதுவே நினைவது நலமே.

அவ: அநந்தரம், ஆச்ரிதவ்யாமுக்தன் வர்த்திக்கிற திருமலைக்குப் போகிற வழியையுட்பட நினைக்குமதுவே நன்மை என்கிறார்.

---

பலவிதமான பயன்களாலே செய்யத்தகாதன செய்தல் முதலான கொடிய பாபங்களை வளரச் செய்யாமல் அடியார்களைக் காக்குமதாகிற தர்மத்திலே முயலுதலையுடைய திருவாழியை ஆயுதமாக உடையவனுடைய இருப்பிடமாய் பாசியும் சேறுமாகிற களங்கமில்லாமல், கிட்டினார்க்கு எல்லா முறையாலும் பயனுடையதாய் இருப்பதான சுனைகளாலே சூழப்பட்ட திருமாலிருஞ்சோலையின் புறமலையைக் கிட்டப்போகிறது நல்ல உபாயமாகும். கிட்டுவதிலும் கிட்ட முயலுவது நல்ல உபாயம் என்றபடி. 5

2.10.6. பின்னர், அடியார்களிடம் மையலையுடையவன் இருக்கிற திருமலைக்குப் போகிற வழியை உட்பட நினைக்குமதுவே நன்மை என்கிறார்.

(விஷயாந்தரங்களை நோக்கிப் போக நினைக்கும்) நீசதையைப் பண்ணாதே (இத்தை) நல்விரகு என்று நினையுங்கோள்; (ஏதென்னில்) உறியிலே பொருந்தச் சேமித்து வைத்த வெண்ணெயை அமுது செய்த க்ருஷ்ணனுடைய கோயிலாய், (தன்னுடைய) கன்றுகளோடேகூட மான்பேடைகள் சேருகிற திருமலையினுடைய வழியிலே உட்பட வேணும் என்கிற அத்தையே நினைக்கை புருஷார்த்தம். மறி - குட்டி. பிணை - மான்பேடை. 6

2.10.7 நலமென நினைமின் நரகழுந் தாதே
நிலமுன மிடந்தான் நீடுறை கோயில்
மலமறு மதிசேர் மாலிருஞ் சோலை
வலமுறை எய்தி மருவுதல் வலமே.

அவ: அநந்தரம், ப்ரளயாபத்ஸகன் வர்த்திக்கிற திருமலையில் ஆநுகூல்யமே ப்ரபலம் என்கிறார்.

---

வேறு விஷயங்களை நோக்கிப்போக நினைக்கும் நீசத் தன்மையைப் பண்ணாமல் இத்தை-நான் சொல்லப் போவதை - நல்ல உபாயம் என்று நினையுங்கோள்; என்ன என்றால் - உறியிலே பொருந்தச் சேமித்து வைத்த வெண்ணெயை அமுது செய்த கண்ணனுடைய கோயிலாய், தன்னுடைய கன்றுகளோடு கூட மான் பேடைகள் சேருகிற திருமாலிருஞ்சோலை யினுடைய வழியிலே உட்பட வேணும் என்கிறதையே நினைக்கை உறுதிப் பொருளாகும். மான்-குட்டி, பிணை- மான் பேடை. செய்யாதே - வினையெச்சம். 6

2.10.7. பின்னர், பிரளய ஆபத்திலே தோழனானவன் எழுந்தருளி இருக்கிற திருமாலிருஞ்சோலையில் அனுகூலமாய் இருப்பதே சிறந்தது என்கிறார்.

(பஹிஷ்டராய்) ஸம்ஸாரநிரயத்தில் அழுந்தாதே (இத்தை) பரமப்ரயோஜநம் என்று புத்தி பண்ணுங்கோள்; (ப்ரளயங் கொண்ட) முற்காலத்திலே பூமியை (வராஹவேஷத்தைக் கொண்டு) இடந்தெடுத்தவன் நித்யவாஸம் பண்ணுகிற கோயிலாய், (சிகரங்களிலே தேய்கையாலே) களங்கரஹிதனான சந்த்ரன் பொருந்துகிற திருமலையை (சேஷசேஷிபாவமாகிற) முறைப்பாட்டாலுள்ள ஆநுகூல்யத்தைப்பெற்றுப் பொருந்துகையே பலோத்தரம். 7

2.10.8 வலம்செய்து வைகல் வலங்கழி யாதே
வலம்செய்யும் ஆய மாயவன் கோயில்
வலம்செய்யும் வானோர் மாலிருஞ் சோலை
வலம்செய்து நாளும் மருவுதல் வழக்கே.

அவ: அநந்தரம், ஆச்ரிதாநுகூலனான க்ருஷ்ணன் வர்த்திக்கிற திருமலையிலே நிரந்தராநுகூலவ்ருத்தியே ஸ்வரூபப்ராப்தம் என்கிறார்.

---

வெளிப்பற்றுடையவர்களாய் பிறவியாகிற நரகத்தில் அழுந்தாமல் இத்தை உயர்ந்த பயன் என்று கருதுங்கோள். பிரளயம் கொண்ட முற்காலத்தில் பூமியை வராக வேஷம் கொண்டு ஒட்டு விடுவித்தவன் என்றும் நிலைபெற்று இருக்கிற கோயிலாய், சிகரங்களில் தேய்கையால் களங்கம் நீங்கியவனான சந்திரன் பொருந்துகிற திருமாலிருஞ்சோலையை அடியவன் - தலைவன் என்கிற உறவுமுறைப் பாட்டாலுள்ள நன்மையைப் பெற்று பொருந்துகையே உயர்ந்த பயனாகும். குறிப்பு - வலம்முறை எய்தி - முறைவலம் எய்தி என்று பாடமாய் சீயர் உரை. கொண்டு கூட்டுதல் - நிலமுனமிடந்தான் என்று தொடங்கி, மருவுதலே வலம் என்று உரை. 7

(கரணங்களுக்கு) பலத்தை உண்டாக்கி நிரந்தரமாக அந்த பலத்தை இதர விஷயமாக்கிக் கெடாதே, ஆச்ரிதர்க்கு பவ்யதையாகிற ஆநுகூல்யத்தைப் பண்ணும் க்ருஷ்ணனான ஆச்சர்யபூதனுடைய கோயிலான பரமபதவாஸிகள் அநுகூல வர்த்தி பண்ணும் திருமலையைக்குறித்து, ப்ரதக்ஷிணாதி அநுகூலவ்ருத்தியைப் பண்ணி நிரந்தரம் ஸம்ச்லேஷம் பண்ணுகை ந்யாயம். 8

2.10.9 வழக்கென நினைமின் வல்வினை மூழ்காது
அழக்கொடி அட்டான் அமர்பெருங் கோயில்
மழக்களிற் றினஞ்சேர் மாலிருஞ்சோலை
தொழக்கருது வதே துணிவது சூதே.

---

2.10.8. பின்னர், அடியார்க்கு நன்மை செய்பவனான கண்ணன் எழுந்தருளியிருக்கிற திருமாலிருஞ்சோலையிலே எப்போதும் அவனுக்குத் தகுந்த கைங்கர்யம் செய்வதே அடிமையா யிருக்கும் தன்மைக்கு உரியது என்கிறார்.

பொறிகளுக்கு ஆற்றலையுண்டாக்கி எப்போதும் அந்த ஆற்றலை மற்ற விஷயத்துக்கு இலக்காக்கிக் கெடாமல், அடியார்கட்கு அவர்கள் இட்ட வழக்காயிருக்குமதாகிற நன்மையைப் பண்ணும் கண்ணனான வியப்பானவனுடைய கோயிலான, பரமபதத்திலுள்ளவர்கள் தகுந்த கைங்கர்யம் செய்யும் திருமாலிருஞ்சோலையைக் குறித்து அவனுக்கு உகப்பை உண்டுபண்ணுவதான வலம் வருதல், அஞ்சலி செய்தல் முதலான கைங்கர்யங்களைச் செய்து எப்போதும் அவனோடு கலந்து இருக்கை உரியதாகும். குறிப்பு - <u>ஆயன் மாயவன்</u> என்று சீயர்பாடம். கொண்டு கூட்டுதல் - வலம்செய்து என்று தொடங்கி, ஆயன் மாயவன்கோயில் - வானோர் வலம் செய்யும்-மாலிருஞ்சோலை என்று தொடங்கி, வழக்கு என்று உரை. 8

அவ: அநந்தரம், 'பூதநாநிரஸநம் பண்ணினவன் வர்த்திக்கிற திருமலையைத் தொழவேணும்' என்கிற நினைவில் துணிவு வெற்றிக்கு அடி என்கிறார்.

(கடக்க அரிதாம்படி) ப்ரபலமான பாபங்களிலே முழுகாதே இது ஸ்வரூபாநுரூபம் என்று நினையுங்கோள்; பேயான பெண்ணை நசிப்பித்தவன் பொருந்திவர்த்திக்கும் அஸங்கு சிதமான கோயிலாய், கன்றுகளான ஆனைத்திரள் சேருகிற திரு மலையைத் தொழவேணுமென்கிற நினைவிலே துணிகையே (ஸம்ஸாரத்தை வெல்லுகைக்கு) ஹேது. அழன்-பேய். கொடி-பெண். 9

2.10.10 சூதென்று களவும் சூதும்செய் யாதே
வேதமுன் விரித்தான் விரும்பிய கோயில்
மாதுறு மயில்சேர் மாலிருஞ் சோலை
போதவிழ் மலையே புகுவது பொருளே.

---

2.10.9. பின்னர், 'பூதனையைக் கொன்றவன் இருக்கிற திருமாலிருஞ்சோலையைத் தொழவேணும்' என்கிற நினைவில் துணிவு, பிறவியை வெல்லுவதற்குக் காரணம் என்கிறார்.

தாண்டமுடியாத கொடிய பாபங்களிலே முழுகாதே இது-நான் செய்வது- ஸ்வரூபத்துக்குத் தக்கது என்று நினையுங்கோள்; பேயான பெண்ணை அழித்தவன் பொருந்தி யிருக்கும் பெரிய கோயிலாய், கன்றுகளான யானைக் கூட்டம் சேருகிற திருமாலிருஞ்சோலையைத் தொழவேணும் என்கிற நினைவிலே துணிகையே பிறவியை வெல்லுவதற்குக் காரணமாகும் என்கிறார். அழன்- பேய். கொடி - பெண். குறிப்பு - அழக்கொடி-உவமையாகுபெயர். கொண்டு கூட்டுதல்: வல் வினை மூழ்காது வழக்கென நினைமின்; அழக்கொடி

அவ: அநந்தரம், 'வைதிகஜ்ஞாந ப்ரவர்த்தகன் வர்த்திக்கிற திருமலையிலே ப்ரவேசிக்கிற இது புருஷார்த்தம்' என்று உபக்ரமித்த உபதேசத்தை நிகமித்தருளுகிறார்.

ஸுகரமான அர்த்தஸாதநம் என்று நினைத்துக் களவு காணுதல் பார்த்திருக்க அபஹரித்தல் செய்யாதே, முற்காலத்திலே (கீதோபநிஷதாதிமுகத்தாலே) வேதார்த்தத்தை விவரித்தவன் விரும்பி வர்த்திக்கிற கோயிலாய், மாதிமை உடைத்தான மயில்கள் சேர்ந்து வர்த்திக்கிற, ஓங்கி பரந்த சோலைகளில் பூவானது மலருகிற திருமலையிலே சென்று புகுவதே புருஷார்த்தம். மாதிமை - மென்மை. மாதுறு என்று பேடையோடே சேர்ந்த என்றுமாம். 10

---

யட்டானென்று தொடங்கி, துணிவதே சூது என்று உரை .9

2.10.10. பின்னர், வேதத்தைத் தழுவிய உண்மை அறிவைப் பரப்பினவன் எழுந்தருளியிருக்கிற திருமலையிலே நுழைகிற இது பேறு என்று ஆரம்பித்த உபதேசத்தை முடித்தருளுகிறார்.

பொருள் ஈட்டுவது செய்ய எளிதானது என்று நினைத்துக் களவு காணுதல், பார்த்திருந்தபோதே பறித்தல் செய்யாமல் முற்காலத்திலே கீதை என்னும் உபநிஷத்து முதலானவற்றின் வாயிலாக வேதத்தின் பொருளை விவரித்தவன் விரும்பி எழுந்தருளியிருக்கிற கோயிலாய், மென்மையுடையதான மயில்கள் சேர்ந்து இருக்கிற ஓங்கி பரந்த சோலைகளில் பூவானது மலருகிற திருமலையிலே சென்று சேருவது உறுதிப்பொருள். என்கிறார். மாதிமை - மென்மை. மாதுறு என்று பேடையோடே சேர்ந்த என்றுமாம். மயில் - ஆண் மயில். 10

2.10.11 பொருளென்றிவ் வுலகம் படைத்தவன் புகழ்மேல்
மருளில்வண் குருகூர் வண்சட கோபன்
தெருள்கொள்ளச் சொன்னவோராயிரத்து ளிப்பத்து
அருளுடை யவன்தாள ணைவிக்கும் முடித்தே.

அவ: அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக பகவத் ப்ராப்தியை அருளிச்செய்கிறார்.

(ஆச்ரிதாபிமுக்யம்) ப்ரயோஜநம் என்று இந்த லோகத்தை ஸ்ருஷ்டித்தவனுடைய (தயைக்ஷமௌதார்யாதி) குணப்ரதைவிஷயமாக அஜ்ஞாநகந்தரஹிதராய், விலக்ஷணமான திருநகரிக்கு நிர்வாஹகராய், மஹோதாரரான ஆழ்வார், தத்வஜ்ஞாநமானது (சேதநர்) ஸ்வீகரிக்கும்படி, அருளிச்செய்த அத்விதீயமான ஆயிரத்துள் இப்பத்தும் ஸம்ஸாரத்தை நசிப்பித்து க்ருபா

---

2.10.11. பின்னர், இத்திருவாய்மொழிக்குப் பயனாக அழகர் திருவடி அடைவதை அருளிச் செய்கிறார்.

'அடியார்கள், தன்னிடத்திலே (எம்பெருமான்) விருப்பமுடையவராய் இருக்கையே பயன்' என்று இந்த உலகைப் படைத்தவனுடைய கருணை, குற்றத்தைப் பொறுப்பது, வள்ளல் தன்மை முதலான குணப்பெருமை விஷயமாக' அறிவின்மையாகிற இருள் நீங்கப்பெற்றவராய், பிரிதொன்றுக்கில்லாச் சிறப்பையுடைத்தான ஆழ்வார் திருநகரிக்குத் தலைவராய் உயர்ந்த வள்ளலான நம்மாழ்வார், உண்மை அறிவானது சேதனர்களால் கொள்ளும்படி-விரும்பும்படி அருளிச்செய்த ஒப்பற்றதான ஆயிரம் பாட்டினுள் இப்பத்தும் பிறவியைப் போக்கி அருள்

பரிபூர்ணரான அழகருடைய திருவடிகளை அடைவிக்கும். முடித்து என்று - கர்த்தவ்யங்களைத் தலைக்கட்டி என்றுமாம். 11

இது கலிவிருத்தம்

வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயர் திருவடிகளே சரணம்

---

நிறைவுயுடையரான அழகருடைய திருவடிகளை அடைவிக்கும். முடித்து - அவன் செய்யவேண்டியவைகளைத் தானே தலைக்கட்டி என்றுமாம். கொண்டு கூட்டுதல் - பொருள் என்று தொடங்கி, முடித்து - அருளுடையவன் தாள் அணைவிக்கும் என்று உரை. 11

இது கலிவிருத்தம்

ஆழ்வார் எம்பெருமானார் சீய.ர் திருவடிகளே சரணம்.
வாதிகேசரி அழகியமணவாளச்சீயர் திருவடிகளே சரணம்.
இரண்டாம் பத்து முற்றுப்பெற்றது..

@@@@@@@@@@@@@@@@@@@@@@@@

# பன்னீராயிரப்படியில் கொண்டுகூட்டு முறை

நம்பிள்ளை அருளிய ஈட்டின் பல்வகை உரைத் திறன்களை அறிய மணவாளமாமுனிகள் காலத்தில், அவர் திருப்பேரனாரான சீயர் நாயனாரும், கந்தாடை நாயனாரும் ஈட்டுத்தொடர்களை ஆராய்ச்சி செயதனர். மாமுனிகள் ஆணைப்படி கந்தாடை நாயன் ஈட்டின் அரும்பத விளக்கம் ஒன்று முதன்முதலில் செய்தார் என்று யதீந்த்ர ப்ரணவப்ரபாவம் (ப.93) கூறுகிறது. இந்நூல் இன்று கிடைக்கவில்லை. ஆனால் மாமுனிகள் காலத்துக்குப்பின் தோன்றிய அரும்பதவுரைகளில் அடையவளைந்தான் அரும்பதமும், சீயர் அரும்பதமும் தான் இன்று நிலவி வருகின்றன. அக்காலத்தில் வாழ்ந்த ஆசார்யர்களில் ஆத்தான் சீயர் என்பவர் முன்னே இருந்த அரும்பத விளக்கங்களைத் திரட்டி 'அடையவளைந்தான் அரும்பதம்' என்று ஒரு உரை எழுதினார் என்பதைப் பிள்ளைலோகம் சீயர் அருளிய திருவாய்மொழி நூற்றந்தாதி பாசுர (34) உரையில் காணலாம். இதனைத் தழுவி 'குணக்கரம்பாக்கம் ராமாநுஜ சீயர்' என்பவர் ஒரு புதிய அரும்பதவுரை எழுதியுள்ளார். இதுவே சீயர் அரும்பதம் என்று சொல்லப்படுகிறது. இந்த இரண்டு அரும்பதமும் சே.கி.பதிப்பில் காணப்படுகிறது. திருவாய் மொழிக்கு அமைந்த ஐந்து வியாக்யானங்களில் வாதிகேசரி அழகியமணவாளச்சீயர் அருளிய பன்னீராயிரப்படியில் அமைந்த பாசுரக்கொண்டு கூட்டு அமைப்பை அடைய வளைந்தான் அரும்பத உரைகாரர் தவறாமல் காட்டியுள்ளார். அவற்றுள் அடைவே காட்டிய பாசுரப்பகுதியை விட்டு, மற்ற பாசுரக் கொண்டுகூட்டு முறையை இப்போது இரண்டாம் பத்தில் தமிழாக்கத்தின் கீழ்க் காட்டியுள்ளேன். முதல்பத்தில் கொண்டுகூட்டுதல் முறையை அச்சிடாத குறை தீர இப்போது அவை கீழே கொடுக்கப்படுகிறது.

1.1.1 உயர்வற என்று தொடங்கி தொழுது என் மனனே எழு.

1.1.2 மனனக மலமற என்று தொடங்கி, இனனிலன், மிகுநரையிலன், என்னுயிர் - அவன் துயரறு சுடரடி தொழுதெழு. இப்படிப் பத்துப்பாட்டிலும் கொண்டு கூட்டக் கடவது.

1.1.3 இலனது என்று தொடங்கி நாமே நணுகினம்.

1.1.8 சுரரறிவரு என்று தொடங்கி பரபரன், அரனயன் என ஒரு புரம் மூன்றெரித்து, அமரர்க்கும் அறிவியந்து உலகழித்து அமைத்துளன்.

1.1.10 பரந்த தண் என்று தொடங்கி, பரந்த அண்டமிதெனப் பரந்துளன், நிலவிசும்பொழிவறக் கரந்த சிலிடந்தொறும் இடந்திகழ் பொருள்தொறும் கரந்தெங்கும் பரந்துளன் இவையுண்ட சுரனே.

1.2.1 முற்றவும் வீடுமின்; வீடுசெய்து, உம்முயிர் வீடுடை யானிடை வீடுசெய்ம்மினே.

1.2.7 அடங்கெழில் என்று தொடங்கி, அஃதடங்க ஈசனெழில் என்று உள்ளே அடங்குக.

1.2.11 சேர்த்தடத்தென்குருகூர் என்று தொடங்கி இப்பத்து ஓர்த்த.

1.3.1 பத்துடை அடியவர்க்கு எளியவன், பிறர்களுக்கு அரிய வித்தகன், மலர்மகள் விரும்பும் நம், அரும் பெறல் அடிகள் மத்துறுகடைவெண்ணெய் களவினில் உரைவிடையாப்புண்டு, உரலினோடு இணைந்திருந்து ஏங்கிய எளிவு எத்திறம்.

1.3.2 நிலைவரம்பில பலபிறப்பாய் முதலில கேடில முழுநலம் ஒளிவருமியல்வினன் வீடாம் தெளிதருமதகு நிலைமையை முழுவதும் ஒழிவிலன் இறையோன் அளிவருமருளினோடு அமைந்தே அகத்தனன் புறத்தனன்.

1.3.3 அமைவுடை அறநெறி முழுவதும் உயர்வற உயர்ந்தமை உடை முதல் கெடல் இடை ஒடிவு அற நிலமதுவாம் அமைவுடை அமரரும் யாவையும் யாவரும் தானாம் அமைவுடை நாரணன் மாயையை யாரறிபவர்.

1.3.9 எழுதிசைமுகன் படைத்த நல்லுலகமும் தானும் உந்தித் தலத்திடம் பெற, திரிபுரமெரித்தவன் வலத்தனன். பின்னும் புலப்படத்தானே தன்னுலகத்தில் அகத்தனன் சொலப்புகில் இவைபின்னும் வயிற்றுள, இவையவன் துயக்க.

1.3.11 அமரர்கள் தொழுதெழ அலைகடல் கடைந்தவன் தன்னை அமர்பொழில் வளங்குருகூர்ச்சடகோபன் குற்றேவல்கள் சுவையமராயிரத்தவற்றினுள் இவை பத்தும் வல்லார் உயர்வில் அமரரோடு சென்று நம்பி யஞ்சிறை அறுவர்.

1.4.5 பொழிலேழும் தான் நல்கிக் காத்தளிக்கும், வினையேற்கேதான் நல்கலாகாதோ? நாரணனைக் கண்டக்கால் என்று தொடங்கி, ஓர் வாசகம் கொண்டருளாய்.

1.4.7 என் பிழைக்கும் இளங்கிளியே! யான் வளர்த்த நீயலையே, என்பிழை கோப்பது போல என்று தொடங்கி, திருமாலார்க்குத் திருவடியின் தகவினுக்கு ஏன் பிழைத்தாள்? என்று ஒரு வாய்சொல்.

1.4.9 ஊடாடு பனிவாடாய்! நாடாதமலர்நாடி என்று தொடங்கி, என் செய்வதோ, உரைத்து எனதுடல் ஈராய்.

1.4.11 அளவியன்ற என்று தொடங்கி வளவுரையால் வானோங்கு பெருவளம் பெறலாகும்.

1.5.1 வளவேழுலகின் முதலாய வானோரிறையை அருவினையேன் நினைந்து நைந்து, களவேழ் வெண்ணெய் தொடுவுண்ட என்று தொடங்கி, எந்தாய் என்பன்.

1.5.2 இமையோர் முனிவரும் பலரும் நினைந்து நைந்து, உள்கரைந்து உருகி, புனைந்த கண்ணி நீர் சாந்தம் புகையோடு ஏந்தி வணங்கினால், மாயோனே, நினைந்த எல்லாப் பொருட்கட்கும் என்று தொடங்கி மாசூணாதோ.

1.5.3 மாயோனிகளாய், நடைகற்ற பலரும் வானோர் முனிவரும் யோனிகளை நீ படையென்று நிறை நான்முகனைப் படைத்தவன், எல்லா அறிவுக்கும் சேயோன், திசைகளெல்லாம் தாயோன், தானோருருவனே.

1.5.4 தானோருருவே என்று தொடங்கி, வானோர் பலரும் முனிவரும் மற்றும் முற்றுமாய் தான் தன்னுள்ளே ஓர் பெருநீர் தோற்றி அதனுள் கண்வளரும் வைகுந்தன் வானோர் பெருமான், மாமாயன், எம்பெருமானே.

1.5.6 வினையேன் வினையென்று தொடங்கி, இனைய பெயரினாய் என்று அடியேன் நைவன்.

1.5.8 மாயோனே, முன்னமே உலகேழுமுண்டாய், உமிழ்ந்து சிறுமனிசர் உவலையாக்கை நிலைவெய்தி, மாயையால் புக்கு

வெண்ணெய் உண்டாய், மண்தான் சோர்ந்ததுண்டேலும் என்று தொடங்கி, நெய்யூண்மருந்தோ.

1.5.11 மாலே மாயப்பெருமானே தொடங்கி, இவை பத்தும் வல்லார்க்குப் பரிவதில்லை.

1.6.2 மதுவார் தண்ணந்துழாய் முதுவேத முதல்வனுக்குப் பணி ஏது? என் பணி ஏது/ என்னாததுவே ஆட்செய்யும் ஈடே.

1.6.8 தொண்டீர்கள் கழிமின், கழித்து அவனைத்தொழுமின், தொழுதால் என்று தொடங்கி ஆக்கம் தரும்.

1.6.10 தீயவினைகள் செடியாருமளவைக்கண் கடிவார் அடுபுள் கொடியாக உயர்த்த வடிவார் மாதவனாரே.

1.7.2 அடியரை வல்வினைத்துப்பாம் புலனைந்தும் துஞ்சக் கொடானவன் வைப்பாம், மருந்தாம், எப்பால் எவர்க்கும் என்று தொடங்கி ஆயர் கொழுந்தே.

1.7.4 மயர்வற என்று தொடங்கி என் சொல்லி யான் விடுவேனோ.

1.7.5 என் விளக்கை என்று தொடங்கி, விழிக்கும் பிரானை விடுவேனோ.

1.7.8 என்னை நெகிழ்க்கிலும் என்று தொடங்கி, தானும் இனி கில்லான், பின்னை நெடும்பணை என்று தொடங்கி, முன்னை அமரர் முழுமுதலானே.

1.7.9 அமரர் முழுமுதல் என்று தொடங்கி ஆயர் கொழுந்தை, என் ஆவி அமர அழும்பத்துழாவி அமரத்தழுவற்று, இனி அகலுமோ?

1.8.8 ஆனாயன் ஆனான் தான் மீனோடேனமும் ஆனான், என்னில், தானாய சங்கே.

1.9.1 இவையும் அவையும் உவையும் இவரும் அவரும் உவரும் யவையும் தன்னுள்ளே என்று தொடங்கி, என்னுடைச் சூழலுளானே.

1.9.3 அருகலிலாய என்று தொடங்கி, பூமகளார் தனிக்கேள்வன் என்னோடுடன் ஒரு கதியின் சுவை தந்திட்டு ஒழிவிலன்.

1.9.5 நக்கபிரானோடு அயனும் என்று தொடங்கி, தோற்றிய ஈசன், ஒக்கலை வைத்து என்று தொடங்கி, உண்ட பெருமான் மாயன் என் நெஞ்சினுளானே.

1.10.2 மண்ணும் நீரும் எரியும் நல்வாயுவும் விண்ணுமாய் விரியும் எம்பிரானைக் காதன்மையால் தொழில் கண்ணுக்குள்ளே நிற்கும்; எண்ணிலும் வரும்; இனி என் வேண்டுவம்.

1.10.3 மடநெஞ்சமே! எம்பிரானை என்று தொடங்கி தொழாய்.

1.10.8 செல்வன் நாரணன் என்ற சொல்கேட்டலும் கண் பனி மல்கும். வாடுவன் மாயமே, நம்பி, அல்லும் நன்பகலும் இடைவீடின்றி நல்கி என்னை நம்பி விடான்.

1.10.9 தென்குறுங்குடி நின்ற நிலையை அச்செம்பொனே திகழும் என்று தொடங்கி என் சொல்லி மறப்பனோ.

1.10.10 மறபபும் ஞானமும் என்று தொடங்கி, மன்னினான் தன்னை என் மணியை இனி என் மறப்பனோ?

வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர் திருவடிகளே சரணம்.

# இரண்டாம் பத்தில் சீயர் மேற்கொண்ட வடமொழி மேற்கோள் அகராதி



வாதிகேசரி அழகியமணவாளச்சீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே சரணம்

## ஆசிரியரின் பிற நூல்கள் :

| | | | Rs. |
|---|---|---|---|
| 1. | பன்னீராயிரப்படி ஓர் ஆய்வு | - | 80.00 |
| 2. | வைணவ விளக்கு | - | 30.00 |
| 3. | வைணவ மலர்கள் | - | 40.00 |
| 4. | திருவேங்கடத் திலகம் | - | 60.00 |
| 5. | சிந்து பூ மகிழும் திருவேங்கடம் | - | 25.00 |
| 6. | திருவாய்மொழியில் உபநிடத கருத்துக்கள் | - | 85.00 |
| 7. | A Profile of Sri Vaishnava Acharyas | - | 35.00 |
| 8. | The Voice of Varavara Muni | - | 100.00 |
| 9. | Studies in Sri Vaishnava Literature II | - | 60.00 |
| 10 | பெரியவாச்சான் பிள்ளை | - | 25.00 |
| 11. | ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்ரமும் உரையும் (தமிழ், தெலுங்கு, ஆங்கிலம்) | - | 75.00 |
| 12. | ஆசார்ய ஹ்ருதயம் (நம்மாழ்வாரின் பெண்ணிலைமை) | - | 15.00 |
| 13. | திருவாய்மொழி பன்னீராயிரப்படி உரையும்-தமிழக்கமும் (முதல் பத்து) | - | 120.00 |